# ஒரு பொருளாதார அடியாளின் வாக்குமூலம்

THE WORLD BANK

INTERNATIONAL MONETARY FUND

WORLD TRADE ORGANIZATION

பாகம் 2

''என்றுமே வருங்காலக் கடனாளிகள் பலரைத் தங்களுக்கு கீழ் வைத்திருக்க வேண்டும் என்பதுதான் இன்றைய வங்கியாளர்கள் பணியாக இருக்கிறது. 'நாளை என்ற ஒன்று கிடையாது' என்ற சிந்தனையை எங்கள் வாடிக்கையாளர்கள் மனதில் விதைக்க முயற்சி செய்தோம். எனவே கடன் வாங்கி அதில் பெரிய வீடு, ஆடம்பர வாகனம் என அனைத்தையும் வாங்கி அனுபவிக்குமாறு கூறுவோம் . . .

'நல்ல வாழ்க்கை' அமையப் பெற என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று நாம் அனைவரும் நம்புகிறோம். அது கடன் எனும் புதைகுழியில் நம்மை நாமே புதைத்துக்கொள்வது உட்பட''

ஜான் பெர்கின்ஸ்

தமிழில் : ச. பிரபு தமிழன்

விடியல்

ரூ.140/-



# மொழிபெயர்ப்பாளர் முன்னுரை

தனியார்மய, தாராளமய, உலகமயமாக்கல் கொள்கைக்கு இடம்கொடுத்த அனைத்து உலக நாடுகளின் சமூகப் பொருளாதார நிலை பற்றியும், அவர்களது உழைப்பும், வளங்களும் பன்னாட்டுப் பெருநிறுவனங்களால் சுரண்டப்படுவது குறித்தும், அதற்குத் துணையாக இருந்து தரகு வேலை பார்த்த பொருளாதார அடியாட்கள் பற்றியுமான ஒரு பதிவு செய்யப்பட்ட ஆவணமாகத்தான் ஜான் பெர்கின்ஸ் எழுதிய ஒரு பொருளாதார அடியாளின் வாக்குமூலம் முதல் பாகத்தைப் பார்க்கிறோம். 2004 ஆம் ஆண்டு வெளிவந்த முதல் பாகத்தின் தொடர்ச்சியாக மீண்டும் 2015 இல் நவீன பொருளாதார அடியாட்கள் பற்றியும், அமெரிக்கா பற்றியும், அதே மரணப் பொருளாதாரக் கொள்கையைக் கையிலெடுத்திருக்கும் சீனா பற்றியும் அவர்களது செயல்பாடுகளால் பாதிக்கப்பட்ட நாடுகள் பற்றியுமான பதிவுதான் இந்த இரண்டாம் பாகம்.

முதலாளித்துவத்தின் வளர்ச்சி என்பது ஒரு சுழற்சி முறையில் அமைந்தது. ஒருபுறம் முதலாளி வர்க்கத்தின் தோற்றமும், வளர்ச்சியும் மிகுதியாக இருக்க மறுபுறம் பற்றாக்குறையும், வறுமையும் வளர்ந்து வருவது. இதன்மூலம் தொடர்ந்து தேவைகளை அதிகரிக்கச் செய்து மீண்டும் முதலாளித்துவம் தன்னைப் புதுப்பித்துக் கொள்வது.

சர்வதேச நாணய நிதியம், உலக வங்கி போன்ற பல நிதி நிறுவனங்களின் உதவியில் அடிப்படைக் கட்டுமான வளர்ச்சி, பொருளாதார வளர்ச்சி, தொழில்நுட்ப வளர்ச்சி என்ற பெயரில் ஒரு சமூகத்தின் மனித வளத்தையும், இயற்கை வளத்தையும் நாசமாக்கி சாதிய, வர்க்கப் பாகுபாட்டை நிலைத்திருக்கச் செய்து அதிகாரத்தின் துணையோடு சந்தையை ஆக்கிரமிப்பதுதான் முதலாளித்துவத்தின் முதல் இலக்கு. அதற்கான முக்கியக் கருவி தனிமனிதனை முற்றிலும் கண்காணிப்பதும், அவனது தேவைகள் என்னவென அவனைத் தீர்மானிக்க விடாமல் வழிநடத்தி, அவனுக்குள் போட்டியையும், 'பொறாமையையும் தூண்டி விட்டு சக மனிதனின் வாய்ப்பை அடித்துப் பிடுங்கித்தான் அவன் முன்னேற வேண்டும் என்ற சிந்தனையை அவனுள் வளர்த்துவதும், போலி ஜனநாயகத்தை முன்னிறுத்தி உழைப்புச் சுரண்டலோடு, இயற்கை வளங்களையும் கொள்ளையடிப்பதுமே ஆகும்.

இதற்காக அது நுழைகின்ற எந்தவொரு நாட்டிலும் முதலில் அதிகார அமைப்பைத் தனது அடிமையாக்க வேண்டியது அவசியமாகிறது. கையூட்டுகள் கொடுப்பது, அச்சுறுத்துவது, படுகொலை செய்வது என அனைத்துவிதமான முயற்சிகளும் செய்து எப்படியேனும் அதிகார மையத்தைத் தனக்கு அடிபணியச் செய்து விடுவது பெருநிறுவன முதலைகளின் தரகர்களான பொருளாதார அடியாட்கள் எனும் ஓநாய்கள் செய்கின்ற வேலை. ஆகவே அரசை வழிநடத்துகின்ற, அமைப்புகளை வழிநடத்துகின்ற தலைவர்கள் அனைவரும் எப்படியேனும் இந்தப் பெருநிறுவனங்களின் விசுவாசி களாக மாறிவிடுகின்றனர்.

இதில் பெரிதும் வருத்தப்படவேண்டியது என்னவென்றால் இந்த வகையான அடிமைச் சிந்தனையை மக்களே ஏற்றுக் கொள்வதுதான். "ஒரு கருத்து மக்களைக் கவ்விப் பிடிக்கும்போது அது பௌதீக சக்தியாகிவிடும்" என்பார் கார்ல் மார்க்ஸ். அந்த வகையிலே உலகம் முழுவதுமே முதலாளித்துவத்தை ஏற்றுக்கொண்ட நாடுகள் அனைத்திலும் இந்த அடிமைத்தனமும் மக்களைக் கவ்விப் பிடித்துவிட்டது. இதற்கும் அந்த பெருநிறுவனங்கள்தான்

காரணம். தங்களது தந்திரத்தால் மக்களின் நுகர்வு வெறியைத் தூண்டி மக்களைத் தயார்படுத்துவதோடு அவர்களது பண்பாட்டுக் கூறுகளில் ஆழமாக வேரூன்றிவிட்ட சாதிய, வர்க்கப் பாகுப்பாடுகளை ஆராய்ந்து, அவற்றை வளர்த்தெடுத்து, மிகவும் எளிமையாக மக்களைப் பிளவுபடுத்துகிறார்கள். இதன் மூலம் அவர்களது மனிதநேயத்தையும், சூழலியல் சார்ந்த வாழ்க்கைப் பொருளாதாரச் சிந்தனையையும் மழுங்கடிக்கச் செய்துவிடுகிறார்கள்.

முதலில் இந்தப் பெருநிறுவனங்கள் மலிவான சந்தையை உருவாக்குவதாகக் கூறியே ஒரு நாட்டிற்குள் நுழைகிறது. ஆனால் உண்மையில் அது சார்ந்துள்ள சந்தையில் பற்றாக்குறையை ஏற்படுத்திக் கொள்ளை இலாபம் அடைகிறது.

புதிய தொழில்கள் உருவாவதன் மூலம் வேலையில்லாத் திண்டாட்டம் குறைய வேண்டும். ஆனால் ஒருபுறம் தொழில் வளர்ச்சி என்ற பெயரில் துறைதோறும் அந்நிய நேரடி முதலீடு அதிகரித்துக் கொண்டே இருக்கும். அதே வேளையில் உள்நாட்டு உற்பத்தி வீழ்ச்சி அடைந்து கொண்டே இருக்கும், வேலையில்லாத் திண்டாட்டமும் அதிகரிக்கும். இது எளிய மக்களின் சிந்தனையால் புரிந்துகொள்ள முடியாத முரண். உண்மையில் நடப்பது என்னவென்றால் அப்படியொரு தேக்க நிலையை உருவாக்குவதன் மூலம் போட்டியை அதிகரித்து தனிமனிதனின் உழைப்பை அதிகம் சுரண்டும் வேலையைச் செவ்வனே செய்வதுதான் பொருளாதார அடியாட்களின் தந்திரம்.

அதாவது வேலைப்பழு அதிகம் மற்றும் சரியான ஊதியம் தராமை ஆகிய காரணங்களைக் கூறி ஒருவர் வெளியேறினால் அந்த இடத்தில் அவரைக் காட்டிலும் அதிக நேரம் உழைக்கவும், குறைந்த ஊதியம் பெற்றுக் கொள்ளவும் பலபேர் தயாராக இருக்குமாறு சந்தையை மாற்றுவது. அதேபோல் வளங்கள் குறைவாக உள்ள துறையில் தேவைக்கு அதிகமான தேக்கநிலையை உருவாக்குவது. இந்நிலையில் மக்களின் உழைப்பு சுரண்டப்படுவதே தெரியாமல் பார்த்துக் கொள்வது, அவ்வாறு தெரிந்தாலும் அதை வேறுவழியின்றி ஏற்றுக்கொள்ளச் செய்வது.

மேலும் மக்களின் நுகர்வுத் தன்மையைக் கண்காணித்து அவர்களது கடன் வாங்கும் திறனைக் கணக்கிட்டு இந்த நிறுவனங் களுக்கு விளக்குவதற்காகவே FITCH RATINGS, MOODY'S, STANDARD & POOR'S RATINGS போன்ற பல தனியார் அமைப்புகள் எண்ணற்ற பொருளாதார அடியாட்களை வைத்துக்கொண்டு உலகம் முழுவதும் இயங்கி வருகிறது. கல்விக் கடன், வாகனக் கடன், வீடு கட்டக் கடன் என அனைத்திற்குமான தனிநபர் தகுதியை இவர்களே தீர்மானிக்கிறார்கள், தேவைகள் அதிகரிக்கும் இடத்தில் பற்றாக்குறை ஏற்பட்டால் விளைவு என்னவாகும் ? மக்கள் தொடர்ந்து கடனாளிகளாகவே இருப்பார்கள். தற்சார்பு முற்றிலும் அழிந்து போகும்.

எனவே முதலாளித்துவ சுழற்சி முறையில் சர்வதேச நாணய நிதியம், உலக வங்கி போன்ற மிகப்பெரிய அமைப்புகளின் மூலம் அரசை அடிபணிய வைக்கும் வேலையைப் பொருளாதார அடியாட்கள் பார்த்துக் கொள்வார்கள். மக்களைக் கடனாளியாக்கி இதை ஏற்றுக்கொள்ளும் வேலையை அதிகாரம் பார்த்துக் கொள்ளும். நுகர்வுவெறி அதிகமாகி மீண்டும் முதலாளித்துவம் வளரும்.

முதல் பாகத்தில் சொல்ல முடியாத தீர்வுகளை 11 வருடங்களாக ஆய்வு செய்து இரண்டாம் பாகத்தில் கூறியிருக்கிறார் ஜான் பெர்கின்ஸ். இதில் மரணப் பொருளாதாரத்திலிருந்து

மீள்வதற்கு மாணவர்கள், தொழிலாளர்கள், முதலாளிகள், நடுத்தர வயதினர், ஓய்வு பெற்றோர் என அனைவருக்குமான சமூக நடைமுறை முன்வைக்கப்படுகிறது.

ச.பிரபு தமிழன்

## அத்தியாயம் 1 - சதி செய்து எனது உணவில் நஞ்சு கலக்கப்பட்டதா?

ஒரு பொருளாதார அடியாளின் வாக்குமூலம்" முதல் பதிப்பு வெளியான நாளிலிருந்து நிலைமை மேலும் மோசமடைந்து விட்டது. பன்னிரண்டு வருடங்களுக்கு முன், என்னுடைய அந்தப்புத்தகம் மக்களை விழிப்படையச் செய்யும் என்றும் அவர்களை ஊக்கமடையச் செய்து நிலைமையை அப்படியே மாற்றிவிடும் என்றும் எதிர்பார்த்தேன். அதில் கூறப்பட்ட உண்மைகள் அனைத்தும் வெளிப்படையானது. நானும், என் போன்றவர்களும் இணைந்து பெருநிறுவனத்துவத்தை ஆதரிக்கும் பொருளாதார அடியாட்கள் கூட்டத்தை உருவாக்கினோம். பொருளாதார அடியாட்கள், பெருநிறுவன அதிபர்கள், வால்ஸ்ட்ரீ ட்டிலுள்ள திருட்டு முதலாளிகள், அரசுகள், குள்ள நரிகள் மற்றும் உலகம் முழுவதும் அவர்களது பிணையத்தில் உள்ளவர்கள் என இணைந்து அனைத்து மக்களையும் தோல்வியடையச் செய்யும் ஒரு உலகப் பொரு ளாதாரக் கொள்கையை உருவாக்கினார்கள். இந்தப் பொருளாதாரக் கொள்கை போர் அல்லது போர் குறித்த அச்சம், கடன், பூமியின் வளங்களைக் கொள்ளையடிக்கின்ற பொருள்முதல் வாதத்தின் உச்சம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்து தன்னைத் தானே அழித்துக்கொண்டிருக்கும். இறுதியில் இத்தகைய மரணப் பொருளாதாரக் கொள்கைக்கு பெரும் பணக்காரர்களும் பலியாவார்கள்.

நம்மில் பெரும்பாலானோர் பெரியளவில் இதற்குள் அகப்பட்டு விட்டோம். நாம் பெரும்பாலும் சுயநினைவற்று விளங்கும் கூட்டுப் பணியாளர்கள். இது மாற்றத்திற்கான நேரம். இத்தகைய நிலவரங்களை வெளிப்படுத்தியதன் மூலம் மக்களை விழிப்படையச் செய்து, 2016 இல் ஒரு இயக்கத்தை ஊக்குவித்து அதன்படி ஒரு புதிய பார்வையைத் தோற்றுவித்து அது ஒரு புதிய சூழ்நிலையையே உருவாக்கும் என்று நம்பினேன்.

உண்மையில் மக்களும் விழித்து எழுந்தார்கள். குறிப்பிட்ட இடங்களில் நடைபெற்ற ஆக்கிரமிப்பு இயக்கங்கள், ஐஸ்லாந்து, ஈக்குவேடார், கிரீஸ் போன்ற பல்வேறு இடங்களில் தேசிய அளவில் நடைபெற்ற நடவடிக்கைகள், பிராந்திய அளவில் நடைபெற்ற ஆரேபிய புரட்சி அலை, இலத்தீன் அமெரிக்காவில் 'ஆல்பா' என்றழைக்கப்படும் பொலீவிய அமெரிக்கக் கூட்டமைப்பு ஆகியவை நம் உலகம் வீழ்ச்சியடைந்து கொண்டிருப்பதை நாம் உணர்ந்து விட்டோம் என்பதைக் காட்டுகிறது.

- பொருளாதார அடியாட்கள் முறையிலும், மரணப் பொருளாதாரக் கொள்கையைக் காக்கவும், வளர்த்தெடுக்கவும் வேண்டிய உறுதியான தீர்மானங்களிலும் ஏற்பட்ட ஒரு தொய்வைத்தான் நான் எதிர்பார்க்க வில்லை. மேலும் முற்றிலும் புதியதோர் வகுப்பைச் சேர்ந்த பொருளாதார அடியாட்கள் மற்றும் குள்ள நரிகள் உருவாவார்கள் என்றும் நான் எதிர்பார்க்கவில்லை.

பொருளாதார அடியாட்கள் முறையைக் கொண்டு யாரோ சில கொடிய, சட்டத்திற்குப் புறம்பான, சிறியக் குழுவால் தீட்டப்பட்ட இரகசியத் திட்டத்தில் உலகைக் கட்டுப்படுத்த முடியும் என்பதில் எனக்குச் சிறிதும் நம்பிக்கையில்லை என்பதை எனது மூலப் புத்தகத்தில் நான் தெளிவாக எழுதியிருந்தேன். சுருக்கமாகச் சொன்னால் ஒன்றுபட்ட சிலர் செய்யும் மகத்தான கூட்டுச் சதியில் ' எனக்கு நம்பிக்கையில்லை எனலாம்.

அதன் பிறகு சில புதிர்கள் நடந்தது.

மார்ச் 2005 இன் பிற்பகுதியில், அந்தப் புத்தகம் வெளியிடப் பட்டு ஐந்து மாதங்களுக்கும் குறைவாக ஒரு திங்கட்கிழமை நான் நியூயார்க் நகர் சென்றேன். அடுத்த நாள் நான் ஐக்கிய நாடுகள் சபையில் பேசுவதாக இருந்தது. எனக்குத் தெரிந்த வரையில் நான் முழு உடல்நலத்துடன் இருந்தேன். தனிப்பட்ட பத்திரிக்கையாளனாகத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட ஒரு நபர் என்னுடன் ஒரு நேர்காணல் வேண்டுமென எழுத்துப் பணிக்காக என்னுடன் இருக்கும் உதவியாளரை தொடர்ந்து துரத்திக் கொண்டிருந்தார். அவனது ஆவணங்கள் தெளிவாக இல்லாததாலும், அந்த நேரத்தில் பல பத்திரிக்கைகள் என்னைத் தேடி வந்ததாலும் அவனைத் தவிர்த்து வந்தாள் எனது உதவியாளர். ஆனால் அவன் என்னை லா கார்டியா விமான நிலையத்திற்கு வந்து வரவேற்று, மதிய உணவிற்கு அழைத்துச் சென்று, அங்கிருந்து நான் தங்கியிருக்கும் நண்பரின் அடுக்கு மாடிக் குடியிருப்பில் இறக்கி விடுவதாகக் கூறினான். என்னோடு இதுபற்றி எனது உதவியாளர் வந்து கலந்தாலோசித்தாள். பிறகு நானும் அதற்கு ஒப்புக் கொண்டேன்.

நான் விமான நிலையத்திலிருந்து வெளியே வரும் போது எனக்காக அவன் காத்துக் கொண்டிருந்தான். அங்கிருந்து ஒரு சிறிய உணவகத்திற்கு அழைத்துச் சென்றவன், ஒரு பொருளாதார அடியாளாக அமைந்த எனது வாழ்க்கையைப் பற்றிய சில வழக்கமான கேள்விகளை மட்டும் கேட்டுவிட்டு அன்று மாலை வெஸ்ட்சைடில் இருக்கும் எனது நண்பரின் குடியிருப்பில் வந்து இறக்கிவிட்டான்.

அந்த நபரை நான் திரும்ப சந்திக்கவேயில்லை. ஆனால் இரண்டு மணி நேரங்களுக்குப் பிறகு எனது வயிற்றில் ஏற்பட்ட கடுமையான இரத்தக் கசிவைச் உணர்ந்ததைத் தவிர அவனுடனான எனது சந்திப்பு மட்டும் மறக்க முடியாதது. எனது உடலின் பாதியளவு இரத்தத்தை இழந்த நான் மயக்க நிலைக்குச் சென்றதால் லெனாக்ஸ் ஹில் மருத்துவமைனயில் அனுமதிக்கப்பட்டேன். அங்கே இரண்டு வாரங்கள் அனுமதிக்கப்பட்டிருந்தபோது 70 சதவிகிதமான எனது பெருங்குடல் வெளியேற்றப்பட்டது.

அதிகமான வேலைப் பளுவினால் எனக்கு ஏற்பட்ட உடல்நலக் கோளாறு எனவும், நான் சிறிது நிதானமாக இருக்க வேண்டிக் கிடைத்த தகவலாகவும் இருக்கலாம் என்றும் அங்கே நலம் பெற்றவாறு படுக்கையில் இருந்தபோது எண்ணினேன். மேலும் எழுதுவதையும், பேசுவதற்கான பயணங்களையும் தவிர்த்துக்கொள்ள வேண்டியதாகியது.

நான் கடுமையான சளிப்படலப் பிதுக்கத்தினால் பாதிக்கப் பட்டிருப்பதாக நியூயார்க்கிலுள்ள குடலியல் மருத்துவர் கூறினார். எனது பெருங்கவலையான புற்று நோய் குறித்த எந்த அறிகுறியும் இல்லை என்று ஃப்ளோரிடாவிலுள்ள எனது மருத்துவர் கூறிவிட்டார். மேலும் எனக்கு உள்ளது சளிப்படலப் பிதுக்கம்தான் என்றும் "பெரும்பாலும் உங்கள் வயதுக்காரருக்கு

வரக்கூடியதுதான்' என்றும் கூறியதோடு ஐந்து வருடங்களுக்குப் பிறகு சந்திக்குமாறு ஆலோசனையும் சொல்லி அனுப்பினார்.

பல ஊடக நிகழ்வுகளைப் போலவே எனது ஐ.நா மன்றப் பேச்சும் இரத்தானது. எனது அறுவை சிகிச்சை பற்றிய தகவல் வேகமாக வெளியே பரவியது. பல மின்னஞ்சல்கள் எனக்கு வந்து குவிந்தது. பலர் என்னை ஆதரித்ததோடு நான் விரைவில் குணமடைய வேண்டி விரும்புவதாகவும் தெரிவித்தனர். தேச விரோதச் செயல்களில் ஈடுபட்டதாகக் கூறி என்னை வசை பாடியவர்களிடமிருந்தும் சில மின்னஞ்சல்கள் வந்தன. எனக்கு நஞ்சு வைத்திருக்கலாம் என்று பலரும் உறுதியாக நம்பினர்.

நான் எனது குடலியல் மருத்துவரிடம் கேட்டபோது, "அவ்வாறு நடந்திருக்க வாய்ப்பில்லை" என்று நம்பியபோதும், உறுதியாக இல்லை என்று மறுக்க முடியாததாகவும் கூறினார். எப்படியோ எல்லோரும் சேர்ந்து என்னை சதிகளைப் பற்றி மீண்டும் நினைக்கவும், வாசிக்கவும் வைத்துவிட்டார்கள்.

பெரிய அளவிலான சதியில் இப்போதும் எனக்கு நம்பிக்கை யில்லை. என்னுடைய அனுபவத்தில் தனிப்பட்ட நபர்கள் சேர்ந்த இரகசிய சபையானது சட்டத்திற்குப் புறம்பான, உலகையே ஆட்டிப்படைக்கும் தீர்மானங்களை நிறைவேற்றியதாக எந்த நிகழ்வுகளும் நடந்ததில்லை. இருப்பினும் பொருளாதார அடியாட்கள் முறையின் பலமானது பல சிறிய சதித்திட்டங்களைத் தூண்டிவிடக் கூடியது. சிறிய அளவில் என்று நான் குறிப்பிடுவது அவை குறிப்பிட்ட நோக்கங்களில் கவனம் செலுத்தும். அப்படிப்பட்ட சதிகளும், சட்டத்திற்குப் புறம்பான காரியங்களைச் சாதிப்பதற்கான இரகசிய நடவடிக்கைகளும் எனது பள்ளி நாட்களின் துவக்கத்திலேயே நடந்தது. 1953 இல் சிஐஏ என்ற அமெரிக்க உளவுத்துறையின் அரசியல் பலாத்காரத்தின் மூலம் ஜனநாயகத்தின் வாயிலாகத் தேர்ந்தெடுக்கப் பட்ட இரானியப் பிரதமர் மொசடேக்கை நீக்கிவிட்டு அந்த இடத்தில் ஷாவை நியமித்தது. பிறகு 1963 இல் சிஐஏ ஆதரவு பெற்ற பிக்ஸ் வளைகுடா கியூபா மீது படையெடுத்தது என்று எனது உயர்நிலைப் பள்ளிக் காலங்களிலும் அவர்கள் தொடர்ந்தார்கள். ஆனால் அவர்களைப் பற்றி நான் நன்கு அறிந்து கொண்டது ஒரு பொருளாதார அடியாளாக இருந்தபோதும், 1981 இல் எனது வாடிக்கையாளர்களான ஈக்குவடாரைச் சேர்ந்த ரோல்டோசையும், பனாமாவைச் சேர்ந்த டோரிஜோசையும் படுகொலை செய்ய சிஐஏ ஏற்பாடு செய்தபோதும் தான். பிறகு 2002இல் இதன் மூலப் புத்தகத்தை நான் எழுதத் துவங்கிய போது அமெரிக்காவின் வழிகாட்டுதலின்படி சதி செய்யப்பட்டு வெனிசூலா அதிபர் ஹூகோ சாவேழை பதவியிலிருந்து தூக்கியபோது. அதன் பிறகு ஈராக்கில் ஒரு பேரழிவை ஏற்படுத்தக் கூடிய ஆயுதங்கள் பற்றிய சதிகாரப் பொய் அம்பலமான போது. இதைத் தொடர்ந்து மத்தியக் கிழக்கு மற்றும் ஆப்பிரிக்க நாடுகளின் அரசுகள் மற்றும் தலைவர்களுக்கு எதிராக வணிக நடவடிக்கை எடுப்பதற்கான சதிகள் நடந்த போதும் தான்.

நான் ஒரு பொருளாதார அடியாளாக இருந்தபோது அமெரிக்கா மற்றும் பன்னாட்டு நிறுவனங்கள் ஆகியவற்றின் தொடர்ந்த ஆர்வத்தின் விளைவாக பொருளாதார வளர்ச்சியடைந்த நாடுகளில் அரசியல் தலைவர்களைக் கொலை செய்வது அல்லது பதவியிலிருந்து தூக்கியெறிவது மற்றும் அவற்றின் வளங்களைக் கொள்ளையடிக்க எங்கள் நிறுவனங்களைச் செயல்படுத்துவது ஆகியவைதான் பெரும்பாலான சதிகளின் இலக்கு. எனது பெருங்குடல் அறுவை சிகிச்சைக்குப் பிறகு பல்வேறு அறிக்கைகளை வாசித்தவாறு மிகவும்

சோம்பலாக எனது வீட்டைச் சுற்றி வந்தபோது இந்தோனேசியா, பனாமா, எகிப்து, ஈரான், சௌதி அரேபியா, மற்றும் பல நாடுகளில் நான் பயன்படுத்திய கருவிகள் இப்போது ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் பயன்படுத்தப்பட்டு வருவது வெளிப்படையாகத் தெரிந்தது. செப்டம்பர் 11 நிகழ்வுக்குப் பிறகான தீவிரவாத அச்சுருத்தலிலிருந்து பாதுகாக்கும் அரணாக அகில உலக நிறுவனங் களைக் கட்டுப்படுத்தும் பெரும் பணக்காரர்களுக்கு அதிகப்படியான அதிகாரங்களை வழங்கியது இந்தச் சதிகள். இதில் மிகவும் வன்மையானது உலகம் முழுவதிலுமுள்ள நாடுகளின் அரசுகள் மீது நடைமுறையில் ஆட்சியின் தலைமை உரிமையை ஏற்றுக்கொள்வதாகக் கருதும் விதமாகப் பன்னாட்டு நிறுவனங்களை வலுப்படுத்தச் செய்யும் நாப்தா, காப்தா மற்றும் சமீபத்திய ட்ரான்ஸ் பசிபிக் கூட்டணி, ட்ரான்ஸ் அட்லாண்டிக் வணிகம் மற்றும் முதலீடுக்கான கூட்டணி போன்ற இலவச "வணிக ஒப்பந்தங்கள் ஏற்பாடு செய்வது ; அரசியல்வாதிகளைச் சமரசம் செய்து செல்வந்தர்கள் வரி செலுத்துவதைத் தவிர்க்கும் விதமாகச் சட்டங்களை இயற்றச் செய்வது, ஊடகங்களைக் கட்டுப்படுத்துவது மற்றும் ஊடகங்களைப் பயன்படுத்தி அரசியல் செல்வாக்கு அடையச் செய்வது, மற்றும் முடிவில்லா யுத்தங்களில் சண்டையிட்டுக் கொள்ள அமெரிக்கக் குடியுரிமைவாதிகளை அச்சுறுத்துவது போன்றவைதான்.

மேலும் பல சதிகளும் சேர்ந்து பொருளாதார அடியாள் முறையை 1970 இல் இருந்ததைக் காட்டிலும் அதிக தொலைவில் இட்டுச் சென்றது. நான் எவ்வளவோ எழுதியிருந்தாலும், மறைமுகமாக நடக்கும் பலவற்றை நான் எழுதத் தவறிவிட்டேன் என்பதையும் நான் ஒப்புக் கொள்ள வேண்டும். பழைய திட்டங்கள் மேலும் கூராக்கப் பட்டதுடன், புதியதாகவும் பல திட்டங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இருப்பினும் இந்த முறையின் இதயமாக விளங்கும் கடன்கள் மூலம் மக்களை அடிமைப்படுத்தி, அச்சத்தில் முடக்கி வைக்கும் பொருளாதார, அரசியல் சித்தாந்தம் மட்டும் அப்படியே இருக்கிறது. நான் பணியில் இருந்த நாட்களில், பெரும்பாலான அமெரிக்கர்களையும், மற்ற நாட்டினைச் சேர்ந்தவர்களையும் நாசகார பொதுவுடைமைவாதி களிடமிருந்து அவர்களைக் காப்பாற்றுவதாகவும் அதனால் அவர்களது அனைத்து நடவடிக்கைகளும் ஞாயமானது என்றும் நம்ப வைத்தார்கள். தற்போது அந்த அச்சம் இசுலாமிய தீவிரவாதிகள் மீதும், புலம்பெயர்ந்தவர்கள் மீதும், பெருநிறுவனங்களுக்கு அச்சுறுத்தலாக இருப்பவர்கள் மீதும் திரும்பியுள்ளது. அவர்கள் கடைபிடித்து வந்த மரபு அப்படியேதான் இருக்கிறது. ஆனால் அதன் தாக்கம் தற்போது பன்மடங்கு அதிகரித்திருக்கிறது.

அந்த நடவடிக்கையிலிருந்து மீண்டு வந்ததும் கூட என்னைப் பெரும் குற்ற உணர்ச்சிக்கு ஆளாக்கியது. தொடர்ந்து நான் இலஞ்சம் கொடுத்த, அச்சுறுத்திய தலைவர்களின் நினைவுகள் வருவதால் நள்ளிரவில் விழித்துக் கொள்கிறேன். ஒரு பொருளாதார அடியாளாக இருந்த என்னுடைய கடந்தகால வாழ்க்கையை என்னால் எளிதாக மறக்க முடியவில்லை .

பத்து வருடங்கள் அந்தப் பணியில் எதற்காக இருந்தேன் என்று என்னை நானே கேட்டிருக்கிறேன். பிறகுதான் அதிலிருந்து வெளி வருவது எவ்வளவு கடினமானது என்பதை உணர்ந்தேன். இது வெறும் பணத்தை வாரிச் சுருட்டுவது, விமானத்தில் முதல் வகுப்பில் பயணம் செய்வது, பெரிய நட்சத்திர விடுதியில் அறையெடுத்துத் தங்குவது மற்றும் பல விதமான சலுகைகளை அனுபவிப்பது ஆகியவை மட்டுமல்ல. என்னுடைய முதலாளிகளும், மெய்ன் நிறுவனத்தில் பணியாற்றிய சக ஊழியர்களும் எனக்குக் கொடுத்த அழுத்தமும் அல்ல. இது நான் செய்து கொண்டிருந்த வேலையின் பிரதிபளிப்பு, பொருளாதார அடியாள் என்ற எனது தலைப்பு - எனது பண்பாட்டின் கதை. நான் எதைச் செய்ய வேண்டுமென்று பயிற்றுவிக்கப்

பட்டேனோ அதைச் செய்து கொண்டிருக்கிறேன், நான் செய்வது சரியென்றே எனக்குச் சொல்லப்பட்டது. நான் ஒரு அமெரிக்கனாக இருக்கவே கற்பிக்கப்பட்டேன். அமெரிக்காவைச் சந்தைப்படுத்துவதே அந்தக் கல்வியின் ஒரே வேலை. மேலும் பொதுவுடைமைவாதிகளின் ஆட்சிகள் நம்மை அழிக்கக் காத்திருக்கிறது என்று கூறி அனைவரையும் நம்ப வைக்க வேண்டும்.

எனது தொடக்கப்பள்ளியின் ஆண்கள் கழிவறைக்கு வெளியே ஒருவன் தொங்கவிடப்பட்டது போன்ற சுவரொட்டியின் புகைப்படத்தை ஒரு நாள் நண்பன் ஒருவன் எனக்கு மின்னஞ்சலில் அனுப்பினான். விளம்பரமான அது "உங்கள் கழிவறை போல்ஷ்விக்குகளை உருவாக்குகிறதா?" என்று ஒரு மனிதன் கடுமையாகக் கேட்பதுபோல் சித்தரிக்கப்பட்டிருந்தது. (டவல்ஸ் என்ற ஸ்காட் செய்தித்தாளின் விளம்பரம். (மேலும் அதன் கீழ் எழுதப்பட்டிருந்த வாசகத்தில் "தொழிலாளிகளின் நலன் கருதிப் போதுமான வசதிகளைச் செய்யத் தவறும் நிறுவனத்தின் மீது அவர்கள் மதிப்பிழக்கிறார்கள்" என்று இருந்தது. அமெரிக்கப் பொருளை வாங்காமல் இருப்பது தேசத் துரோகத்திற்கு இணையானது என்ற வலுவான செய்தியை அது பதிவு செய்தது.

அந்தப் புகைப்படம் என் வாழ்வின் மிக முக்கியமான வருடங்களை நினைவுகொள்ளச் செய்தது. சோவியத் யூனியன் தனது முதல் விண்கலமான ஸ்புட்னிக்கை ஏவிய பிறகு அணு ஆயுதப் போரை எதிர்கொள்ளப் போகிறோம் என்பதை நாங்கள் அனைவரும் உணர்ந்தோம். வாராந்திரப் பயிற்சிகளின்போது நாங்கள் கற்பனை செய்து வைத்திருந்த சோவியத் ஏவுகணைகளின் தாக்குதல்களால் எழும்பும் உறைய வைக்கும் அலறல் சத்தங்கள் எங்களை ஒரு வித உளவியல் சிக்கலுக்கு ஆளாக்கி மேசைக்கடியில் சென்று ஒளிந்து கொள்ளச் செய்தது.

## அத்தியாயம் 2 - ஒரு குள்ளநரி பேசியது: சேய்க்கெல்லஸ் சதி

எனது பருவ வயதின் பெரும்பாலான காலகட்டங்களில் நான் ஒரு தற்காப்புக் கலைஞனாக இருந்தேன். 1999 ஆம் வருடத்தில் தெற்கு ஃபுளோரிடா மாகாணத்தில் உள்ள என் வீட்டின் அருகே சங் யங் லீ என்ற கொரிய ஆசிரியரிடம் பதினைந்து ஆண்டுகளாக பயிற்சி பெற்று வந்தேன். ஒருநாள் மாலை வகுப்பு முடிவதற்கு சற்று முன்பு ஒரு புதிய ஆள் எங்கள் பயிற்சி மையத்திற்குள் வந்தான். ஆறடி உயரம் இருந்த அவன் ஒரு தடகள வீரருக்கு உண்டான சுறுசுறுப்புடன் நடந்து வந்தான். அவன் நட்புடன் சிரித்தாலும், ஏதோ ஒரு வகையில் அச்சத்தைத் தூண்டும் விதமாக இருந்தான். அவனது பெயர் ஜாக்என்று கூறினான். அவன் கறுப்புப் பட்டை வாங்கியவன் என்றும் எங்கள் பயிற்சிப் பள்ளியில் சேர விரும்புவதாகவும் கூறினான். அவனது சீருடையை அணிந்து கொண்டு வகுப்பில் கலந்து கொள்ளுமாறு அழைத்தார் மாஸ்டர். லீ.

கறுப்புப் பட்டை வாங்கிவர்களில் வகுப்பிலேயே நான் தான் மூத்தவன் என்பதால் வகுப்பு முடிந்ததும் அவனோடு கலந்துரையாடி அவனை அளவிடுவது என்னுடைய பொறுப்பானது. அவன் எனக்குச் சரிவர ஒத்துழைக்காதபோது மாஸ்டர் லீ என்னிடம் நெருங்கி வந்து 'எச்சரிக்கையாக இரு" என்றார். பிறகு எனது தோள்களைத் தட்டிக் கொடுத்து தடுத்து ஆடு" என்றார்.

நாங்கள் வழக்கமான பயிற்சியை ஆரம்பித்தவுடனேயே ஜாக் மிகவும் வேகமும், திறமையும் உடையவன் என்பது புலனானது. நாங்கள் சண்டையிடுவதற்கான நேரம் வந்தபோது எதிரெதிரே நின்றுகொண்டு குனிந்து வணங்கிக் கொண்டோம். மாஸ்டர் லீ ஒரு சமிக்ஞை செய்தார். உடனே ஜாக் காலை மேலே சுழற்றி என்னை உதைக்க வந்தான். நான் அதைத் தடுத்து காலைப் பின்புறமாக சுழற்றியவாறு ஒரு உதை விட்டேன். அவன் ஒதுங்கிக்கொண்டு முன்புறம் வந்து என் நெஞ்சில் ஓங்கி உதைத்தவுடன் நான் பறந்து சென்று தரையில் விழுந்தேன்.

எனக்கும் மாஸ்டர் லீக்கும் ஏற்பட்ட உள்ளுணர்வு மிகத் துல்லியமாக அமைந்தது. நான் எனது பாடத்தைக் கற்றுக் கொண்டேன். ஜாக் எனது விரோதியல்ல அவனைத் தாக்குவதற்கு என்பதையும் உணர்ந்தேன்.

வகுப்பு முடிந்ததும் நாங்கள் மூவரும் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது 'பாதுகாப்பு ஆலோசகராக" தான் பணியாற்றிய நாடுகள் அனைத்தும் அரசியல் சச்சரவுகள் அதிகமாக இருந்த பகுதி என்று கூறினான் ஜாக். அவன் விரிவாக அதைப் பற்றிச் சொல்லவில்லை, ஆனாலும் நானும், மாஸ்டர் லீயும் பார்வைகளைப் பரிமாறிக் கொண்டோம். பிறகு பயிற்சிப் பட்டறையில் சேர்வதற்கான விண்ணப்பத்தில் அவன் கையெழுத்திட்டான்.

அடுத்து வந்த சில மாதங்களில் நான் ஜாக் பற்றி தெரிந்து கொள்ள வேண்டுமென்று முடிவு செய்தேன். சில நேரங்களில் நாங்கள் மதிய உணவிற்கோ, அல்லது மது அருந்தவோ சந்தித்துக் கொள்வோம். ஜாக் தனது அடுத்த வேலைக்காகக் காத்துக் கொண்டிருக்கும் குள்ளநரியோ என்று எனக்குள் சிறிய சந்தேகம் இருந்தது. அவனது வாழ்க்கையைப் பற்றி அறிந்துகொள்ளக் கிடைத்த வாய்ப்பு என்னை மேலும் உற்சாகப்படுத்தியது. சிறிய விவாதங்கள் மூலம் இருவரும் ஒருவரை ஒருவர் மடக்கிக் கொள்வோம். பிறகு ஒருநாள், 1970இல் சிறு பயணமாக சேய்க்கெல்லெஸ் சென்று வந்ததாகக் கூறினான். என்னால் நம்பவே முடியவில்லை.

1970இன் பிற்பகுதியில் மெய்ன் நிறுவனத்தின் மூத்த துணைத் தலைவரும் ஓய்வு பெற்ற அமெரிக்க இராணுவத் தளபதியுமான சக் நோபெல் சேய்க்கெல்லெஸ் செல்லத் தயாராகுமாறு என்னிடம் கூறினார். இந்தியப் பெருங்கடலில் இருக்கும் இந்தத் தீவு நாடானது பென்டகனின் போர்த்திறம் வாய்ந்த இராணுவத் தளங்களில் ஒன்றான தியாகோ கார்சியாவிற்கு அருகில் உள்ளது. வாஷிங்டன் இரகசியமாக வைத்திருக்க விரும்பிய தியாகோ கார்சியா பற்றிய உண்மைகளை, மத்தியகிழக்கு, ஆப்பிரிக்கா மற்றும் ஆசியாவின் சில பகுதிகளில் தான் செயல்படத் தேவையான முக்கியமான வசதிகளை மூடிமறைக்க அமெரிக்காவை வலியுறுத்திய அந்த உண்மைகளை வெளியிடச் சொல்லி சேய்க்கெல்லெஸ் அதிபர் ஃபிராங்க் - ஆல்பர்ட் ரெனே அச்சுறுத்தப்பட்டார். ரெனேவிற்கு இலஞ்சம் கொடுத்தும், அச்சுறுத்தியும் அவர் மனதை மாற்ற வேண்டியதே எனக்குக் கொடுக்கப்பட்ட வேலை. விரைவில் நடந்த அனைத்தும் அதுவரை அங்கு நிலவி வந்த சூழலையே மாற்றியது.

ரோல்டோ மற்றும் டோரிஜோசைப் போல் அதிபர் ரெனேவை ஊழலுக்கு அடிபணிய வைத்துவிட முடியாது என்று அவருக்கு நெருக்கமான இரகசிய முகவர் தெரிவித்தார். நான் அந்த வேலையை விடுத்துத் திரும்பினேன். பிறகு 1981 இல் ஒரு குள்ளநரிக் கூட்டம் அதிபர் ரெனேவைக் கொலை செய்ய அனுப்பட்டது. அவர்களது விமானம் சேய்க்கெல்லெஸில் தரையிறங்கியவுடன் அவர்கள் கண்டுபிடிக்கப்பட்டார்கள். உடனே ஒரு துப்பாக்கிச் சூடு

நடந்தது. அப்போது சுற்றிவளைக்கப்பட்டு, வீழ்த்தப்பட்ட குள்ளநரிகள் அனைவரும் ஏர் இந்திய 707 விமானத்தைக் கடத்தினார்கள். அதில் விமானம் கிளம்பியவுடன் நாம் சுட்டுக் கொல்லப்படுவோம் என்று நம்பிய ஆறு பேர் மட்டும் உள்ளூர் மக்களோடு கலந்து தப்பித்து விட முயன்று அங்கேயே இருந்துவிட்டார்கள். மற்றவர்கள் விமானத்தைத் தென் ஆப்பிரிக்காவிற்குச் செலுத்துமாறு பணியாளர்களிடம் வற்புறுத்தினார்கள்.

அங்கேயே இருந்துவிட்ட ஆறு பேரும் பிடிபட்டுக் கைது செய்யப்பட்டர்கள். அதில் நான்கு பேருக்கு மரண தண்டனையும் மற்ற இருவருக்கும் நீண்ட நாள் சிறை தண்டனையும் வழங்கப்பட்டது. 707 விமானம் தென் ஆப்பிரிக்காவில் தரையிறங்கியதும் தென் ஆப்பிரிக்கக் காவல் படையால் சுற்றி வளைக்கப்பட்டுக் குள்ள நரிகள் நால்வரும் கைது செய்யப்பட்டர்கள்.*

நான் ஜாக்கை வியந்து பார்த்தேன்......

"நான் எழுபதுகளின் பின்பகுதியில்தான் அந்த அதிபருடன் பணியாற்றச் சென்றேன்" என்று கூறினேன்.

அவனது கண்கள் என்னையே பார்த்தபடி இருக்க ஆல்பர்ட் ரெனேவா?" என்றான்.

மேலும் "நீ அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா?" என்றான்.

'நான் அவரைக் கொலை செய்ய முயற்சித்தேன்" என்றேன். என்னைப் பார்த்து ஒரு அசட்டுச் சிரிப்பை உதிர்த்தவன் "ஆனால் நான் அதைப் பற்றிப் பேசவில்லை " என்றான்.

அவனது மௌனத்தை நான் புரிந்துகொண்டேன். குள்ளநரிக் கூட்டத்தில் அவனும் ஒருவன் என்பதைப் புரிந்துகொள்ள அதுவே போதுமானது. பிறகு அன்று மாலை நான் எனது கோப்புகளைப் புரட்டிக் கொண்டிருந்தேன். 707 விமானக் கடத்தலில் அவனது பெயரும் இருந்தது. தென்னாப்பிரிக்காவில் தண்டனை பெற்றவர்கள் பட்டியலிலும் அவனது பெயர் செய்தித்தாள்களில் வந்திருந்தது.

சேய்க்கெல்லெஸ் பற்றி நான் ஜாக்கிடம் கேட்கவேயில்லை. பிறர் சம்பந்தப்பட்ட காரியங்களில் தலையிடுவது அவர்களது நம்பகத்தன்மையைக் கெடுத்துவிடும் என்று எனக்குத் தெரியும். அதற்கு பதிலாக அவனது முந்தைய கால வாழ்கையைப் பற்றிப் பேசினோம். பெருநிறுவன நிர்வாகியின் மகனாக பெய்ருத் நகரின் வன்முறைகளுக்கு இடையில் வளர்ந்தவன். அமெரிக்கக் குடிமகன் என்ற போதும் 1960 மற்றும் 1970களின் பிற்பகுதியில் காதல் வயப்பட்டு அமெரிக்க வீதிகளில் சுற்றிக் கொண்டிருந்த வழக்கமான பதின்பருவ இளைஞர்களிடமிருந்து விலகியே இருந்தான். சிறு பிள்ளைகள் நீர்வீழ்ச்சியில் ஆடுவதை வேடிக்கை பார்ப்பதற்கு பதிலாக ஒரு தாய் தன் மகன் கண் முன்பே கற்பழிக்கப்பட்டதையும், ஏ. கே.47 துப்பாக்கிகள் மாநகர வீதிகளில் குண்டுகளை உமிழ்ந்து மக்களைக் கொன்று குவித்ததையும் வேடிக்கை பார்க்கும் கொடிய நிலைக்கு ஆளானான். தனது பதினெட்டாவது வயது பிறந்த நாள் முடிந்தவுடன் இஸ்ரேலுக்கு உளவு பார்த்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு பாலஸ்தீன விடுதலை இயக்கத்தினரால் கடத்தப்பட்டு, கொடுமைப் படுத்தப்பட்டு, தண்டிக்கப்படப் போவதாக மிரட்டப்பட்டான் ஜாக். இறுதியில் அவர்கள் ஜாக்கை விடுதலை செய்தனர். இருப்பினும் அந்த அனுபவம் அவனது வாழ்க்கைப் பாதையை மாற்றி அமைத்தது.

"முறை தவறிப் பிறந்தவர்களான அவர்களைக் கண்டு எனக்கு அச்சமில்லை " என்று விளக்கியவன், "என்னைக் கடுமையாகத் திட்டினார்கள். நான் ஒரு போராளி என்பதை எனக்கு உணர்த்தினார்கள்" என்றான்.

பிறகு அவன் ரொடீசியா (தற்போது ஜிம்பாப்வே) சென்றான். அதன் இராணுவம் ஆக்கப்பூர்வமாகவும், மிருகத்தனமாகவும் செயல்படுவதற்குப் பெயர் போனது. மேலும் கூலிப்படையினருக்கு பயிற்சியளிப்பதில் முதலிடத்தில் இருந்தது. அங்கு சிறந்து விளங்கிய ஜாக் ரீசஸ் என்று அழைக்கப்படும் தென் அப்பிரிக்காவின் புகழ் பெற்ற உயரடுக்கு சிறப்புக் காவல் படையில் தேர்ந்தெடுக்கப்பட்டான். இதன் வீரர்கள் அனைவரும் உலகிலேயே மிகக் கொடூரமானவர்களாகக் கருதப்படுகிறார்கள். அங்கு தனது பயிற்சியை முடித்துப் பட்டம் பெற்ற போது ஜாக் அடைந்த நற்பெயர் அமெரிக்காவின் சி.ஐ.ஏவில் சேர வழிவகுத்தது.

சில நாட்களுக்குள் ஜாக் எங்கள் பயிற்சிப் பள்ளியிலிருந்து வெளியேற வேண்டி வந்தது. அவன் பயணிப்பதில் மிகுந்த ஆர்வமுடையவன். திரும்பி வருகையில் பயணத்தின்போது எடுத்த புகைப்படங்களைக் கொண்டு வந்தான். இந்தோனேசியாவில் வெடிவிபத்து, லெபனானில் நடந்த வன்முறை, தென்னாப்பிரிக்காவில் நடந்த படுகொலை என அவன் பயணம் சென்ற பகுதிகளில் வன்முறை நிகழ்வுகள் நடந்ததாக நானும், மாஸ்டர் லீயும் விமர்சித்துக் கொண்டிருந்தோம்.

பிறகு செப்டம்பர் 11 நிகழ்வு, 2003 ஈராக் படையெடுப்பு ஆகியவையும் நிகழ்ந்தது. மத்திய கிழக்கு நாடுகளுக்குச் செல்லும் பணியை ஏற்றுக் கொண்டான் ஜாக். அனைத்திற்கும் சேர்த்து ஜாக் சொல்லும் பதில் "இது நான் ஏற்றுக்கொண்டுள்ள பணியின் வகை மற்றும் என்னோடு சேர்ந்து சேய்க்கெல்லஸ் சென்ற பழைய நண்பர்கள் மீண்டும் கூடுகிற ஒரு நிகழ்வு" என்பதுதான்.

எனக்கு நடந்த அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு 2005இல் அவன் ஒரு மாத காலம் விடுமுறைக்கு வரும் வரை அவனை நான் பார்க்கவில்லை. தினந்தோறும் என்னை வந்து சந்தித்தவன் அதிகமாக நடக்குமாறு வற்புறுத்தி வந்தான். "மாஸ்டர்லீயின் பயிற்சிக் கூடத்தில் உன்னோடு சண்டையிட ஆவலாக இருக்கிறேன்" என்று சொல்வான்.

அவனது வேலையைப் பற்றி அதிகம் பேசவில்லை . மாறாக ஈராக் நகர மக்கள் வயல் வெளிகளில் வேலை செய்வதும், ஒட்டகங்களின் மீது ஏறிச் செல்லும் குழந்தைகளும், அழகான அந்தி சாயும் சூரியனும், வெடிகுண்டு வெடித்த கட்டிடங்களும், உடைந்த இராணுவ வண்டிகள் மற்றும் வெடிக்கும் மகிழுந்துகளிலிருந்து சிதறி ஓடும் ஆண்கள் என அவன் எடுத்த புகைப்படங்களைக் காண்பித்தான்.

பொருளாதார அடியாளின் வாக்குமூலம் புத்தகத்தை அவனிடம் கொடுத்தேன். இருபத்தி நான்கு மணி நேரத்தில் அவன் அதை முழுவதும் வாசித்து விட்டான். 'நீங்கள் உண்மையைச் சொல்லி யிருக்கிறீர்கள். உங்களால் மேலும் எழுத முடியும் என்று நம்புகிறேன். இன்னும் ஆழமாக எழுதுங்கள்" என்றான். அவனது வெளிப்படைத் தன்மையைப் பார்த்து நான் வியந்ததும் இதில் மறைப்பதற்கு ஒன்றுமில்லை " என்றான்.

அந்த நிலையில்தான் அதுவரை நெடுநாட்களாக நான் தவிர்த்து வந்தவற்றைத் தொட்டுப் பார்த்தேன். “ரெனேவைக் கொலை செய்த பிறகு என்ன செய்யத் திட்டமிட்டிருந்தீர்கள்?” என்றேன்.

ஒரு நிமிடம் மௌனமாகி, "வேகமாக அங்கே செல்லுங்கள், அப்படியே ஆவியாக மாறி மறைந்து கொள்ளுங்கள்", என்று சொன்னவன் அந்தக் கடைசி வார்த்தையைச் சொல்லும்போது சிரித்துவிட்டான். கென்ய இராணுவம் ஒரு விமானம் நிறைய படை வீரர்களை நிரப்பிக்கொண்டு நைரோபியில் நின்றுகொண்டிருந்ததைப் பற்றி விளக்கிச் சொன்னான். குள்ளநரிகள் ரெனேவைக் கொன்ற உடனேயே கென்யர்கள் ஆட்சிக் கவிழ்பிற்குப் பொறுப்பேற்க வந்துவிட்டார்கள். ஜாக்கும் அவனது குழுவும் வணிக விமானங்களை எடுத்துக் கொண்டு மற்ற நாடுகளுக்குச் செல்ல வேண்டி வந்தது.

'ஆக ஒரு வெள்ளையினக் கூலிப் படையினர்தான் ஆட்சிக் கவிழ்ப்பை அரங்கேற்றியது என்று யாருக்கும் தெரியாதா?" என்று கேட்டேன்.

அவன் இல்லை என்பது போல் தலையசைத்தான்.

"ஆக, நீங்கள் எளிமையாக மறைந்துவிட்டீர்கள். ஆப்பிரிக்க இராணுவம் உள்ளே நுழைந்து ரெனேவைக் கொன்று, அவரது ஆட்சியைக் கவிழ்த்து, பழைய அதிபரை மீண்டும் ஆட்சியில் அமர்த்தியதாக உலகிற்குச் சொல்லப்பட்டது அப்படித்தானே?" என்று கேட்டேன்.

"ஆம் அதுதான் திட்டமே " என்றான்.

* சி.ஐ.ஏ, தென் ஆப்பிரிக்கா, தியாகோ கார்சியா என அனைவரும் இது தொடர்பான செய்தியில் வரவே இல்லை" என்று கூறி அவர்களது சாதுர்யத்தைப் பாராட்டி மென்மையாக விசில் அடித்தேன்.

"எவ்வளவு பெரிய ஊழல் என்ன புத்திசாலித்தனம் ?', என்று கூறி வியந்தேன்.

"ஆம்" என்றான்.

இது அமெரிக்க அரசியல் அமைப்பின் அடித்தளத்தின் மீது நடத்தப்பட்ட நேரடித் தாக்குதல் என்பதைச் சொல்ல எனக்கு எந்தத் தயக்கமுமில்லை. வாக்களித்தவர்களை வேண்டுமென்றே ஏமாற்றும் போது ஜனநாயகம் என்பது கேலிக் கூத்தாகிறது. "நீ மாட்டிக் கொண்டத்தைத் தவிர" என்றேன்.

“ஆம்” என்று பேராவலுடன் பார்த்தவன் முகம் மலர்ந்தான். "ஆனால் உனக்கு ஒன்று தெரியுமா? இவையனைத்தும் இறுதியில் தான் நடந்தது. தென் ஆப்பிரிக்கக் காவல் படையும், அரசும் எங்கள் நண்பர்கள். எங்களது ஏர் இந்திய விமானம் தரை இறங்கியவுடன் நாங்கள் குற்றவாளிகளைப் போல் அடையாளப் படுத்தப்பட்டோம். பிறகு இரண்டு மாதங்கள் கழித்து இரகசியமாக விடுவிக்கப் பட்டோம்" என்று கூறி என்னிடம் மெலிதாகச் சிரித்தான்.

"தோல்வியாக அடையாளம் காட்டப்பட்ட எங்களது பணி வெற்றியாக மாறியது. அனைத்துக் கூலிப் படையினரும் விடுவிக்கப் பட்டார்கள். யாருமே தண்டிக்கப்படவில்லை. சேய்க்கெல்லெஸ் அரசும் தியாகோ கார்சியா பற்றி எந்த உண்மைகளையும் வெளியிட வில்லை. மாறாக வாஷிங்டனுடன் மிக நெருங்கிய உறவை வளர்த்துக் கொண்டது" என்றான்.

ரெனே கையூட்டுகளுக்கு அடிபணியாதவர் என்று இரகசிய முகவர் ஒருவர் கூறியது பற்றிச் சொன்னேன். அதுவே நான் பணியிலிருந்து விலகியதற்குக் காரணமென்றும் அது ஒரு தவறான முடிவு என்றும் கூறினேன்.

"இருந்தாலும் " என்று ஆரம்பித்த ஜாக் மரணத்தின் அருகில் இருந்த ரெனே ஒருவித மாற்றத்தை உணர்ந்தார்" என்றான். கைகளை மேலே உயர்த்தியவன் ஒன்றாக கீழிறக்கினான். "நாங்கள் அவரைக் கொலை செய்ய மேற்கொண்ட முயற்சி சி.ஐ.ஏ எவ்வளவு தீவிரமாக இருக்கிறது என்பதை அவருக்குப் புரிய வைத்தது" என்றான்.

அவனது வார்த்தைகளை ஏற்றுக் கொண்ட நான் ரோல் டோஸ் பற்றியும், டோரிஜோஸ் பற்றியும் யோசித்தேன். நீங்கள் செல்வதற்கு சில மாதங்கள் முன்புதான் சி.ஐ.ஏ ஈக்குவேடார் மற்றும் பனாமா அதிபர்களைக் கொன்றது. ஏனென்றால் அவர்கள் நம் வழியைப் பின்பற்ற முடியாது" என்றேன்.

"நிச்சயமாக" என்று சிரித்தான். அந்த மரணங்கள் ரெனேவின் மீது பெரிய தாக்கத்தை ஏற்படுத்தவில்லை என்று ஒரு கணமும் நினைக்காதே" என்றான்.

"அவர் இப்போது எங்கே?' என்று கேட்டேன்.

"ரெனேவா? அவர் இருபது வருடங்களுக்குப் பிறகு அதிபர் பதவியிலிருந்து தற்போதுதான் ஓய்வு பெற்றிருக்கிறார் மேலும் இத்தனை வருடங்களும் தியாகோ கார்சியாதான் மத்தியகிழக்கு, ஆப்பிரிக்கா மற்றும் ஆசிய நாடுகளுக்குள் செல்ல அமெரிக்காவிற்கு ஏவுதளமாக இருந்தது -

சேய்க்கெல்லஸ் சென்ற குள்ளநரிகளின் கதை நமக்குப் பலவற்றை உணர்த்தியது. மேலோட்டமாகப் பார்த்தால் அவர்களின் பயணம் தோல்வியைப் போல் தெரிந்தாலும் முடிவில் அது வாஷிங்டனிற்குத் தேவையான பணிகளை நிறைவாகச் செய்திருக்கிறது. உண்மையில் அதிபரைக் கொல்வதற்கு பதிலாக அவரை மிரட்டியும், இலஞ்சம் கொடுத்தும் ஒத்துழைக்க வைத்திருக்கிறது. அதன் பிறகு அவர் அமெரிக்கப் பேரரசின் சாந்தமான சேவகராகிவிட்டார். இதன் முக்கியச் செயலர்கள் பிடிபட்டிருந்தாலும் அவர்களும் விரைவில் விடுவிக்கப்பட்டு தங்களது தொழில்களைக் கவனிக்கச் சென்று விட்டார்கள். சேய்க்கெல்லஸ் விமான நிலையத்தில் நடைபெற்ற சோதனை பற்றி யோ அல்லது ஏர் இந்தியா 707 விமானம் கடத்தப்பட்டது பற்றியோ யாரேனும் படித்திருந்தாலோ அல்லது கேள்விப்பட்டிருந்தாலோ அது நேர்மையான அரசைக் கவிழ்ப்பதற்கு தீவிரவாதிகள் அல்லது பொதுவுடைமைவாதிகள் செய்த வேலைதான் என்று நம்பியிருப்பார்கள். அது சிஐஏ வின் புளித்துப்போன சதி என்று பொதுமக்களுக்குத் தெரியாது.

# அத்தியாயம் 3 - ஈகுவேடார் கிளர்ச்சிகள்

எனக்கு நஞ்சு வைக்கப்பட்டதன் பின்னணியில் உள்ள வாய்ப்புகளைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். என்எஸ்ஏ அல்லது சிஐஏ தான் என்னைக் கொலை செய்ய முயன்றது என்பதை நான் நம்ப விரும்பவில்லை ஏனென்றால் அதன் தாக்கங்கள் என்னை அதிகமாக அச்சுறுத்தியது. எனது அகால மரணம் மூலம் பல புத்தகங்களை விற்கக் கூடும் என்று நினைக்கின்ற அளவிற்கு அரசு புத்திசாலித்தனமாக இருந்தது. இறுதியாக அவர்களுக்கு வேண்டியதும் அதுதான் என்று நினைப்பதற்கு பதிலாக என்னை நானே தேற்றிக் கொள்ள முயற்சித்தேன். ஒருவேளை நான் நஞ்சு வைக்கப்பட்டிருந்தால் என்னை மதிய உணவிற்கு அழைத்துச் சென்ற "பத்திரிக்கையாளன்" தனிப்பட்ட விரோதத்தில் அவ்வாறு செய்திருக்கலாம் என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். என்னை ஒரு துரோகி என்று திட்டி மின்னஞ்சல் அனுப்பிய மக்களுக்காக அவனும் அவ்வாறே நினைத்திருக்கக்கூடும். மக்கள் என்னை வெறுக்கின்ற காரியங்களைத் தான் நான் செய்திருக்கிறேன் என்பது அந்த மின்னஞ்சல்களிலிருந்து தெரிந்து கொண்டேன். இதற்கு மேல் நான் எப்படி உயிர் வாழ்வேன்.

எனது உச்சபட்சக் குற்ற உணர்வு ஈக்குவேடாரின் அமேசானில் சுவார் பழங்குடி மக்களோடு இருந்தபோது கிடைத்த அனுபவத்திற்கு மீண்டும் அழைத்துச் சென்றது.

நான் கடுமையாக உடல்நலம் பாதிக்கப்பட்டிருந்தேன். என்னால் உணவு உட்கொள்ள முடியவில்லை. மேலும் குறைந்த நாட்களில் மிகுதியாகவே எடை குறைந்துவிட்டேன். இரண்டு நாட்கள் அடர்ந்த வனப்பகுதியில் நடந்து சென்றால்தான் உடல் நலமுள்ள ஒரு மனிதர்) சாலையைக் காண முடியும். அதுதான் மிக அருகிலிருக்கும் சாலையும் கூட, அதன் பிறகு இரண்டு நாட்கள் ஆபத்தான பழைய பேருந்து ஒன்றில் பயணித்துச் சென்றால்தான் மருத்துவரைக் காண முடியும். அப்போதைய நிலையில் என்னால் நிற்க மட்டுமே முடியும் என்று இருந்ததால் இவையனைத்தும் நடக்காத காரியம் என்றாகிவிட்டது. மரணிக்கும் தருவாயில் இருக்கிறேன். அப்போது சாமன் என்று அழைக்கப்படும் சுவார் இன மக்களின் பாரம்பரிய வைத்தியர்களில் ஒருவரான டுன்டுவாம் என்பவர் என்னைக் குணப்படுத்தினார்.

பிறகு அரை மயக்கத்தில் விடிய, விடியப் பயணித்துப்

ஈ நியூ காம்ப்சயர் உணவகத்திற்கு அழைத்துச் செல்லப் பட்டேன். இப்போது முற்றிலும் மாறுபட்ட உணவுப் பழக்கம் கொண்ட மக்களிடையே நான் இருக்கிறேன். அதிலும் குறிப்பாக அங்குள்ள நதிகளில் இயற்கை உயிரிகள் அதிகம் கலந்திருப்பதால் அவர்கள் எப்போதும் மனிதர்களின் எச்சிலைக் கொண்டு புளிக்க வைக்கப்பட்ட பீருடன் கலந்த குடிநீரையே குடிக்கின்றனர்.

ஆக வேறு வழியின்றி நானும் அவர்களது உணவை உண்டு பீரைக் குடித்துக் கொண்டேன். அன்று இரவு ஒவ்வொரு முறை இதைச் செய்யும்போது அது என்னைக் கொன்றுவிடும் என்று ஒரு குரல் ஒலிப்பதைக் கேட்டேன். மேலும் சுவார் இன மக்கள் இயல்பாகவே நம்ப முடியாத அளவிற்கு வலுவாகவும், ஆரோக்கியமாகவும் இருந்தனர். அன்று இரவு கடந்து செல்லச் செல்லதான் அந்த உணவுகள் என்னைக் கொள்ளப் போவதில்லை என்றும், அது எனக்குள் ஏற்படும் மனப்பிறழ்வு மட்டுமே என்பதையும் உணர்ந்தேன். மறுநாள் காலை நான் முழு ஆரோக்கியத்துடன் இருந்தேன்.

சில நாட்களுக்கு பிறகு, என்னைக் குணப்படுத்தியதற்காக அவருக்கு நான் கடமைப்பட்டிருப்பதாகக் கூறினார் டுன்டுவாம். நான் அவரது மாணவனாக விரும்பினேன். இறுதியில் இது ஒன்றுதான் எனக்குத் தேவைப்பட்டது. நான் வியாபாரம் படிக்க சென்றிருக்கிறேன்; மாயவித்தைகள் மீது கொள்ளும் நம்பிக்கைகளில் பயனில்லை என்பது எனக்குத் தெரிகிறது, ஆனாலும் அவர் என் உயிரைக் காப்பாற்றி யிருக்கிறார், அதனால் நான் அவருக்குக் கடமைப் பட்டிருக்கிறேன்.

நின்டு வாமுடன் நேரத்தைச் செலவிட்டது, மனத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றலைக் கற்றது ஆகியவை "ஒரு இலட்சியக் கனவு கண்டால் நிச்சயம் ஒருநாள் அதை அடைவோம்" என்ற பழைய பழமொழியில் உள்ள உண்மையைக் கற்றுத் தந்தது. குற்றவுணர்வில் சித்தபிரமை பிடித்தவன் போல் இருந்ததிலிருந்து வெளியேறினேன்.

எனது அறுவைச் சிகிச்சை முடிந்து சில நாட்கள் கழித்து ஒருநாள் எனது வீட்டின் அருகில் மரக்கட்டைகள் அடுக்கி வைக்கப் பட்டிருக்கும் அந்த இடத்திற்கு நடந்து சென்றேன். கண்களை மூடியவாறு ஒரு கருவாலி மரத்தின் மீது முதுகு சாய்த்து அமர்ந்தேன். டுன்டு வாமின் முகத்தைக் கற்பனை செய்து பார்த்து எனக்கும் இயற்கைக்குமான தொடர்பை உணர்ந்தேன். சுவார்களும் பல பாரம்பரிய பண்பாட்டு இனங்களைப் போன்று மனத்தைக் கட்டுப்படுத்தும் திறனுக்கான சாவி இதயத்தில் இருப்பதாக நம்புகிறார்கள். எனது கைகளை இதயத்தில் வைத்தேன்.

அங்கேயே அமைதியாக சில நிமிடங்கள் அமர்ந்திருந்தேன். சிறந்த உலகை உருவாக்குவதற்கு வேண்டிய அனைத்தையும் சாத்தியப்படுத்த நான் தியாகம் செய்து கொள்வதும் எனது கடமைகளுள் ஒன்றானது. புத்தகம் எழுதுவதும், அறிக்கையிடுவதும் மட்டுமே போதுமானது என்ற நம்பிக்கைக்குள் நான் மாட்டிக் கொண்டேன். மீட்பு நடவடிக்கைகளை நடைமுறைப்படுத்துவதற்கு முழு ஈடுபாடு அவசியமானது என்று இப்போது புரிந்துகொண்டேன். எனது பெருங்குடலில் பெரும்பகுதி நீக்கப்பட்ட பிறகு எனது வேலைகளைக் கொஞ்சம் நிறுத்திக் கொள்ள வேண்டும் என்று நினைக்கத் தவறி விட்டேன். ஹாவர்ட் ஜின் சொன்னது சரிதான். ஒரு எழுத்தாளராகவும், பேச்சாளராகவும் என்னை நான் புத்துயிரூட்டிக் கொள்வது அவசியமென்பதை உணர்ந்தேன். நான் ஒரு செயல் பாட்டாளனாகவும் இருக்க வேண்டும். இதற்கான சிறந்த வழி நான் கண்ட அல்லது எனக்கு அறிமுகப்படுத்தப்பட்ட சமூக நல அமைப்பு களோடு இணைந்து பணியாற்றுவதுதான் என்பது புரிந்தது. பதினைந்து வருடங்களாக என்னுள் நிலைத்திருந்த மாற்றத்திற்கான கனவு பெருமளவிலான ஒப்பந்தத்தை நிறைவேற்றிக் கொண்டது. அமேசான், அண்டிஸ், ஆசிய சமவெளிகள், ஆப்பிரிக்கா, மற்றும் மத்திய அமெரிக்காவில் உள்ள பாரம்பரிய சாமன் இனத்தவர்களோடு வாழ்ந்து அனைத்தையும் கற்றுக் கொள்ள மக்களையும் ஒரு பயணத்திற்கு நாங்கள் அழைத்துச் சென்றோம். அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் பயிற்சி வகுப்புகள் நடத்தினோம். ஒமேகா நிறுவனத்துடன் கூட்டு சேர்ந்து சாமான் இனமக்களின் வருடாந்திரக் கூட்டங்களை நடத்தினோம். அது நூற்றுக்கணக்கான அமெரிக்கர்கள் உட்பட உலகம் முழுவதிலும் உள்ள பல் வேறு பாரம்பரிய ஆசிரியர்களை ஒன்றிணைத்தது. இருப்பினும் எனது அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு மாற்றத்திற்கான கனவு அமைப்பின் இயக்குனர் லைன் ராபர்ட்சும் நானும் விலகிக் கொண்டோம். அவர் சாமானிக் ரெய்கி மற்றும் “சேப் சிப்டிங் இன் டூ ஐயர் கான்சியஸ்னஸ்” போன்ற பெயரில் வெளியான புத்தகங்களை எழுதுவதில் முனைப்புடன் இருந்தார். பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம் வாயிலாக ஏற்பட்ட நடவடிக்கைகளை கவனித்துக் கொண்டிருந்தேன் நான்.

மறுபுறம் பச்சமாமா கூட்டணி வெகு வேகமாக செயல்பட்டுக் கொண்டிருந்தது. அதன் வரலாறும், என்னுடைய கதையும் ஒன்றுக் கொன்று தொடர்புடையது.

1994இல் எனது ஈக்குவேடாரிய நண்பன் டேனியல் கூப்பர்மேன் ஈக்குவேடாரில் உள்ள அமேசானின் அடர்ந்த வனத்தில் அச்சுவார் இனத் தலைவர்களை சந்திக்க வேண்டுமென்று வற்புறுத்தினான். துந்துவாம் மற்றும் சுவார்களைப் போலவே இந்த அச்சுவார் இனத்தவர்களும் நீங்கள் கனவு காண்பதைப் போலவே இருப்பதாக நம்புகிறார்கள். மேலும் அவர்களுக்கு ஒரு வகுப்புவாதக் கனவு உள்ளது. அச்சுவார் இனத்தவர் வாழும் அந்த நிலத்தையும், பண்பாட்டையும் காப்பதற்கு அவர்களை அச்சுறுத்தி வரும் எண்ணெய் மற்றும் இதர நிறுவனங்களுடைய நாடுகளைச் சேர்ந்த மக்களோடும் மேலும் புவியில் உள்ள அனைத்து மனிதர்களோடும் கூட்டணி வைக்க உதவுமாறு கேட்டுக்கொண்டார்கள்.

நான் சமீபத்தில் சந்தித்தவர்களில் வலிமையுள்ள ஒரு சமூக செயற்பாட்டாளராக என்னை ஈர்த்த லைன் ட்விஸ்ட் என்ற நபரிடம் அந்தத் தகவலைச் சொன்னேன். 1995 இல் அவர், அவரது கணவர், பில் மற்றும் நான் ஆகிய மூவம் ஒரு சிறு குழுவை அழைத்துக் கொண்டு அச்சுவார் இன மக்கள் வாழும் வனத்திற்குள் சென்றோம். அந்தப் பயணத்தின் இறுதியில் பச்சமாமா கூட்டணிக்கான ஒரு அமைப்பை உருவாக்க 100,000 டாலர்களை அவர்கள் கொடையாக வழங்கினார்கள்.

அதன் பிறகு நான் அதிலிருந்து விலகி விட்டேன். ஆனால் பில்லும், லைனும் வியக்கத்தக்க தீர்மானங்களோடு முன்னெடுத்துச் சென்றார்கள். நான் சந்தித்த மனிதர்களிலேயே மிகுந்த ஈடுபாடுள்ள, தன்னலமற்ற ஆக்கப்பூர்வமான மனிதர்களான அவர்கள் இருவரும் அதைச் சாதித்துக் காட்டினார்கள். 2005 இல் அறுவைச் சிகிச்சைக்குப் பிறகான மனநிலை மாற்றங்களில் நான் இருந்தபோது பச்சமாமா கூட்டணி அச்சுவார்களுக்கு உதவுவதோடு மட்டுமல்லாமல் நிறைய செய்துகொண்டிருந்தார்கள். அச்சுவார் மக்களோடு ஃபன்டேசியன் பச்சமாமா அலுவலகம், ஈக்குவேடாரின் சமூக நல அமைப்புகள் ஆகியோரையும் ஈடுபடச்செய்து எண்ணெய் நிறுவனங்களை அமைக்க பல நாடுகளால் ஆக்கிரமிக்கப்பட்ட நிலங்கள் மீட்கப்பட்டது. தூண்டுகோள்களாக விளங்கும் காணொளிக் காட்சிகள் உட்பட கனவிலிருந்து விழிப்படையச் செய்வதான நான்கு மணி நேர நிகழ்வாக நடந்த கருத்தரங்கம் பற்றிப் பரவலாகப் பேசப்பட்டது. மேலும் அது விரைவில் எண்பது நாடுகளுக்கும் மேல் சென்றடையும்.

நான் பில்லையும், லைனையும் அழைத்து அந்த நிறுவனத்தில் அதிகம் ஈடுபட விரும்புவதாகக் கூறினேன். எனது யோசனையை அவர்கள் ஆர்வத்துடன் வரவேற்றார்கள்.

விரைவில் நான் ஈக்குவேடார் திரும்பினேன். கியூடோவில் உள்ள ஃபன்டேசியனின் பச்சமாமா அலுவலகம் சலசலத்தது. கடந்த பத்து ஆண்டுகளில் நாடு பல அரசியல் எழுச்சிகளைக் கண்டது. பத்து ஆண்டுகளில் எட்டு அதிபர்கள் மாறினார்கள். இப்போது மிகவும் வித்தியாசமான ஒரு அரசியல்வாதி உருவாகியிருக்கிறார்.

அவர் பெயர் ரஃபேல் கொரீயா. நடுத்தர வர்க்கத்திலும் தாழ்த்தப்பட்ட குடும்பத்திலிருந்தும் வந்தவர். மேலும் அவருக்கு ஐந்து வயதாக இருக்கும்போது அவர் தந்தை கஞ்சா கடத்திய வழக்கில் கைது செய்யப்பட்டு சிறை சென்றவர் என்று அறியப்படுகிறது. அது போன்ற சட்டவிரோத நடவடிக்கைகளை அவர் ஆதரிக்கவில்லை என்று கூறியபோதும், தனது

தந்தையைப் போன்றவர்கள் தங்கள் குடும்பத்தைக் காக்க வழியற்றவர்கள் என்பதைப் புரிந்துகொண்டார்.

குவாயாகில்லில் உள்ள கத்தோலிக்கப் பல்கலைக்கழகத்தில் உதவித்தொகை பெற்றார், பிறகு பெல்ஜியத்திலும் ஒரு உதவித்தொகை பெற்று பொருளாதாரத்தில் பட்ட மேற்படிப்பு படித்து முடித்தார். பிறகு இல்லினாய்ஸ் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து பொருளாதாரத்தில் முனைவர் பட்டம் பெற்றார்.

இந்தப் புதிய அதிபர் வேட்பாளர்தான் இன்றைய உலகத்திற்குத் தேவைப்பட்ட மனிதராகத் தெரிந்தார். அழகான, அறிவான, கவர்ச்சிகரமான அந்த மனிதர் அவரது தாய்மொழியான இஸ்பானிய மொழியோடு சேர்த்து ஆங்கிலம், பிரெஞ்சு மற்றும் குவின்சுவா ஆகிய மொழிகள் பேசுவார். பெல்ஜியத்தவரான அவரது மனைவி ஐரோப்பிய, அமெரிக்க அரசியல் பற்றி நன்கு அறிந்தவர். பெரிய எண்ணெய் நிறுவனங்களைக் கட்டுப்படுத்தி மழைக் காடுகளைப் பாதுகாப்பது உட்பட பல சீர்திருத்த நடவடிக்கைகளில் இவர் வாதாடச் சென்றபோதுதான் இவர் சந்தித்த அமைப்பின் ஆபத்துகளை உணர்ந்தார்.

2006 தேர்தலை எதிர்நோக்கி இருந்த கொரியாவின் அடிப்படைப் பின்புலம் பற்றி நான் படித்தபோது மற்றொரு ஈக்குவேடாரியனும், எனது முன்னாள் வாடிக்கையாளருமான அதிபர் ஜெய்ம் ரோல் டோஸ் நினைவிற்கு வந்தார். அவருக்கு முன்பிருந்த இராணுவ சர்வாதிகாரிகள் வாங்கி வைத்த கடனை அந்தந்த நாடுகளுக்குத் திருப்பிச் செலுத்த எண்ணெய்தான் உதவுமென்று அவரிடம் நான் வாக்குறுதி அளித்த நாட்களை நினைத்தபோது நான் மிகுந்த வருத்தத்திற்கு ஆளானேன். உலக வங்கியிடம் வாங்கிய கடன்களைக் கட்டத் தவறுவது சிறந்த வழியாக இருக்காது என்றும் டெக்சாகோவுடன் ஒப்பந்தத்திற்குச் செல்வதே நல்லது என்றும் அவரிடம் நான் உறுதியளித்தேன். அவர் அதைக் கேட்கவில்லை. மாறாக டெக்சாகோவின் வருமானத்தில் பங்கு கேட்டதோடு அமெரிக்காவில் உள்ளதைப் போலவே நிறுவனங்கள் சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினார்.

கியூடோவில் உள்ள ஒரு விடுதி அறையில் அமர்ந்துகொண்டு 1981 மே மாதத்தில் கியூடோ கால்பந்து மைதானத்தில் ரோல்டோஸ் பேசிய அற்புதமான பேச்சை தொலைக்காட்சியில் பார்த்துக் கொண்டிருந்தேன். அனைத்து விதமான அடக்குமுறைகளிலிருந்தும் விடுவிக்கும் ஒரு விடுதலைப் போராட்டத்தின் தலைவராக தன் நாட்டை "வீரமிக்க நாடாக பார்க்க வேண்டி மக்களைத் தூண்டினார். அப்போது இறுதியாக மக்கள் முன்னிலையில் " விவா லா பாட்ரியா" (வாழ்க தாயகம்) என்று அவர் பேசிய இறுதி வார்த்தை என்னை உலுக்கியது. பின்பு அவரது தனி விமானம் விழுந்து நொறுங்கி, அதில் அவர் இறந்த போனதைக் கண்டபோது வருத்தத்திற்கும், குற்ற உணர்ச்சிக்கும் ஆளானேன்.

ரோல் டோஸின் மரணத்திற்குப் பின் மூன்று மாதங்களுக் குள்ளாகவே என்னுடைய மற்றொரு வாடிக்கையாளரான பனாமாவின் ஒமர் டோரிஜோஸ் அதேபோலவே படுகொலை செய்யப்பட்டார்.

இப்போது இங்கே கொரியாவும் ரோல்டோஸின் நினைவுகளை அப்பட்டமாக வெளிப்படுத்துகிறார். பொருளாதார அடியாளின் வாக்குமூலத்தைப் பார்த்த பிறகு தன்னை பொருளாதார அடியாட்கள் அனுகியதாகவும், அந்த ஓநாய்களின் அச்சுறுத்தல் பற்றி நன்கு அறிவதாகவும் கூறினார்.

பில், லைன், டேனியல் மற்றும் நான் ஆகிய நால்வரும் இணைந்து பச்சமாமா கூட்டணியின் பெருவாரியான ஆதரவாளர் களைக் கூட்டிக் கொண்டு ஒரு பயணம் செல்வதென முடிவு செய்தோம். எங்களோடு கூட்டணி வைத்துக் கொண்டதற்கு ஒரு அங்கமாக அவர்களை மழைக் காடுகளில் அச்சுவார்கள் கட்டியிருக்கும் சூழல் சுற்றுலாவாண்மையகமான கபாவிக்கு அழைத்துச் செல்வோம்.

அச்சுவார்களின் பகுதிக்குப் பயணிப்பது என்பது கியூடோவிலிருந்து செல் நிறுவனத்தின் விமான ஓடுதளம் வரை பயணிக்கும் கண்கவர் பயணம், பனி படர்ந்த புறக்காவல் பகுதி மற்றும் எண்ணெய் நிறுவனங் களின் சேவைக்காக காட்டிற்கு வெளியே இருக்கும் இராணுவத்தளம் ஆகியவற்றைக் காணும் வாய்ப்புகளை உள்ளடக்கியது. சாலை கடினமாகவும், மூச்சிரைக்க வைக்கும்படியும் இருக்கும். அண்டிஸ் மலையிலிருந்து அந்த மழைக்காடுகள் சுமார் எட்டாயிரம் அடி பள்ளத்தில் இருக்கும். ஒருபுறம் அருவிகள் விழும் செங்குத்தான பாறை களும் அதன் ஓரத்தில் அன்னாசிப் பூக்களும் அழகாக முளைத்திருக்கும். மறுபுறம் பெரிய பள்ளத்தாக்கு அதில் மூவாயிரம் மைல்களைக் கடந்து அட்லாண்டிக் கடல் நோக்கி ஓடும் பாஸ்தாசா நதி.

அந்தச் சாலையில் நான் எப்போது பயணித்தாலும், முதன் முதலாக அங்கு வந்த நாட்களையும் இப்போது எத்தனையோ மாறுதல்களை அடைந்திருப்பதையும் நினைத்துப் பார்ப்பேன். 1968 இல் ஈக்குவேடாரின் அமேசானில் டெக்சகோ நிறுவனம் வெறும் பெட்ரோலியப் பொருட்களை மட்டுமே கண்டுபிடித்தார்கள். இப்போது நாட்டின் ஏற்றுமதியில் வரும், பாதி வருமானம் எண்ணெயில்தான். எனது முதல் பயணத்தின் பின் சிறிது நாட்களுக் குள்ளாகவே அண்டியப் பகுதிகளுக்கு இடையில் பதிக்கப்பட்ட குழாய்களிலிருந்து அரை மில்லியன் பேரல் எண்ணெய்கள் மழைக் காடுகளின் அடர்ந்த பகுதிக்குள் கசிந்துவிட்டது. இது எக்சான் வால்டசில் கசிந்த எண்ணெயின் அளவை விட இரண்டு மடங்கு அதிகம் 2. திட்டமிட்ட கூட்டமைப்பான பொருளாதார அடியாட்களால் 1.3 பில்லியன் பொருட்செலவில் முன்னூறு மைல் தூரம் கட்டியமைக்கப் பட்ட இந்தக் குழாய்கள் மூலம் அமெரிக்காவிற்கு எண்ணெய் வழங்கும் முதல் பத்து நாடுகளில் ஒன்றாக ஈக்குவேடாரை மாற்றப்போவதாக உறுதியளித்தார்கள் 3. மழைக் காடுகளின் பெரும்பகுதி அழிந்து போனது. மக்காவ் என்ற கிளி வகைகளும், கறுஞ்சிருத்தைகளும் முற்றிலும் காணாமல் போனது. ஈக்குவேடார் வனப்பகுதியின் மூன்று பாரம்பரிய பழங்குடியினர் எல்லைப் பகுதிக்குச் சென்று சிதறிப் போனார்கள். அந்தப் பகுதியை மூலமாகக் கொண்ட நதிகள் பல சாக்கடை வழிந்தோடும் பகுதிகளாக மாறிப்போனது.

சமீப காலமாக பச்சமாமா கூட்டணியினரின் ஆதரவோடு பாரம்பரிய இன மக்கள் எதிர்த்துச் சண்டையிட ஆரம்பித்திருக்கிறார்கள். மே 7, 2003 அன்று எனது அன்பரான ஸ்டீவன் டான்ஜிகர் தலைமையில் அமெரிக்க வழக்கறிஞர்கள் முப்பதாயிரத்திற்கும் மேற்பட்ட ஈக்குவேடார் மக்கள் சார்பாக செவ்ரான் டெக்சகோ நிறுவனத்திற்கு எதிராக 1 பில்லியன் டாலர் இழப்பீடு கேட்டு வழக்குத் தொடுத்தனர். 1971 முதல் 1992 க்கு இடைப்பட்ட காலகட்டங்களில் பெரிய

அளவிலான எண்ணெய்கள் திறந்த குழிகளில் புதைக்கப் பட்டதையும், ஒரு நாளைக்கு நான்கு மில்லியன் காலன்களுக்கு மேல் எண்ணெய், கடினமான உலோகங்கள், கார்சினோஜென்கள் ஆகியவை கலந்து நஞ்சாகிப்போன கழிவுநீர் நதிகளில் கலக்கப்பட்டதையும்,

மேலும் சுமார் 350 திறந்தநிலைக் குப்பைக் குழிகளையும் எண்ணெய் நிறுவனம் அப்படியே விட்டுச் சென்றதால் மனிதர்களும், விலங்குகளும் தொடர்ந்து இறந்துவிட்டதையும் வழக்கு உறுதி செய்தது. செவ்ரான் டெக்சகோ நிறுவனம் ஈக்குவேடார் நீதிமன்றத்தில் குற்றவாளி என நிரூபிக்கப்பட்டபோதும் தொடர்ந்து குற்றச்சாட்டை மறுத்து வந்ததோடு வழக்கறிஞர்களுக்கும், ஈக்குவேடார் அரசுக்கும் எதிராக மேல்முறையீடு செய்தது. இதை எழுதிக்கொண்டிருக்கும் இந்த நாள் வரை வழக்கு நிலுவையில் உள்ளது.

பாஸ்தாசா நதியின் பின்புறமிருந்து கட்டப்பட்டிருக்கும் உயர்ந்த சாம்பல் நிற சுவர்தான் கியூடோ-ஷெல் சாலையில் ஏற்பட்டிருக்கும் ஒரு வியத்தகு மாற்றத்தின் அறிகுறி. வலுவின்றி உதிர்ந்து வரும் அதன் கலவை முற்றிலும் இயற்கைக்குப் புறம்பான, அந்த நிலத்திற்கு ஒவ்வாத படியே கட்டப்பட்டிருப்பதைக் காட்டுகிறது. இது அகோயன் நிறுவனத்தின் நீர்மின்னியலுக்கான திட்டம். இது தொழிற்சாலை களுக்குத் தேவையான மின்சாரத்தை வழங்குவதன் மூலம் ஈக்குவேடாரியக் குடும்பங்களை வசதியாக வைத்திருக்கிறது.

ஒவ்வொருமுறை நான் அகோயனுக்கு அழைத்துச் செல்லப் படும் போதும் இது என்னுடைய முயற்சியில் வளர்க்கப்பட்ட திட்டங்களுள் ஒன்றானது என்ற கசப்பான உண்மையை நான் சந்திக்க வேண்டியிருந்தது. ஏனென்றால் இது போன்ற திட்டங்களுக்கு நிதி வழங்கப்பட்ட வழிகள் என்னை அவ்வாறு வருத்தியது. கொரியா அதிபராக முடிவெடுத்தபோது ஈக்குவேடார் அதன் தேசிய நிதியத்திலிருந்து பெரும்பகுதியை அதன் கடனை அடைக்க அர்ப்பணித்தது. ஈக்குவேடாரின் மழைக் காடுகளுக்குள் இருக்கும் அதன் பெட்ரோலிய ஆதாரத்தை எண்ணெய் நிறுவனங்களுக்கு விற்பது ஒன்றே இதற்கான தீர்வு என்று சர்வதேச நாணய நிதியம் உறுதி செய்தது.

தான் அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் இவையனைத்தையும் மாற்றி அமைக்கப் போவதாக உறுதியளித்தார் ரஃபேல் கொரீயா.

60 சதவிகிதமான வாக்குகளைப் பெற்று அவர் வெற்றியும் பெற்றார்.

2007இல் அவர் பதவிக்கு வந்த நாள் முதல் தனது தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்றுவதில் முனைப்புடன் இருந்தார். ஈக்குவேடாரின் பெரும் கடன்களை திருப்பிச் செலுத்த அவர் மறுத்து வந்தார். பொருளாதார அடியாட்களால் இலஞ்சம் கொடுத்து விலைக்கு வாங்கப்பட்ட (எனக்கு நன்கு தெரிந்த உண்மை) சிஐஏ ஆதரவு பெற்ற இராணுவ சர்வாதிகாரிகளால் அவை கையொப்பமிடப்பட்டிருக்கிறது என்று பிரகடனம் செய்தார். லத்தீன் அமெரிக்காவில் உள்ள அமெரிக்காவின் மிகப்பெரிய இராணுவத் தளத்தை மூடினார். கொலம்பியா போன்ற அண்டை நாடுகளுடனான போரை நடத்தும் சிஐஏ விற்கு வழங்கி வந்த ஆதரவைத் திரும்பப் பெற்றார். அமெரிக்காவில் முதலீடு செய்யப்பட்ட நிதிகளை உள்நாட்டில் முதலீடு செய்யத் திரும்பப் பெறுமாறு ஈக்குவேடாரின் மத்திய வங்கிக்கு உத்தரவிட்டார். இயற்கையின் மாற்றமுடியாத உரிமைகளை வழங்கி தன் நாட்டை உலகிலேயே முதன்மையான நாடாக மாற்ற விரும்பி அரசியல் அமைப்பில் சீர்திருத்தங்களை மேற்கொண்டார் (பெரு வணிகங்களின் அடிப்படைக்கு

அச்சுறுத்தலாக இருந்தது). அமெரிக்காவின் சுதந்திர வர்த்தகப் பகுதிகளின் மூலமாக அதன் மேலாதிக்கத்தை அதிகரிக்கும் வாஷிங்டனின் திட்டத்திற்கு மாற்றாக அல்பாவில் இணைந்தார்.

ஆனாலும் கொரியாவின் துணிச்சலான முடிவாகப் பார்க்கப் படுவது எண்ணெய் நிறுவனங்களுடனான ஒப்பந்தங்களை மறுபரிசீலனை செய்யச் சொன்னதுதான். எண்ணெய் வருவாயின் இலாபங்களில் ஈக்குவேடாரிடம் அந்நிறுவனங்கள் பங்கு கேட்கக் கூடாது என்றும் வலியுறுத்தினார். பெரும் எண்ணெய் நிறுவனங் களுக்கும், பொருளாதார வளர்ச்சியடைந்த நாடுகளுக்கும் இடையில் இருக்கும் பொதுவான ஏற்பாடுகள் மூலம் போலியான கணக்குகளைக் காட்டி இந்த நாடுகளை ஏமாற்றி வந்தனர். எனவே பங்கு கேட்பதற்கு மாறாக ஈக்குவேடாரில் உள்ள எண்ணெய் நிறுவனங்கள் அவர்கள் உற்பத்தி செய்யும் ஒவ்வொரு பேரலுக்கும் ஒரு கட்டணத்தை மட்டுமே வசூலித்துக் கொள்ள வேண்டும் என்றும் வலியுறுத்தினார்.

பொருளாதார அடியாட்கள் அனுப்பிவைக்கப்பட்டனர். அதிபருக்கும், அவரது எடுபிடிகளுக்கும் சட்டத்திற்குட்பட்டும், சட்டத்திற்குப் புறம்பாகவும் அவரது முடிவிலிருந்து பின்வாங்கச் சொல்லி இலஞ்சம் கொடுக்க அவர்கள் முன்வந்தனர். அவர் அதை வாங்க மறுத்துவிட்டார்.

பிறகு ஹான்டுரஸ் அதிபர் மேனுவேல் ஜெலேயா ஓநாய்களால் பலாத்காரமான முறையில் ஆட்சியிலிருந்து கவிழ்க்கப்பட்டார்.

அந்த ஆட்சிக் கவிழ்ப்பு இலத்தீன் அமெரிக்க நாடுகளில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. அதிலும் குறிப்பாக அதிபர் கொரியா மீது.

## அத்தியாயம் 4 - ஹான்டுராஸ்: சிஐஏ தாக்கியது

2009ஆம் ஆண்டு ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட ஹான்டுராசின் அதிபர் மேனுவேல் ஜெலேயா பலாத்காரமாக பதவியிலிருந்து இறக்கப்பட்ட உடனே நான் பனாமா சென்றேன். பனாமாவின் செயற்பாட்டாளர்களையும், ஆட்சிக் கவிழ்ப்பில் ஈடுபட்டவர்களையும், இலத்தீன் அமெரிக்க அரசியலில் அனுபவம் உள்ளவர்களையும் சந்திக்க விரும்பினேன்

அர்ஜென்டினா, கொலம்பியா, குவாதிமாலா, பனாமா மற்றும் அமெரிக்க நாடுகளைச் சேர்ந்த வியாபாரிகள், அரசு மற்றும் தனியார் அமைப்புகளின் தலைவர்கள் ஆகியோர்களுடன் நான் பேசினேன். மேலும் ஆசிரியர்கள், வாகன ஓட்டிகள், உணவு பரிமாறுபவர், மளிகைக் கடைக்காரர்கள், சமூக நல செயல்பாட்டாளர்கள் ஆகியோருடனும் பேசினேன். ஜெலேயா குறைந்தபட்ச ஊதியத்தை 60 சதவிகிதம் உயர்த்த வாதிட்டார். அது சிகியுடா பிராண்ட்ஸ் இன்டர்நேசனல் (முன்பு யுனைடெட் ப்ரூட்) மற்றும் டோலே புட் கம்பெனி ஆகிய இரண்டு அமெரிக்க நிறுவனங்களையும் ஆத்திரமடையச் செய்தது. அதுதான் ஆட்சிக் கவிழ்ப்பிற்கான முக்கிய காரணம் என்று பெருவாரியான மக்கள் ஏற்றுக்கொண்டார்கள்.

பனாமா கால்வாய் வழியே நுழைய நங்கூரமிட்டுக் காத்துக் கொண்டிருந்த கப்பல்களின் பின்னால் சூரியன் மறைந்து கொண்டிருந்தது. என்னைத் தனியாகச் சந்திக்க விரும்பிய பனாமா

வியாபாரியான ஜோயலுடன் ஒரு உணவகத்தில் அமர்ந்திருந்தேன். அவன் ஐந்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்து போது இறந்து போன அவனது நாயகன் ஒமர் டோரிஜோசுடனான எனது அனுபவத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினான், அன்று மாலை குற்ற உணர்ச்சி என்னை ஆழமாகத் துளைத்தது. டோரிஜோசை சிஐஏ திட்டமிட்டு விமான விபத்தின் மூலம் படுகொலை செய்ததாக பெரும்பாலான இலத்தீன் அமெரிக்க மக்களைப் போலவே அவனும், அவனது நண்பர்களும் தெரிந்து வைத்திருப்பதாகவும் அதனால் அவர்கள் அமெரிக்காவை வெறுத்துவிட்டதாகவும் கூறினான்.

ஆனால் காலம் மாறிவிட்டது" என்று சொன்னவன் "ஜப்பானையும், ஜெர்மனியையும் நீங்கள் மன்னித்துவிட்டதைப் போலவே உங்களை நாங்கள் மன்னிக்கிறோம்" என்றான். பிறகு அவனது பார்வையை அவன் வைத்திருந்த பீர் கோப்பையில் செலுத்தினான். இப்பொழுது ஹான்டுராஸில் நடக்கின்ற அனைத்தும் ......... பழைய ஞாபகங்களை, கோபங்களைத் தூண்டுகிறது" என்றான். சர்வதேச நாணய நிதியத்தைச் சேர்ந்த இவனது நண்பன் ஜெலேயாவைச் சமாதானப்படுத்தி அவரது கொள்கைகளை மாற்றிக்கொள்ள வேண்டி றொன்டுராஸ் அனுப்பி வைக்கப்பட்டதாகக் கூறினான். "மேலும் உங்கள் புத்தகத்தில் கூறியது போலவே அனைத்து முயற்சிகளையும் அவன் எடுத்தான். உலக வங்கியிலிருந்து கடன் வாங்கித் தருவதாகவும் அதன் மூலம் நாட்டைப் பெருங்கடனில் ஆழ்த்திப் பல திட்டங்களுக்கு அதைப் பயன்படுத்தச் செய்து ஜெ லேயாவின் சுமையை அதிகரிக்கவும் திட்டமிட்டான். அது நடக்காதபோது தந்திரத்தில் இறங்கினான்..." என்று விளக்கினான். அவனது கண்ணாடிக் கோப்பையை மீண்டும் கையிலெடுத்தான். "ஜெலேயா அதைக் கேட்டிருக்க வேண்டும். ஆனால் அவர் அவ்வாறு செய்யவில்லை. எனவேதான் ஓநாய்கள் அங்கு பணியாற்றச் சென்றார்கள்" என்றதும் அவன் கண்கள் என்னைப் பார்த்தது. "ஜெ லே யாவை யாவது கொள்ளாமல் விட்டார்களே என்று சொல்லிவிட்டு என்னைப் பார்த்துப் போலியாகச் சிரித்தான். மேலும் தொடர்ந்தவன் “ஆனால் இது ஹான்டுராஸ் பற்றியது மட்டுமல்ல. ஹான்டுராசில் வழங்கப்படும் நேரப்படி ஊதியம் உயர்ந்தால் மற்ற இலத்தீன் அமெரிக்க நாடுகளிலும் அது போல் நடக்கும் என்று அமெரிக்க முதலாளிகளுக்குத் தெரியும். ஹைத்தியோடு சேர்ந்து ஹான்டுராசும் குறைந்தபட்ச ஊதியத்தை நிர்ணயித்திருந்தது. அதற்கு குறைவாக யாரும் போகக் கூடாது" என்றான்.

ஜெலேயா அதிபராக இருந்த மூன்றரை ஆண்டுகளில் அறிமுகப் படுத்தப்பட்ட பல தாராளமயக் கொள்கைகளைப் பற்றி நாங்கள் இருவரும் பேசினோம். சிறு விவசாயிகளுக்கான மானியங்கள், இலவசக் கல்வி, ஏழைக் குழந்தைகளுக்கான உணவு, வீடு வாங்குபவர்களுக்கான வங்கிக் கடனின் வட்டிக் குறைப்பு, உள்ளூர் வியாபாரங்கள், மின்கட்டணம் செலுத்த முடியாதவர்களுக்கு இலவச மின்சாரம் மற்றும் குறைந்தபட்ச ஊதியத்தின் வரம்பு உயர்த்தப்படுதல் என அனைத்தும் அதில் அடங்கும். இந்தக் கொள்கைகள் ஏற்கனவே நடைமுறைப் படுத்தப்பட்டுள்ளது. ஹான்டுராசில் 10 சதவிகிதம் வறுமை ஒழிந்துவிட்டது.

நங்கூரமிட்டிருந்த கப்பல்களைக் கண்ட ஜோயல் "அமெரிக்கர் களுக்கு வேண்டுமானால் நினைவுகள் குறைவாக இருக்கலாம், ஆனால் இலத்தீன் அமெரிக்கர்களுக்கு அவ்வாறு இல்லை. 1903 இல் அந்தக் கப்பல்கள் வருவதற்காக கால்வாய் வெட்டிட நிலங்கள் திருடினாரே உங்கள் அதிபர் டெட்டி ரூஸ்வெல்ட் அதை நாங்கள் மறக்கவே மாட்டோம்" என்று குறிப்பிட்டான். மேலும் "இந்தக் கண்டம் முழுவதும் வாஷிங்கடனும், பெருநிறுவனங்களும் செய்த அரசியலை நாங்கள் மறக்கவே மாட்டோம். இறுதியில் உங்கள் அரசும், உங்கள் அரசின்

முன்னாள் செயலாளர் ஹென்ரி கிச்சிங்கரும் பல ஆண்டுகள் பிடிவாதமாகத் தவிர்த்து வந்த ஆட்சிக்கவிழ்ப்பிலும், படுகொலைகளிலும் ஈடுபடத் துவங்கினர். வெளியுலகிற்கான பொது வெளிப் பதிவை தாங்கள் நன்கு அறிவோம். அதாவது கவ்திமாலாவின் ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட அதிபர் ஜாகோபோ ஆர்பெஞ் யுனைடெட் ஃப்ரூட் நிறுவனத்தை எதிர்த்தார் என்பதற்காக 1954 இல் சிஐஏ வின் சதியால் கவிழ்த்தப்பட்டார். மேலும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலி நாட்டு அதிபர் சால்வடோர் அல்லெண்டேவை 1973 இல் சிஐஏ தனது சதியின் மூலம் பதவியிலிருந்து இறக்கியதும், அந்தச் சதியை முன்னெடுத்தது அந்தக் காலத்தில் உலகின் சக்திவாய்ந்த பன்னாட்டு நிறுவனமாக இருந்தது ஐடிடி (சர்வதேச தொலைபேசி மற்றும் தந்தி நிறுவனம்) என்பதும் தான்" என்று கூறிவிட்டு கப்பல்களைப் பார்த்து மீண்டும் கையசைத்தான். மேலும் தொடர்ந்தவன் 'கிரிநேடாவை, ஹைதியை, அர்ஜென்டினா மற்றும் பிரேசிலில் சிஐஏ நிறுவிய சர்வாதிகாரிகளை, கௌதிமாலா, நிகரேகுவா, எல் சல்வேடார், டோரிஜோஸ், ரோல்டோஸ், 2002 இல் எங்கள் அதிபர் சாவேஜை படுகொலை செய்ய முயன்று தோற்றது என அனைத்தையும் நாங்கள் மறக்க மாட்டோம்" என்றவன் என்னை முறைத்தான்.

"நான் சென்று விடவா?' என்று கேட்டு எனக்கு அந்த வரலாறுகள் அனைத்தும் தெரியும் என்பதைச் சொல்லி அதனால்தான் நான் என்ன செய்தேன் என்பதை எழுதியதோடு இன்று பனாமாவிலும் இருக்கிறேன்" என்று கூறினேன்.

"மேலும் ஒன்றே ஒன்று இருக்கிறது. அது உங்களுக்கும் தெரியும்" என்றவன் "ஹான்டுரான் படுகொலை கூட உங்கள் சிஐஏ பள்ளியில் பயிற்சி பெற்ற ஜெனரல் ரோமியோ வாஸ் கு வேழ் தலைமையில் நடந்தது" என்றான்.

மேலும் "ஆம், அது அமெரிக்காவின் பள்ளிதான். அல்லது டோரிஜோஸ் அழைப்பது போல கொலைகாரர்களை உருவாக்கும் பள்ளி' ! என்று சொல்லிவிட்டுக் கால்வாயைப் பார்த்தான். "அதுவும் கால்வாய்ப் பகுதியில் வந்திருக்க வேண்டியது. டோரிஜோஸ் விரட்டியதால் இப்போது அமெரிக்காவில் ஒரு இடத்தில் உள்ளது" என்றான்.

அதைப் புரிந்து கொண்ட நான் ஜியார்ஜியாவில் உள்ள பென்னிங் கோட்டைதானே?" என்று கேட்டேன்.

***

பிறகு அன்று இரவு எனது அறைக்குச் சென்றபின் இஸ்பானிய மொழியில் இருந்த பல அறிக்கைகளை இணையத்தில் வாசித்தேன். அவையனைத்துமே அந்தப் பனாமா வியாபாரி சொன்னதை உறுதி செய்தது. ஹான்டுராசின் 60 சதவிகித குறைந்தபட்ச ஊதிய உயர்வு அந்தக் கண்டம் முழுவதும் சுரங்கங்கள், உணவகங்கள், மளிகைக் கடைகள், விடுதிகள் அல்லது தொழிற்சாலையில் தயாரித்த பொருட்களை விற்பனை செய்யும் கடைகள், இனிப்புப் பொருட்கள் விற்பனையகங்கள் போன்றவற்றை நடத்தி வந்த அனைத்துப் பெருநிறுவனங்களையும் பாதித்தது தெரியவந்தது. அந்த அறிக்கைகள் அனைத்தும் 1968இல் அமைதிப்படைத் தன்னார்வளராக நான் முதல் வாரத்தில் வந்தபோது என்னோடு உணவருந்திய நில அதிர்வு ஆய்வாளர் கூறியதை நினைவூட்டியது. "இந்த நாட்டை நாங்கள்தான் ஆள்கிறோம்" என்ற அந்த வார்த்தைகள் என் மனதில் ஆழப் பதிந்தது.

அரசியல் அமைப்பில் மாற்றங்கள் செய்து அதன் மூலம் மீண்டும் ஒருமுறை அதிபராக ஜெலேயா மேற்கொண்ட முயற்சிகள் தான் படுகொலையைத் தூண்டியது என்பதோடு தனது குற்றச்சாட்டு களை முடித்துக் கொண்டது பெருநிறுவனத்திற்குச் சொந்தமான அமெரிக்கப் பத்திரிக்கை ஒன்று. அரசியலமைப்பிற்கான வாக்கெடுப்பை அவர் ஊக்குவித்தார். ஆனால் பனாமாவில் நான் படித்த மற்றும் கேள்விப்பட்ட அனைத்துத் தகவலின்படியும், இணையத்தில் படித்த இஸ்பானிய மொழி அறிக்கைகளின்படியும் அரசியலமைப்பு மாற்றத்திற்கு அந்தப் படுகொலையும் சிறிதளவு காரணமானது. மேலும் குறைந்தபட்ச ஊதிய உயர்வு குறித்த அதிபரின் உறுதியைக் குழைப்பதற்கும் கூட அது அனைத்தையும் செய்ய வேண்டியிருந்தது.

பனாமாவில் இருந்து நான் அமெரிக்க திரும்பியபோது முக்கிய பத்திரிகைகள் அனைத்தும் ஆங்கிலத்திலிருந்த உண்மையான கதையை தவிர்த்திருந்ததைக் கண்டுபிடித்தேன்.

'இங்கிலாந்து குவார்டியன்' என்ற பத்திரிக்கை 'ஹான்டுரான் அரசின் உயர்மட்ட ஆலோசகர்களாக இருந்த இரண்டு சதிகாரர்கள் அமெரிக்க உள்துறை அமைச்சகத்தோடு நெருங்கிய தொடர்பில் இருந்தவர்கள். ஒருவர் அதிபர் பில் கிளிண்டனின் தனிப்பட்ட வழக்கறிஞரும், செல்வாக்கு மிகுந்த அரசியல் தரகருமான லேனி டேவிஸ். இவர் ஹிலாரிக்கும் ஆதரவாகப் பிரச்சாரம் செய்தார். மற்றொருவர் ஆட்சிக் கவிழ்ப்பிற்காகவே பணியமர்த்தப்பட்ட பில் கிளிண்டனின் விசுவாசியும், அரசியல் தரகருமான பென்னட் ரேட்கிளி ஃப்" என்று வெளியிட்டிருந்தது.

'டெமாக்ரசி நவ்' என்ற பத்திரிக்கை வாஷிங்டன் சட்ட நிறுவனமான கோவிங்டன் மற்றும் பர்லிங் ஆகியவை சிகியூடாவை பிரிதிநிதித்துவப் படுத்தியதாக அறிவித்தது. அதாவது கோவிங்டன் நிறுவனம் கொலம்பியாவில் படுகொலைப் படைகளை" ஒப்பந்தம் செய்ததாக குற்றம் சாட்டப்பட்ட போது அந்நிறுவனத்தின் கூட்டாளி யாகவும், சிகியூடாவை பாதுகாப்பவராகவும் அதிபர் ஒபாமாவின் அரசு முதன்மை வழக்கறிஞரான எரிக் ஹோல்டர் செயல்பட்டார் என்றது. மேலும் விசாரணையின்போது அமெரிக்க அரசால் தீவிரவாதக் குழுக்களாக பட்டியலிடப்பட்ட நிறுவனங்களை பணியமர்த்தியதாக சிகியூடா நிறுவனம் ஒப்புக்கொண்டது. கொலம்பியா நீதிமன்றத்தில் குற்றவாளி என அறிவிக்கப்பட்ட சிகியூடா 5 மில்லியன் டாலர் அபராதம் செலுத்துவதாக ஒப்புக்கொண்டது. முன்னாள் அதிபர் மேனுவேல் ஜெலேயாவை டெமாக்ரசி நவ்வின் நிருபர் எமி குட்மேன் மே 21, 2011 அன்று பேட்டியெடுத்தபோது அவர் இவ்வாறு கூறினார்:

'ஆல்பா என்றழைக்கப்படும் பொலிவேரிய மாற்றத்துடன் கூடிய இலத்தீன் அமெரிக்க நாடுகள் குழுவுடன் நான் சேர்ந்தபோது தான் சதியானது துவங்கியது. எனவே மனதளவிலான ஒரு மோசமான போர் என் மீது அரங்கேற்றப்பட்டது. ஓட்டோ ரீச் (வெனிசுலா நாட்டிற்கான அமெரிக்கத் தூதர் மற்றும் அரசின் இலத்தீன் அமெரிக்க விவகாரங்களுக்கான இணைச் செயலாளர்) என்பவர்தான் இதை ஆரம்பித்தார். மேலும் சிஐஏ வால் உருவாக்கப்பட்ட அமெரிக்க அரசின் முன்னாள் துணைச் செயலாளரான ரோகர் நொரிகா, ராபர்ட் கர்மோனா மற்றும் ஆர்கேடியா ஃபௌண்டேசன் ஆகியவை வலதுசாரிகளோடும், இராணுவக் குழுக்களோடும் தங்களை இணைத்துக்கொண்டு சதியை உருவாக்கினார்கள். மேலும் நான் பொதுவுடைமைவாதி என்றும் இந்த நிலப்பகுதியின் பாதுகாப்பைத் தாக்குகிறேன் என்றும் வாதிட்டார்கள்.

ஈக்குவேடாருக்காக ஜெலேயாவிற்கு எதிராக நடத்தப்பட்ட படுகொலை பற்றி என்ன நினைக்கிறார் என்று 2009 டிசம்பரில் ஹாவர்ட் ஜின்னிடம் கேட்டேன். 'என்ன நான் கொரியாவாக இருந்திருந்தால் அடுத்தது நாமாக இருக்கும் என்று அஞ்சியிருப்பேன்" என்று நயமாக பதிலுரைத்தார்.

அது தீர்க்க தரிசனமாக அமைந்தது.

ஹாவர்ட் தனது எண்பத்தி ஏழாவது வயதில் ஜனவரி 27, 2010 அன்று மாரடைப்பால் இறந்தார். செப்டம்பர் 30, 2010 அன்று ஈக்குவேடார் அதிபர் ர∴பேல் கொரியா மீது படுகொலை முயற்சி நடத்தப்பட்டதற்கான சாட்சியாக இல்லாமல் போய் விட்டார். அமெரிக்கப் பள்ளியான சிஐஏ வில் பயின்றவர்கள் நடத்தியதற்கான அனைத்துக் கூறுகளும் அந்தப் படுகொலை முயற்சியில் இருந்தது. இருப்பினும் மற்ற இலத்தீன் அமெரிக்க நாடுகளில் நடந்த படுகொலைகளைப் போல் அல்லாமல் இராணுவத்தினருக்கு பதிலாக காவல்துறையினரால் தூண்டிவிடப்பட்டிருந்தது. கியூட்டோ வீதிகளில் நடந்த போரில் இராணுவத்திற்கு எதிராக காவல்துறை களமிறங்கியது. அப்போது இராணுவ வீரர்கள் மேம்படுத்தப்பட்டனர். கொரீயாவும் பதவியைத் தக்கவைத்துக் கொண்டார்.

படுகொலை முயற்சி தோல்வியடைந்ததைக் கண்ட நோக்கர்கள் பலரும் அது அதிபரை அதிகார்வப் பூர்வமாகப் பதவியிலிருந்து இறக்க மேற்கொள்ளப்பட்ட முயற்சி அல்ல என்றும் அது ஒரு எச்சரிக்கைதான் என்றும் நம்பினர். உண்மை எதுவாக இருப்பினும், கொரீயா பெரும் எண்ணெய் நிறுவனங்களுக்கு எதிரான தனது நிலைப்பாட்டிலிருந்து உடனடியாகப் பின்வாங்கினார். பெரும்பகுதியான மழைக்காடுகளை எண்ணெய் நிறுவனங்களுக்கு ஏலம் விடப்போவதாக அறிவித்தார்.

அந்தக் காலகட்டங்களில் நான் ஹாவர்டை அடிக்கடி நினைத்துப் பார்ப்பேன். ஈக்குவேடார் நிகழ்வுகளைப் பற்றிய அவரது கருத்துகளை கேட்க விரும்புவேன். நகைச்சுவையாக அவர் சொல்வதுகூட நம்பத் தகுந்த நிகழ்வாக மாறிப்போகும். அவரை இழந்ததன் மூலம் இந்த உலகம் ஒரு மாபெரும் சிந்தனையாளரை, வரலாற்று ஞானியை இழந்தது. நான் ஒரு சிறந்த நண்பரை, வழிகாட்டியை, தூண்டுகோலாக இருந்தவரை இழந்துவிட்டேன். அவரைப் பின்பற்றவே என்னை நான் அர்ப்பணித்துக் கொண்டேன்.

## அத்தியாயம் 5 - பொருளாதார அடியாளாக உங்களது நட்பு வங்கியாளர்

ஈக்குவேடார் தனது வளமையான காடுகளை எண்ணெய் நிறுவனங்களுக்கு ஏலத்தில் விடத் தொடங்கிய ஆண்டு முதல் கொரியாவின் முடிவைக் கண்டித்து எனது வலைப்பக்கத்தில் பல கட்டுரைகள் எழுதினேன். அதற்கான எதிர்வினைகளில் ஒன்று 201இன் பிற்பகுதியில் தெற்கு புளோரிடா மாகாணத்தில் நான் வசித்த இடத்திற்கு அருகில் சேஸ் வங்கியில் பணியாற்றிய நிர்வாகி ஒருவரிடமிருந்து கிடைக்கப்பெற்றேன்.

"ஈக்குவேடார் போன்ற நாடுகளில் நடக்கும் கொடூரமான நிகழ்வுகளைக் கண்டு நீங்கள் கொந்தளித்து, ஆத்திரமடைகிறீர்கள். இங்கே உங்கள் சொந்த நாட்டில் என்ன நடக்கிறது" என்று கேட்டு எழுதியிருந்தார். இறுதியாக ஒரு வேளை இரவு உணவிற்கு வருமாறு அழைத்து அந்த மின்னஞ்சலை முடித்திருந்தார்.

கடற்கரைப் பூங்காவில் உள்ள ரிவர் இல்ல விடுதி யின் தாழ்வாரத்தில் இருவரும் சந்தித்தோம். எங்கள் மேசையிலிருந்து பார்க்கையில் உள்நாட்டுக் கடற்கரை நீர்வழித்தடமும், குளிர் காலத்தைக் கழிக்க தெற்கு நோக்கிச் செல்லும் பல மில்லியன் டாலர் பந்தயப் படகுகள் அணிவகுப்பும் தெளிவாகத் தெரிந்தது.

உணவகப் பணியாளர் அவரது கோப்பையில் எச்சரிக்கையாக மது ஊற்றிக் கொண்டிருந்தபோது நான் உங்கள் பொருளாதார அடியாளின் வாக்கு மூலம் புத்தகத்தைப் படித்தேன், உங்கள் வலைப்பதிவுகளையும் பின்பற்றுகிறேன்" என்றார் அந்த வங்கியாளர். மேலும் இங்கே வங்கியாளர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதை நீங்கள் ஏன் வெளிப்படுத்தவில்லை என்று நான் வியக்கிறேன். பொருளாதார அடியாட்களாகிய நீங்கள் உபயோகப்படுத்தும் கருவிகளைத்தான் நாங்களும் எங்கள் வழிகளில் பயன்படுத்துகிறோம்" என்றார். தொடர்ந்து பேசிய அவர் சமீப காலமாக வங்கியாளர்கள் தங்களது வாடிக்கையாளர்களை அவர்களது வசதிக்கு மீறி வீடு வாங்கச் சொல்லி மூளைச் சலவை செய்வதாகவும் கூறினார். "ஒருநாள் புதிதாகத் திருமணம் செய்து கொண்ட இளம் தம்பதிகள் உள்ளே வந்தனர். தங்களது 3,00,000 டாலர் மதிப்புள்ள வீட்டை அடகு வைக்க வேண்டுமென்று கேட்டனர். ஆனால் நாங்கள் 5,00,000 டாலர் மதிப்புள்ள புதிய வீட்டை வாங்கிக்கொள்ளுமாறு அவர்களைச் சமாதானப் படுத்தினோம்" என்று கூறியவர் தனது கோப்பையில் இருந்த மதுவை மெதுவாகக் குடித்தார். மேலும் "அந்த வீடு இப்போது உங்களுக்குச் சுமையாக இருந்தாலும் பிற்காலத்தில் பல மில்லியன் டாலர் சொத்தாக மாறும் என்று சொல்வோம் என்றார். அடுத்து சோகமாகத் தலையாட்டியவர் 'தங்கள் வங்கியாளர்கள் மீது நம்பிக்கை வைக்குமாறு கூறப்படுவார்கள். மேலும் என்று மே வருங்காலக் கடனாளிகள் பலரைத் தங்களுக்கு கீழ் வைத்திருக்க வேண்டும் என்பதுதான் இன்றைய வங்கியாளர்கள் பணியாக இருக்கிறது. முன்கூட்டியே கடனைத் திருப்புவதைத் தவிர்க்க வேண்டிய அனைத்தையும் நாங்கள் செய்ய வேண்டும். ஆனால் அவையனைத்தும் மாறிவிட்டது. எது மாற்றியது? என்ற கேள்வியை எனக்குள் நானே பலமுறை கேட்டுக்கொண்டதுண்டு. ஆனால் தெளிவான பதில் கிடைக்கவில்லை. இந்த நூற்றாண்டில்தான் அது பெரும்பாலும் நடந்தது. செப்டம்பர் 11 நிகழ்வு, கடல் கொந்தளிப்புகள், பனிப்பாறை உருகுவது, அச்சம், இறப்பு குறித்த நமது கவலைகள் என ஏதாவது ஒன்றுடன் தொடர்புடையதாக இருக்கலாம். உன்னுடைய திறமைகள் அனைத்தையும் உபயோகப்படுத்து, அதிலும் எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக உபயோகப்படுத்தி அத்தனை பேரையும் வளைத்துப் பிடி" என்பதாக இருக்கும் என்று கூறிவிட்டுத் தன் மதுக் கோப்பையை உயர்த்தினார். "குடிக்க வேண்டும், ஆட வேண்டும், செலவழிக்க வேண்டும், மகிழ்ச்சியாக இருக்க வேண்டும். எங்களைப் போன்ற வங்கியாளர்களுக்கு பணம், பணம், பணம் மட்டும்தான் முக்கியம். நாளை என்ற ஒன்று கிடையாது என்ற சிந்தனையை எங்கள் வாடிக்கையாளர்கள் மனதில் விதைக்க முயற்சி செய்தோம். பின்லேடன் நம் அனைவரையும் கொன்று விடுவான். எனவே கடன் வாங்கி அதில் பெரிய வீடு, ஆடம்பர வாகனம் என அனைத்தையும் வாங்கி அனுபவிக்குமாறு கூறுவோம்" என்றவர் கொஞ்சம் மது அருந்தினார். அந்த இளம் தம்பதிகளும் அவர்களைப் போன்ற ஆயிரக்கணக்கானோரும் வங்கி திவாலானதற்காக வழக்குப் பதிவு செய்தபோது

சந்தையிலிருந்து அடித்தட்டு மக்கள் விரட்டி யடிக்கப்பட்டனர், வங்கிகள் ஏலத்தில் விடப்பட்டது, கடன்கள் மீண்டும் நிலைநிறுத்தப்பட்டது மற்றும் அது பெரிய வருவாயை சம்பாதித்ததோடு முடிந்தது" என்று கூறிவிட்டு உள்நாட்டுக் கடற்கரை நீர்வழிப் பாதையைப் பார்த்துப் பேசினார்.

ஒரு பந்தயப் படகு வேகமாகச் சென்றது. அதன் மேல்தளத்தில் நீச்சல் உடையில் இரண்டு அழகான, பொன்னிறமான இளம் பெண்களும், மற்றும் கட்டுடல் கொண்ட இரண்டு பளுதூக்கும் ஆண்களும் இருந்தனர்.

'நான் சொன்னதுபோல்தான் இருக்கிறது, இல்லையா?" என்று கேட்டவர் "அந்தப் படகின் முதலாளி மற்றவர்களை வதைத்து அவர்கள் பணத்தைப் பிடுங்கியிருக்க வேண்டும். இவையனைத்துமே கடனில் கட்டமைக்கப்படுகிறது" என்றார். தனது பெட்டியைத் திறந்து அதிலிருந்து ஒரு கோப்பை எடுத்தார். என்னுடன் பணியாற்றுபவர் ஒருவரைப் பற்றிய கட்டுரை இதில் இருக்கிறது. உங்களுக்கு மிகவும் ஆர்வமானதாக இருக்கும் என்று நம்புகிறேன்" என்று அதைக் கொடுத்தார்.

அதில் "ஒரு வங்கியாளர் வருத்தத்துடன் பேசுகிறார்" என்று தலைப்பிடப்பட்ட நியூயார்க் டைம்ஸ் பத்திரிக்கையின் ஒரு துண்டுக் காகிதம் இருந்தது. ஜேம்ஸ் தெக்ஸ்டன் என்ற சேஸ் வங்கியின் வீட்டுக்கடன் பிரிவின் துணைத் தலைவர் எழுதிய கட்டுரைதான் அது. அவரும், அவரது குழுவும் 2 பில்லியன் டாலர்களை வீடு அடகுக்கடன் மூலம் ஈட்டியிருப்பதாக அதில் சொல்லியிருந்தார். அதிலும் சில "எந்த ஆவணங்களுமின்றி " வழங்கப்பட்டதாக ஒப்புக்கொண்டிருந்தார். மேலும் "விண்ணப்பத்தில் நீங்கள் உங்கள் வேலையைக் குறிப்பிடத் தேவையில்லை, வருமானத்தையும், சொத்து குறித்த தகவல்களையும் குறிப்பிடத் தேவையில்லை ....... அது வேடிக்கையானதுதான் இருந்தாலும் வங்கிகள் அதற்கென தனித் திட்டங்கள் வகுத்துக் கடன்களை வழங்கும் '1 என்று குறிப்பிட்டிருந்தார்.

எங்கள் இருவருக்கும் உணவு வந்தது. உணவருந்திக்கொண்டே எங்கள் நாட்டையும், பல உலக நாடுகளையும் தவிக்க வைத்த பொருளாதார நெருக்கடி பற்றிய பல பொதுவான தகவல்களைப் பேசினோம். "மொத்த அமைப்பும் நாசமாகிவிட்டது, உங்களுக்குத் தெரியுமா? பெரிதாகிப் போன வீட்டுக் கடன் முதல் கல்விக் கடன் வரை அனைத்தும் மக்களைக் கடன் வாங்க வைத்து அடிமைத்தனத்திற்குள் தள்ளுவதே. அதற்காக வீட்டுக் கடன்களும், கல்விக் கடன்களும் மோசமானது என்று நான் கூறவில்லை. சிக்கல் என்ன வென்றால் நல்ல வாழ்க்கை அமையப் பெற என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று நாம் அனைவரும் நம்புகிறோம். அதாவது அமெரிக்கனின் கனவை நிறைவேற்ற எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்ற நம்பிக்கை. அது கடன் எனும் புதைகுழியில் நம்மை நாமே புதைத்துக்கொள்வது உட்பட" என்றார்.

எனது பயிற்சிப் பட்டறையில் சமீபத்தில் கலந்து கொண்ட ஒரு பெண் பற்றி நான் குறிப்பிட்டேன். சமீபத்தில்தான் அவள் சட்டம் பயின்று முடித்திருந்தாள். மேலும் வீடற்ற மக்கள் மற்றும் பாதுகாப்பற்ற குழந்தைகளைக் காக்கத் தன் படிப்பைப் பயன் படுத்துவதுதான் அவளது நோக்கம். ஆனால் தன்னுடைய கல்விக் கடன் 2, 00, 000 டாலருக்கும் அதிகமாக இருப்பதை அவள் கண்டுபிடித்த போது ஒரு பெரும் சட்ட நிறுவனத்தில் பணியாற்றி முதலில் தன் கடன்கள் அனைத்தையும் அடைக்க வேண்டுமென்றும், அதன் பிறகு தன் கனவுகளைத் தொடரப் போவதாகவும் உத்தேசித்திருக்கிறாள்" என்றேன்.

"உத்தேசமா?" என்று எளனம் செய்தார். மேலும் உண்மை என்னவென்றால் அவள் இந்த அமைப்பில் மாட்டிக்கொண்டாள். அடுத்துத் திருமணம் செய்வாள், அவளும் அவள் கணவனும் சேர்ந்து வீட்டுக் கடன் வாங்குவார்கள். அதைக் கட்ட முடியாமல் தவித்துக் கொண்டே ஒரு குழந்தை பெறுவார்கள். மேலும் கடன் வாங்குவார்கள், ........ அப்படியே உறிஞ்சப்பட்டு அவளது உயிரை வங்கிக்கே அர்ப்பணித்து விடுவாள்" என்றார்.

நாங்கள் இருவரும் பிரிந்தபோது, இருள் நீண்டிருந்தது. வண்டி நிறுத்தத்தின் ஒளியில் நின்றுகொண்டிருந்தோம். இதோ பாருங்கள், ஈக்குவேடார் குறித்து நீங்கள் எழுதிய அனைத்தும் என்னைப் பரிதாபப்பட வைத்தது. பிபி எண்ணெய் நிறுவனத்தின் கசிவுகளை சுத்தம் செய்ய நான் முன்வந்தேன். அப்போது அதன் பாதிப்புகளை நான் நேரில் கண்டிருக்கிறேன். தயவு செய்து என்னைத் தவறாக நினைக்க வேண்டாம் அமேசானை எண்ணெய் நிறுவனங்களுக்கு விற்கலாம் என்ற கொரியாவின் முடிவு மிகப்பெரிய தவறு, ஒரு குற்றம். அது ஒரு வகையில் இங்கு அமெரிக்காவையும் பாதித்திருக்கும் வியாதி என்று நான் நினைக்கிறேன். அதையும் நீங்கள் சேர்த்து எழுத வேண்டும் என்று மட்டும் விரும்புகிறேன்" என்று கூறினார்.

அந்த சந்திப்பு என்னை மிகவும் கவலையடைய, கலக்கமடையச் செய்தது. மேலும் ஏமாற்றமடைந்தேன் என்பதைப் பெரிதும் நான் ஒப்புக்கொள்ள வெறுப்பேன். அருகிலிருந்த கடற்கரைக்குச் சென்றேன். சுற்றிலும் உடைகின்ற கடல் அலையின் நுரைகளைக் கண்டேன். எனது பாட்டியின் சகோதரரான மறைந்த எனது மாமா எர்னஸ்டின் முகம் நினைவில் வந்தது. வெர்மான்டில் உள்ள வாட்டர்பரி நகரில் ஒரு வங்கியின் தலைவராகப் பணியாற்றி வந்தார். அவர் 1950களில் ஒவ்வொரு கோடை காலத்திலும் நான், என் அப்பா, அம்மா, பாட்டி என அனைவரும் அவரையும், அவரது மனைவி மேபலையும் காணச் செல்வோம். எர்னஸ்ட் மாமா எங்களுக்கு நகரைச் சுற்றிக் காட்டுவார். அப்போது அவரது வங்கியின் ஆதரவில் கடன் பெற்று உருவான சில வீடுகளையும், வியாபாரத் தளங்களையும், பெருமையுடன் காட்டுவார்

நான் ஐந்தாம் வகுப்பு முடித்திருந்த நேரம் வந்த கோடை காலத்தில் பங்குச்சந்தை குறித்த ஒரு புத்தகத்தைப் படித்தேன். என்னுடைய அடுத்த வாட்டர்பரி பயணத்தின்போது மாமாவிடம் அதுபற்றிக் கேட்டேன்.

"அது ஒரு சூதாட்டம்' என்று கோபப்பட்டார். மேலும் ஒரு சூதாட்ட விடுதி. அங்கே எனக்கு எந்த வேலையும் கிடையாது. நம் பணம் அனைத்தும் உள்ளூர் மக்களிடமிருந்து வருகிறது, அது திரும்ப உள்ளூர் பொருளாதாரத்திற்கே செல்கிறது. ஒவ்வொரு டாலரும் அப்படித்தான்" என்று சொன்னவர் தன் வங்கியில் கடன் வாங்கும் வாடிக்கையாளர் அனைவரையும் ஒரு கூட்டாளியாகவே பார்ப்பதாகக் கூறினார். மேலும் அவர்களுக்கான சிறந்த யோசனைகளை வழங்குவேன். யாராவது ஒருவருக்குப் பணத்தைத் திரும்பச் செலுத்துவதில் சிக்கல் ஏற்பட்டால் என்னையே அவரிடத்தில் வைத்து உணர்ந்து உதவி செய்வேன். நாங்கள் இணைந்து பணியாற்றுவோம்" என்றார்.

கடல் மணலில் அமர்ந்து கொண்டு அலைகளின் மீது நிலவொளி சிதறி ஓடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். எனது மாமாவைப் பொறுத்தவரை முன்கூட்டியே கடனை அடைப்பதை விரும்பாதவர். உள்ளூர் பொருளாதாரத்தின் பின்னால் இயக்க விசையாக இருப்பது தனது பணி மட்டும் அல்ல கடமை என்றும் நம்பினார். அதுவும் அவரது வாழ்வின் மகிழ்ச்சியாக இருந்தது.

எனது மாமாவும், ரிவர் இல்லத்தில் சற்றுமுன் நான் சந்தித்த அந்த வங்கியாளரும் மனிதர்களே, இருவரும் அமெரிக்கர்களே, ஆனாலும் இரண்டு மாறுபட்ட அமைப்பில் இருப்பவர்கள். எனது மாமாவின் பார்வையில், கடன் வாங்குபவருக்கும், கொடுப்பவருக்கும் இடைப்பட்ட ஒப்பந்தத்தில் கடனுக்கு ஒரு முடிவு இருக்கிறது. இப்போதைய வங்கியாளருக்கோ, கடன் என்பது தொடர்ந்து கிடைக்கும் பெரிய இலாபத்திற்கான வழியை அமைக்கிறது. இதுதான் மக்களைப் பொருளாதார அடியாட்களின் அமைப்பிற்குள் சிக்க வைக்கிறது.

இந்த நவீன வங்கியாளர்களை நான் எவ்வாறு வழி நடத்தியிருக்கிறேன் என்று நினைக்கையில் எனது உடல் சிலிர்த்தது. மேலிருந்து எனது மாமா என்னைப் பார்த்துக்கொண்டிருப்பது போலவே உணர்ந்தேன்.....

அந்த இரவிலிருந்து சில மாதங்களுக்கு உள்ளாகவே, அனைத்தையும் இலாபமாக்கிப் பார்க்கும் நவீன வங்கியாளர் களிடமிருந்து ஒரு பெரிய ஊழல் வெடித்தது. 2012 இலண்டன் வங்கிகளுக்கிடையான அளிப்பு விகிதம் அல்லது லிபாரின் விளக்கப்படி பர்க்லேஸ், யுபிஎஸ், ஸ்காட்லாந்து ராயல் வங்கி மற்றும் சில சர்வதேச வங்கிகள் இரக்கமின்றி மக்களின் சொத்துகளை ஏமாற்றத் தகுதி வாய்ந்தவர்களாக இருந்தனர்.

நூற்றுக்கணக்கான ட்ரில்லியன் டாலர் மதிப்பு வாய்ந்த கடன்கள் மற்றும் முதலீடுகளைக் கணக்கிட லிபார் உதவியது. வட்டித் தொகைகளை நிறுவ புறநிலையாகவும், கணிதமாகவும் பெறப்பட்ட திறனளவாக இது ஏற்றுக்கொள்ளப்பட்டது. இருப்பினும் 1991 முதல் 2012 வரை வங்கிகளால் சட்டத்திற்குப் புறம்பாக மோசடியில் ஈடுபட லிபார் பயன்படுத்தப்பட்டது இப்போது தெரியவந்துள்ளது. அதன் விளைவாக வங்கியாளர்கள் சட்டவிரோதமான இலாபங்களை கணக்கிடமுடியாத அளவிற்குக் குவித்துவிட்டனர். ஒருமுறை குற்றம் நிரூபிக்கப்பட்டபோது 9 பில்லியன் டாலர்களுக்கும் அதிகமாக வங்கியாளர்களுக்கு அபராதம் விதிக்கப்பட்டது. இதை எழுதிக் கொண்டிருக்கும் இந்நாள் வரையிலும் ஒரே ஒரு யுபிஎஸ் வர்த்தகர் தவிர ஒரு வங்கி அதிகாரி மீது கூடக் குற்றப்பதிவு செய்யப்படவில்லை .

## அத்தியாயம் 6 - வியட்நாம்: சிறையில் பயின்ற பாடங்கள்

2012ல் தென்கிழக்கு ஆசியாவில் கன்னிவெடி மற்றும் இதர வெடிக்காத பீரங்கிக் குண்டுகளால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவும் முயற்சியில் பங்குகொள்ள நானும் அழைக்கப்பட்டேன். அதுவரை பல் குழுக்களில் இது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபட நான் மறுத்துவந்தேன். ஏனென்றால் ஏற்கனவே நான் கனவிற்கான மாற்றம், பச்சமாமா கூட்டணி மற்றும் மேடைப் பேச்சுகள் என அதிகப்படியான வேலைப்பளுவில் இருந்தேன். இருப்பினும் இது என் பழைய ஞாபகங்களை மீட்டெடுப்பதற்கான வாய்ப்பாக இருக்கும் என்று கருதினேன்.

அந்த பீரங்கிக் குண்டுகள் அனைத்தும் வியட்நாம் போரின் விளைவாக வந்தது. அந்தப் போர் மட்டும் நடக்காமல் இருந்திருந்தால் பொறுப்புகளை உதறிவிட்டு எட்டு ஆண்டுகள் கழித்திருக்க மாட்டேன். அநேகமாக கல்லூரியைக் கூட முடிக்காமல் என்எஸ்ஏ வால் பணியமர்த்தப்பட்டு அமைதிப்படையில் சேர்ந்து அமேசானிலும், அண்டிஸ் தீவிலும் வாழ்ந்து கொண்டு

பொருளாதார அடியாளாக இருந்திருக்க மாட்டேன். பொருளாதார அடியாட்களும், குள்ளநரிகளும் தோற்றதற்கான அடையாளமாக வியட்நாம் பார்க்கப் படுகிறது. மத்திய கிழக்கின் நடப்புச் சூழ்நிலையை முன்கூட்டியே உணர்ந்த அமெரிக்க இராணுவம் அதைக் கையில் எடுத்துக் கொண்டது. எனது வாழ்வின் மிக முக்கிய பங்களிப்பைக் கொடுத்திருந்தாலும் வியட்நாமிற்கு நான் சென்றதே இல்லை. மார்ச் 2013 அன்று அங்கு நடைபெறும் கூட்டத்திற்கான அழைப்பை ஏற்றுக்கொள்ள எனக்கு சிலிர்ப்பாக இருந்தது.

ஹெனாயில் இருந்த எனது இறுதி நாளின் மாலைப் பொழுதில் அனைத்துக் கூட்டங்களும் முடிந்த பிறகு ஹவோ லா சிறைச்சாலை அருங்காட்சியகத்திற்குச் செல்ல முடிவெடுத்தேன். முன்பு 'ஹெனாய் ஹில்டன்" என்றழைக்கப்பட்ட அந்த இடத்தில்தான் பல அமெரிக்க வீரர்கள் சிறை வைக்கப்பட்டார்கள். கூட்டத்தில் கலந்து கொண்ட எனது வயதொத்த "சூடி" என்ற பெண்ணும் என்னோடு இணைந்து கொண்டார். அவளுடைய வாழ்வும் வியட்நாம் போரினால் பெரிதளவில் பாதிக்கப்பட்டிருந்தது.

சூடியும், நானும் ஹாவோ லாவை அடைந்தபோது அது மூடப்பட்டிருப்பது கண்டு பெருத்த ஏமாற்றமடைந்தோம். அங்கிருந்த ஆங்கிலம் தெரியாத நபர் வேறொரு நாள் வருமாறு குறிப்பால் உணர்த்தினார். எனக்கு முழங்காலில் சுழுக்கு ஏற்பட்டிருந்ததால் பிரம்பு உபயோகித்து நடந்து வந்தேன். இப்போது குணமாகத் தொடங்கியிருக்கிறது. எனது பிரம்பை மடி மீது வைத்துக்கொண்டு அருகிலிருந்த இருக்கையில் அமர்ந்தேன்.

சூடி எனக்கு அருகில் அமர்ந்துகொண்டாள். "என்னை மன்னித்துக் கொள்ளுங்கள், நீங்கள் உள்ளே செல்ல வேண்டும் என்று எனக்குத் தெரியும்" என்று கூறியவள் புத்துணர்ச்சி அடைந்தவாறு "நாளை காலை பேங்காக் விமானத்திற்கு கிளம்பும் முன்பே வரலாம்" என்றாள்.

"நாளை ஞாயிற்றுக் கிழமை என்பதால், திறந்திருப்பது சந்தேகமே" என்றேன்.

அப்போது காக்கி உடை அணிந்த ஒரு நபர் நுழைவாயிலுக்கு அடியில் கதவருகே இருந்த மேசையில் வந்து அமர்ந்தார்.

எனது பிரம்பை ஊன்றியவாறு எழுந்து நான் கேட்கிறேன்" என்று கூறிவிட்டு மெதுவாக அவர் அருகில் சென்று "மன்னிக்க வேண்டும்" என்று அவரை அழைத்தேன்.

என்னை உற்றுப் பார்த்தவர் ஆங்கிலம் தெரியாது" என்றார்.

அவருடைய முரட்டுத்தனமான பேச்சினால் நான் பின்வாங்க விரும்பாமல் கதவைப் பார்த்துக்கொண்டு இனிமையாகச் சிரித்தேன். சூடியை நோக்கிப் பிரம்பை அசைத்து அவளையும் அழைத்தேன். 'நாளை ஞாயிற்றுக்கிழமை" என்றேன்.

வேகமாக எழுந்து தனது நாற்காலியைப் பின்புறம் தள்ளினார். தனது பாதத்தைப் பற்றியவாறு எனக்கு வணக்கம் வைத்தார். எனக்குப் பின்னால் வந்து நின்ற சூடியையும், எனது பிரம்பையும் பார்த்தவர் "உங்கள் மனைவியா?" என்று கேட்டு அவளையும் குனிந்து வணங்கினார்.

அவரது காலை இறுகப் பற்றி, ஏதோ வலி இருப்பது போல் முகத்தை சோகமாக வைத்துக்கொண்டு தலையசைத்தார். பிறகு தனது காலை விடுவித்துக்கொண்டு அவரைப் பின் தொடருமாறு குறிப்பால் உணர்த்திவிட்டு நடந்தார்.

நான் சூடியைப் பார்த்தேன். மீண்டும் தீவிரமாக கையசைத்து அழைத்தவர் வியட்நாமிய மொழியில் ஏதோ சொன்னார். வெளியே இருந்த சிறிய முற்றத்தின் வழியாக அவரைப் பின்தொடர்ந்து ஒரு பெரிய இரும்புக் கதவை அடைந்தோம். கதவைத் திறந்து உள்ளே செல்லுமாறு கூறினார்.

உள்ளே ஒலி மங்கி இருந்தது. கண்களைச் சரி செய்து பார்த்தபோது இருபுறமும் இருள் சூழ்ந்த சிறை அறைகள் இருக்க நடுவே நடைபாதையில் நாங்கள் நின்றுகொண்டிருந்தோம். அவர் தனது சட்டைப் பையில் கைவிட்டு வியட்நாம் மதிப்பில் பத்து டாலர் கட்டணச் சீட்டை எடுத்து நீட்டினார். அதைக் காண்பித்தவர் என்னையும், சூடியையும் தனித்தனியே காண்பித்து இரண்டு விரல்களை நீட்டினார். நுழைவுக் கட்டணம் பற்றிய விபரம் தெரியவில்லை என்றாலும் இரண்டு பேருக்கும் சேர்த்து இருபது டாலர் என்பது ஞாயமானதாகத் தோன்றியது.

'நீங்கள் ஒரு முன்னாள் கைதி என்றும், நான் உங்கள் மனைவி என்றும் நினைத்துக் கொண்டான்" என்றாள் சூடி.

"சரியாகச் சொன்னாய்" என்றேன். அவன் இரக்கப்பட்டுதான் எங்களை அனுமதித்திருக்க வேண்டும். பல வருடங்கள் என் வாழ்வைப் பறித்து, என்னை முடமாக வைத்திருந்த இடத்தை என் மனைவிக்குக் காட்ட வேண்டி அழைத்து வந்திருக்கிறேன் என்று அவன் நினைத்திருக்கக் கூடும்.

அவனிடம் கட்டணத்தைச் செலுத்திய பிறகு அங்கிருந்து கீழே ஒரு பெரிய அறைக்கு அழைத்துச் சென்றான். வரலாற்றுக்கு முந்திய காலத்து அரக்கன் போல் அங்கே ஒரு பெரிய கருவி ஒன்று நிழல் களுக்கு வெளியே நீண்டிருந்தது. முதலில் அது ஒரு பளு தூக்கியாக இருக்கலாம் என்று நினைத்தேன். பிறகுதான் நான் தவறாக நினைத்து விட்டதை உணர்ந்தேன். அது கில்லட்டின் என்றழைக்கப்படும் தலை வெட்டும் கருவி என்பதை நம்பவே முடியாமல் பார்த்தேன்.

சுவற்றில் எழுதப்பட்டிருந்த எதையோ பார்த்து "அடக் கடவுளே!" என்று வியந்தாள் சூடி முன்பொரு காலத்தில் ஹாவோ லா பிரெஞ்சு சிறைச்சாலையாக இருந்தது என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. 1800 களின் பிற்காலத்தில் கட்டப்பட்ட இந்த சிறைச்சாலையில் வியட்நாம் கைதிகள் பலரை நில்லட்டினில் தலைவெட்டிக் கொன்றிருக்கிறது பிரெஞ்சு. அந்த அறைக்குள் மேலும் உலாவியபோது சுவற்றில் எழுதப்பட்டிருந்த மேலும் பல விளக்கங் களைப் படிக்க நேரிட்டது. சிறையின் அந்தப் பிரிவு முழுவதும் வியட்நாமியப் பெண் காவலர்களை பணியில் அமர்த்தியிருந்திருக்கிறது பிரெஞ்சு என்பது தெரிய வந்தது. மேலும் நூற்றுக்கணக்கானோர் இங்கு கொடுமைப்படுத்தப்பட்டு, கற்பழிக்கப்பட்டுள்ளார்கள். சுவற்றின் ஒரு பகுதியில் நாய் கூண்டு போல சிறிதாக இருந்த குறுக்கு வெட்டுத் தோற்றம் அது ஒரு தனிமைச்சிறை என்பதைக் காட்டியது. இயல்பான உயரம் கொண்ட கைதிகளில் சிலர் குள்ளர்களைப் போல கால்களை மடக்கித் தரையில்

அமர்ந்திருக்க வேண்டும். மேலும் பொம்மையை பெட்டிக்குள் அடைப்பதுபோல் நெரிசல் மிகுந்த அந்த சிறிய அறைக்குள் அடைக்கப்பட்டிருக்கிறார்கள்.

அந்த அறையைக் கண்டவுடன் அந்த இடத்திலேயே உறைந்து நின்றேன். சக மனிதர்களைத் துன்புறுத்தும் கொடூர எண்ணத்தை மனிதர்களிடையே வளர்த்தது எதுவாக இருக்கும் என்றென்னி வியந்தேன். இத்தனை கொடூரமாக இருக்கும் பிரெஞ்சுக்காரர்கள் தங்களது கலை, இலக்கியம், மனிதநேயம் மீது மட்டும் எவ்வாறு பெருமை கொண்டார்கள்? கில்லட்டினை நிறுவவும், வியட்நாமியப் பெண்களைக் கற்பழிக்கவும், கொடுமைப்படுத்தவும் எப்படிப்பட்ட சிந்தனை அவர்களை வழிநடத்தியது? கத்தோலிக்க மதத்தைப் பரப்பிய அவர்களின் மத நம்பிக்கைகைகள் மூலமாகத் தங்களை ஞாயப்படுத்திக் கொண்டதை நினைவு கூர்ந்தேன். ஆனால் அதன் உண்மையான இலக்கு வேறு. அது நவீன பொருளாதார அடியாட்களைப் போன்றது. பணக்கார பிரெஞ்சு உயர் வகுப்பினர் பெருநிறுவனங் களுக்காக தேநீர், குழம்பிக் கொட்டை, கஞ்சா போன்ற பொருட்கள் விற்பனை செய்யவும், அதன் மூலம் கொள்ளை இலாபம் ஈட்ட வேண்டியும் ஏழை இளைஞர்களை இந்தோசீனா என்றழைக்கப்பட்ட வியட்நாம் எல்லைப்பகுதிக்கு அனுப்பினார்கள். பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த அந்த இளைஞர்கள் போரின் கொடுமைக்கு பலியானார்கள். கொலை செய்யப்பட்டவர்கள் போக எஞ்சியிருந்தவர்கள் கொடுமைக் காரர்களாகவும், கற்பழிப்பவர்களாகவும் மாறிப் போனார்கள். சுற்றிலும் பார்த்தேன், அந்தக் காவலாளியையும், சூடியையும் கண்ணுக்கு எட்டியவரை காணவில்லை.

முடிந்தளவு வேகமாக அந்த கில்லட்டின் அறையிலிருந்து மங்கிய ஒளி வீசிய நடைபாதை நோக்கி வெளியேறினேன். எனது வலதுபுறம் சுவற்றில் இருண்ட வழி தெரிந்தது. எனது கைபேசியை எடுத்து அதிலிருந்த ஒளி மூலம் அதற்குள் பார்த்தேன். குகை போன்ற அந்தச் சிறைப்பகுதி முற்றிலும் காலியாக இருந்தபோதும் முன்பு கொடுமையாகக் கற்பழிக்கப்பட்ட பெண்களின் அஞ்சிய முகங்களின் பிம்பம் தெரிவது போல் இருந்தது. ஒளியை அணைத்துவிட்டு வேகமாக வாயிற்பகுதியை நோக்கி ஓடி வந்தேன்.

- கதவின் வழியாக வந்த ஒளியை ஒரு நிழல் இரண்டாகப் பிழந்தது. "நான் போதுமானளவு பார்த்து விட்டேன். எனக்கு கொஞ்சம் அச்சகமாக இருக்கிறது. நான் விடுதிக்குச் செல்கிறேன். இரவு உணவு வேளையின்போது சந்திப்போம்" என்று கூறிவிட்டு சூடி சென்றுவிட்டாள்.

அவளது நிழல் நகர்ந்தது. நான் மீண்டும் அந்த இருண்ட சிறைப்பகுதியைப் பார்த்தேன். எனக்குள் ஒருவித பயம் ஊடேரியது. கதவை நோக்கி நடந்து வெளியே வந்த நான் சற்று காற்றோட்டமாக நின்று பெருமூச்சு விட்டேன்.

வெளியே சூரிய ஒளியில் நுழை வாயிலில் நின்று கொண்டிருந்த போது எனது மனதை மாற்றிக் கொண்டேன். நானும் போதுமான அளவு பார்த்துவிட்டதாக நினைத்தேன். சீருடை அணிந்த அந்தக் காவலாளி வந்தார். பணிவாக மற்றொரு நடைபாதை நோக்கிக் கை காண்பித்தார். நான் தயங்கினேன். இம்முறை மேலும் பணிவாக அழைத்தார். நானும் பணிவாகவே அவர் பின்னால் சென்றேன்.

மங்கிய ஒளி வீசிய அந்த அறைக்குள் நுழைந்ததும் வரிசையாக இருபுறமும் ஒருவரை ஒருவர் பார்த்தவாறு கைதிகள் அமர்ந்திருப்பது போன்ற ஓவியத்தைப் பார்த்து அதிர்ச்சியுற்றேன். கால்களைத் தரையுடன் சேர்த்து சங்கிலியால் கட்டப்பட்ட வியட்நாமிய

ஆண் கைதிகள் என்று தெரிந்தது. நான் நடுவில் நடந்து சென்றேன். ஒவ்வொருவரும் மற்றவரைக் கருணையுடன் பார்த்தவாறு அருகில் இருந்தவரைப் பற்றிக்கொண்டு அமர்ந்திருப்பதுபோல் தெரிந்தது. அனைவரும் உடல் மெலிந்து இருந்தார்கள், எலும்பும், தோலுமாக இருந்த அவர்களது தோற்றம் அவர்களது களைப்பை உணர்த்தியது. அந்த வரிசைகளின் ஒருபுறம் அவர்கள் சிறுநீர் மற்றும் மலம் கழிக்க இரண்டு துளையிடப்பட்டு, அங்கே இரண்டு வாளிகளும் வைக்கப்பட்டிருந்தது. இதில் எப்படி ஒவ்வொருவரும் சங்கிலியிலிருந்து அவிழ்த்து விடப்பட்டு ஒவ்வொருமுறையும் போக முடியும்? என்று வியந்தேன்.

ஒரு விதமான விரக்தியையும், தனிமையையும் உணர்ந்தேன். நான் உள்ளே வந்த பாதையைத் திரும்பிப் பார்த்தேன். என்னுடன் வந்தவரைக் காணவில்லை. நான் தனியாகத்தான் நின்றிருந்தேன். அந்த இடத்தை விட்டு உடனடியாக வெளியேற வேண்டும் என்று தோன்றியது. இருப்பினும் இறுதியாக ஒருமுறை கைதிகள் அமர்ந்திருந்த அந்த வரிசையைப் பார்த்தேன். அவர்கள் உயிரோடு இருப்பது போல் தோன்றியது. உயிரற்றும் இருப்பது போலவும், உயிருக்குப் போராடுவது போலவும் கூடத் தோன்றியது. எனது தடியை உயர்த்தி அவர்களை வணங்கிவிட்டு மெதுவாக வெளியேறினேன்.

உடன் வந்த காவலாளி இரும்புப் படிக்குக் கீழிருந்த வாயிலில் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தார். அதில் ஏறிச் சென்றால் கில்லட்டின் இருந்த அறைக்கு மேல்தளத்தில் கட்டிடத்தின் வெளிப் புறத்திற்குச் செல்லலாம். அடிபட்ட எனது முழங்கால் வலித்தபோதும் அவரைப் பின்தொடர்ந்து படியேறினேன். அங்கே மேலிருந்த கதவைத் திறந்தார். மங்கிய ஒளி வீசிய அறைக்குள் சென்றேன்.

அந்த அறை முழுவதும் பிரெஞ்சுகாரர்கள் வெளியேறி நெடு நாட்களுக்குப் பிறகு எடுக்கப்பட்ட புகைப்படங்களால் நிரம்பியிருந்தது. அந்த மங்கிய ஒளியில் தெரிந்த புகைப்படங்கள் அனைத்தும் அமெரிக்க இராணுவத்தினரைக் காட்டியது. அதிலும் பெரும்பாலானோர் விமானிகள். சிலர் வரிசையில் சிரத்தையாக நின்றார்கள், மற்றவர்கள் சிறைச்சாலையைச் சுற்றிப் பணியாற்றி வந்தார்கள். குறிப்பாக ஒரு படத்தில் இருந்த பெரிய மேசையில் சிலர் நன்றி அறிவிப்பிற்காக விருந்து வைத்துக் கொண்டிருந்தார்கள். அதைத் தொடர்ந்து அமெரிக்கர்கள் சிறைக் காவலர்களை விடுதலைக்காக வரவேற்கும் போரின் இறுதிக் காட்சிகளைக் காட்டும் புகைப்படங்கள். சிறைக் கைதிகளான ஆண்கள் கவலையிலும், பெருந்துயரத்திலும் இருந்ததை எந்தப் புகைப்படமும் விளக்கவில்லை. இருப்பினும் இவர்களுக்கும், கீழே கில்லட்டின் இருந்த தளத்தில் குறுகிய அறைக்குள் இருந்த மனிதர்களுக்கும் இடைப்பட்ட வேறுபாடு தெளிவான ஒரு தகவலை எடுத்துக்காட்டியது. வியாட்நாம் கைதிகளை பிரெஞ்சுக்காரர்கள் நடத்தியதைக் காட்டிலும் வியட்நாமியர்கள் அமெரிக்கக் கைதிகளை மனிதநேயத்தோடு நடத்தியிருக்கிறார்கள் என்பதுதான் அது. இது உண்மை என்பது உறுதியாகத் தெரியவில்லை . குற்றத்தை ஒத்துக் கொள்ள வேண்டி அமெரிக்க வீரர்கள் கொடுமைப் படுத்தப்பட்டதாக எனக்குத் தெரியவில்லை .

இந்தப் புகைப்படங்களைப் பார்க்கும்போது, நாபாம் எரிபொருள் ஊற்றப்பட்ட தங்கள் கிராமத்திலிருந்து வியட்நாமியக் குழந்தைகள் நிர்வாணமாக தப்பியோடியதைக் காட்டும் புகழ்பெற்ற புகைப் படமும், ஈராக்கில் உள்ள அபு கரைச் சிறைச்சாலையில் இருக்கும் முகமூடி அணிந்த ஆண்கள் கைவிலங்கிடப்பட்டு, குருதி வடிய அடிவாங்கி, தரையில் இழுத்துச்

செல்லப்பட்டு, அமெரிக்க வீரர்களாலும், சிஜஏ முகவர்களாலும் ஏவப்பட்ட கொடூரர்களால் தாக்கப்படும் சமீபத்திய புகைப்படமும் நினைவிற்கு வந்தது. நான் அடுத்த அறைக்கு விரைந்தேன். சைகானிலிருந்து அமெரிக்கா வெளியேறிய நாட்களுக்கு முன்னர் ஹெனாயில் அமெரிக்கப் படைகள் தண்டிக்கப்பட்டதைக் காட்டும் புகைப்படங்களால் அந்த அறை முழுவதும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அரசு கட்டிடங்கள், பள்ளிகள், பௌத்த மதக் கோயில்கள் என அனைத்தும் இடிக்கப் பட்டதைக் காட்டியது. அந்த நேரத்தில் நிக்சனை நினைவு கூர்வதாக எனக்குத் தோன்றியது. இந்தப் படுகொலைதான் வெற்றிக்கான இறுதிப் பயணம் என்று தொலைக்காட்சியின் நிழற்படக்கருவிக்குக் கையசைத்துச் சென்ற நிக்சன் 'மீண்டும் அவர்களைக் கற்காலத்தில் தள்ளுவோம்" என்று பிரகடனம் செய்தது நினைவில் வந்தது. இருப்பினும் நான் கண்ட இந்தப் புகைப்படங்களின் மூலம் தெரிந்து கொண்டது என்னவென்றால் அமெரிக்கா தனது போரில் தோற்றதாகவே அறியப்படுகிறது என்பதுதான். இந்தப் புகைப் படங்கள் பழிவாங்கிய கதைகளைத்தான் கூறுகிறது என்றும் வெற்றியின் வீர நடையை அல்ல என்பதும் புரிந்தது.

பௌத்த மதக் கோவில் இடிக்கப்பட்டிருந்த புகைப்படத்தை மீண்டும் பார்த்தேன். இதுபோன்ற காரியங்களில் ஈடுபடும்போது அந்தத் தலைவர்கள் என்ன நினைத்திருக்கக் கூடும் என்று வியந்தேன். இப்படிப்பட்ட இரக்கமற்ற செயல் மக்களை எவ்வாறு அவமதித்திருக்கிறது என்பதையும், இத்தகைய பண்பாடுகள் நாட்டின் நன்மதிப்பைக் கெடுத்து இரண்டாம் உலகப் போரில் வென்றதற்கான புகழைப் பெற்றிருக்கிறது என்பதையும் அவர்கள் பார்க்கவில்லையா?

நான் அந்த அறையைவிட்டு வெளியேறி அடுத்த அறைக்குச் சென்றேன். அது முற்றிலும் கறுப்பாக இருண்டிருந்தது. பிறகு எனது கைபேசியின் ஒளியில் அந்த அறையைச் சுற்றிலும் நோட்டமிட்டேன். அது பல கைதிகளை அடைத்து வைக்கும் மற்றொரு வெற்று அறையாக இருக்கலாம். குளிர்ந்த சுவற்றில் சாய்ந்து, அப்படியே தரையில் அமர்ந்தேன். எனது கைபேசியிலிருந்து வெளியேறிய ஒளி எனக்குள் சுழன்ற உணர்ச்சிகளை குவித்ததுபோல் இருந்தது. நான் அவமானமடைந்து, துன்பமடைந்து, கோபப்பட்டபோதும் குழப்பமடையும் விதமாக ஏதோவொன்றை என்னால் இனம் காண முடியவில்லை.

போரில் துன்பப்பட்ட மக்கள், இந்தச் சிறையில் வாடியவர்கள், வியட்நாமிய ஆண்கள் மற்றும் பெண்கள், அமெரிக்க வீரர்கள், எனக் கொடுமை அனுபவித்த சிறை தண்டனை பெற்ற, கொலை செய்யப்பட்ட அனைவரையும் அவர்களது குடும்பத்தையும் நினைத்து நான் வருந்தினேன். கொடுமை செய்யப் பணிக்கப்பட்ட சிறைக் காவலர்களையும், கொலை செய்யப் பணிக்கப்பட்ட போர் வீரர்களையும் நினைத்து நான் பரிதாபப்பட்டேன். ஒரு உயிரைப் பறிப்பதிலும், அவர்களது குழந்தைகளை அனாதைகளாக்குவதிலும் ஏற்படுகிற அவர்களது மனநிலையை நினைத்து வருந்தினேன். மேலும் போரில் தப்பிப் பிழைத்து உளவியல் ரீதியாக பாதிக்கப்பட்டு மனநலக் காப்பகங்களில் அடைக்கலம் போனவர்களையும், தற்கொலை செய்து கொண்டவர்களையும் நினைத்து வருந்தினேன். எனது கைப்பேசியின் ஒளி ஊடுருவிய எதிர் சுவரில் போரில் கலந்து கொள்ளும் வாய்ப்பைப் பெறாதமைக்கு நிம்மதியடையும் என் மனநிலையைக் கண்டேன். நான் யாரையும் கொலை செய்யவில்லை, எந்த நகரத்தின் மீதும் குண்டு வீசவில்லை , கன்னி வெடிகளைப் புதைக்கவில்லை.

பிறகும் குற்றவுணர்ச்சியிலிருந்து மீளெல முடியாமல் தடுமாறினேன். நான் மோசடி செய்த மக்களின் நிலை என்ன ? அச்சுறுத்தல்களும், இலஞ்சங்களும் எத்தகையது? வளர்ச்சி என்ற

பெயரில் என்னால் கொள்ளையடிக்கப்பட்ட இயற்கை வளங்களின் நிலை என்ன? இவையனைத்தும் எவ்வாறு கொலை, கற்பழிப்பு, கொடூரத் தாக்குதல் ஆகியவற்றிற்கு ஈடாகும்? நான் செய்த சுரண்டலும், மழைக்காடுகள் அழிப்பும் கன்னி வெடிகளுக்கும், தரைமட்டமாக்கப்பட்ட கோவில் களுக்கும், பற்றி எறியும் கிராமங்களில் நிர்வாணமாகக் குழந்தைகள் அழுதுகொண்டு ஓடுவதற்கும் எவ்வாறு ஒப்பிட முடியும்? இத்தகைய கேள்விகளால் நான் குழப்பமடைந்து, அஞ்சி நடுங்கியபோது எனக்கு மெய் சிலிர்த்தது.

கதவு தட்டும் சத்தம் கேட்டது. அது உலோகக் கதவு என்பதால் ஹெனாய் ஹில்டன் முழுவதும் அது எதிரொலித்தது. இரவு நான் அங்கேயே அடைபட்டுக் கிடந்திட வாய்ப்புள்ளது என்று தயங்கியவாறு துள்ளி எழுந்தேன். அந்தக் காவலாளி என்னைக் கைவிட மாட்டார் என்ற சிறிய நம்பிக்கையோடு குளிர்ந்த சுவர் மீது சாய்ந்தேன். நான் ஒரு அமெரிக்கன் என்பதால் அவ்வாறு நடக்க வாய்ப்பில்லை என்றும் தோன்றியது.

ஏன் அமெரிக்கர்களுக்கு அப்படியொரு சலுகை உணர்வு? என்னதான் இந்த நாட்டை நாங்கள் அழிக்க நினைத்திருந்தாலும் அருங்காட்சியகமாக மாற்றப்பட்ட சிறைக்குள் இரவு முழுவதும் அடைக்கப்பட மாட்டோம் என்ற நம்பிக்கையும் சிறிதளவு இருக்கிறது. இதில் என்ன நீதி இருக்கிறது? மேலும் கடன் மூலம் நாடுகளை அடிமைப்படுத்தி அதன் அதிபர்களை அச்சுறுத்தி ஊழலுக்கு ஆட்படுத்திய எங்குமே பாதுகாப்பாக உணர்வதற்கு என்ன உரிமை இருக்கிறது ? என்போன்றவர்களுக்கு?

சுவற்றின் குளிர் என்னை மேலும் நடுக்கங்கொள்ளச் செய்தது. ஒரு பொருளாதார அடியாளாக நான் செய்த காரியங்களை எவ்வாறு ஒரு போர் வீரருக்கும், அவர் செய்த கொடுமைகளுக்கும் ஒப்பிட முடியும்? ஒப்பீடு செய்வதில் இங்கு குழப்பம் அல்ல என்பதைப் பிறகுதான் உணர்ந்தேன். இராணுவம் காத்துக் கொண்டிருப்பதை வைத்துதான் பொருளாதார அடியாட்கள் மதிப்பிடப்படுகிறார்கள். இறுதியில் மாற்று வழியை யோசிக்க வேண்டும் என்பது மட்டுமே முக்கியமானதாக உள்ளது. நமது அச்சத்தில், எல்லைகளைப் பிடிக்கவும், இயற்கை வளங்களைச் சுரண்ட வேண்டியும் ஏற்படுகிற பேராசையில் மனிதர்கள் மாற்று வழியை யோசிக்கிறார்கள். பிறகு செயல்படாத சுரண்டல் நடைமுறைகளிலிருந்து வெளிவர வேண்டியதாகிவிடுகிறது. மயக்கத்திலிருந்து நாம் தெளிய வேண்டும்.

விளக்கை அணைத்துவிட்டு பல ஆண்டுகளாக பல மக்கள் துன்புற்ற அந்தச் சிறையின் இருளில் அமர்ந்து கொண்டு பொருளாதார அடியாட்களும், குள்ள நரிகளும் எப்படிப்பட்ட கூறுகளை உபயோகப்படுத்தினார்கள் என்றும், வியட்நாம் போர் முடிவுறவிருந்த காலத்திலிருந்து எவ்வாறு அவை மாற்றம் கொண்டது என்றும், ஒரு பொருளாதார அடியாளாக எனது துவக்கத்தையும் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன்.

## அத்தியாயம் 7 - இஸ்தான்புல்: நவீனப் பேரரசுக்குரிய கருவிகள்

1970களில் பொருளாதார அடியாட்கள் செயலாளர்களாகவும், ஆலோசகர்களாகவும் ஒரு சில பன்னாட்டுப் பெருநிறுவனங்களிலும், ஆலோசனை நிறுவனங்களிலும் பணியாற்றி வந்தார்கள். இன்றைய பொருளாதார அடியாட்கள் பல பன்னாட்டு நிறுவனங்கள், ஆலோசனை

நிறுவனங்கள், முதலீட்டு மையங்கள், தொழில் நிறுவனக் குழுமங்கள், மற்றும் இவையனைத்திற்கும் அரசியல் ஆலோசகர்களாகவும் பணியாற்றுகிறார்கள்.

எனது வியட்நாம் பயணம் முடிந்து ஒரு மாதம் கழித்து ஏப்ரல் 2013 இல் பழைய மற்றும் புதிய பொருளாதார அடியாட்களுக்கு இடையிலான ஒற்றுமை மற்றும் வேறுபாடுகள் என்னுள் ஓடிக் கொண்டேயிருந்தது. எனது விடுதியின் சாளரத்தின் வழியாக அந்த நகரை ஆண்ட பேரரசுகளின் சாட்சியங்களாக விளங்கும் பழங்காலக் கட்டிடங்களையும், வாயிற் கோட்டங்களையும் பார்த்தேன். "ஒரு பொருளாதார அடியாளின் வாக்குமூலம்" நூல் வெளியான பிறகு பல முறை தொழில் நிர்வாகிகள் மாநாடுகளில் உரையாற்ற இஸ்தான்புல் அழைக்கப்பட்டிருக்கிறேன். வரலாற்றுச் சிறப்புமிக்க அந்த நகரம் சர்வதேச மாநாடுகளை நடத்தும் மையமாக விளங்கியது.

பொருளாதார அடியாட்களாகச் சிதைந்து போன நிதிப் பகுப்பாய்வு, பெரிதுபடுத்தப்பட்ட திட்டங்கள், தில்லுமுல்லு செய்யப் பட்ட கணக்கு வழக்குகள், இரகசியங்கள், மோசடி, அச்சுறுத்தல்கள், கையூட்டுகள், அபகரிப்புகள், என்று மே நிறைவேற்ற முடியாத பொய்யான வாக்குறுதிகள், கடன் மூலம் அடிமைப்படுத்துதல் ஆகியவற்றை உள்ளடக்கிய தவறான பொருளாதாரம் என்று எனது நாட்களில் உபயோகப்படுத்திய மூலக் கூறுகளை எண்ணிப் பார்த்தேன். இதே கூறுகள்தான் இன்றும் உபயோகப்படுத்தப்படுகிறது. அதிலிருந்த ஒவ்வொரு படிநிலையிலும் இன்று பல உறுப்புகள் இருந்தன. அதைத் தீவிரமாக ஆய்வு செய்பவருக்கு மட்டுமே விளங்கும். மேலும் இலக்கை அடைய எப்படிப்பட்ட செயல்களும் ஞாயப்படுத்தப்படும் என்பது இவையனைத்தையும் கட்டியமைக்கக் கூடிய நம்பிக்கையாக இருக்கிறது.

இத்தகைய பொருளாதார அடியாட்கள் முறையானது இன்று அமெரிக்கா உட்பட பொருளாதார வளர்ச்சி அடைந்த நாடுகளிலும் வேலை செய்கிறது என்பதே இதில் மிகப்பெரிய மாற்றம். இது எங்கும் உள்ளது. மேலும் அதன் ஒவ்வொரு கூறுகளுக்கும் பல வேறுபாடுகள் உள்ளது. இன்று ஆயிரக்கணக்கான பொருளாதார அடியாட்கள் உலகம் முழுவதும் பரவிக் கிடக்கிறார்கள். அவர்கள் உலகை ஆளும் பேரரரசை உருவாக்கியிருக்கிறார்கள். அவர்கள் வெளிப்படையாகவும், மறைமுகமாகவும் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். தொழில் புரிவதற்கான வழக்கமான வழி என்று இந்த முறை மிகவும் ஆழமாகவும், விரிவாகவும் நம்பப்படுகிறது. அதனாலேயே பெருவாரியான மக்களை இது விழிப்படையச் செய்யவில்லை.

பொருளாதார அடியாட்களாகிய இத்தகைய ஆண்களும், பெண்களும் அரசு அதிகாரிகளை சமரசம் செய்து தங்களுக்குச் சாதகமாக வரி விதிக்கவும், சட்டதிட்டங்களை நடைமுறைப்படுத்தவும் வழி செய்கின்றனர். தங்களுடைய வசதிகளை முன்னிலைப் படுத்துவதற்கான வாய்ப்பினைப் பெறுவதற்கு அனைத்து நாடு களையும் தங்களுக்குள் போட்டியிட வலியுறுத்துகின்றனர். தங்களுடைய உற்பத்தி நிறுவனங்களை ஒரு நாட்டிலும், வரிப் பாதுகாப்பு அளிக்கும் வங்கிக்கணக்குகள் மற்றொரு நாட்டிலும், தொடர்பு மையங்கள் மூன்றாவது ஒரு நாட்டிலும், தலைமையகம் நான்காவதாக மற்றொரு நாட்டிலும் என வைத்துக்கொள்ளும் திறன் மகத்தான அந்நிய முதலீடுகளை அவர்களுக்கு வழங்குகிறது. குறைந்தபட்ச சுற்றுப்புறச் சூழல் மற்றும் சமூகப் பாதுகாப்பு குறித்த விதிமுறைகளைத் தளர்த்துவதிலும், ஊதியம் மற்றும் வரிகளைக் குறைப்பதிலும் இவர்களுக்கான சலுகைகளை அதிகப்படுத்திடும் நோக்கில் அனைத்து நாடுகளும் ஒன்றிற்கொன்று போராடி வருகிறது. மேலும் பல நேரங்களில் இவர்களுக்கான மானியங்களை அதிகரிப்பதற்காக அரசுகள் தங்களது கடன் சுமையை அதிகரித்துக் கொள்கின்றன. பொருளாதார வளர்ச்சியடைந்த நாடுகளோடு

சேர்த்து ஐஸ்லாந்து, இஸ்பெயின், அயர்லாந்து, கிரீஸ் ஆகிய நாடுகளும் கடந்த பத்து ஆண்டுகளாக இதுபோல் செயல்படுவதைக் காண்கிறோம். நுண்ணிய அணுகுமுறைகள் தோல்வியடையும் போது தாங்கள் இரகசியம் என்று நினைத்துக்கொண்டிருந்த, சேதத்தை விளைவிக்கும் சொந்த வாழ்வின் கூறுகள் சில வெளிப்படுத்தப்படுவதையும், போலியாக சித்தரிக்கப்படுவதையும் அரசு அதிகாரிகள் கற்றுக் கொண்டார்கள்.

மற்றொரு பெரிய மாற்றம் பொருளாதார அடியாட்கள் முறையின் தந்திரங்களுக்காக உபயோகப்படுத்தப்படும் சீராக்கங்களில் உள்ள தெளிவு. பிறகு அது வியட்காங் மற்றும் இதர புரட்சியாளர்கள் குழுக்கள் அல்லது வசதியான அமெரிக்க வாழ்க்கை முறைக்கு வரும் அச்சுறுத்தல்கள் ஆகியவற்றின் மூலம் பொதுவுடைமை வாதிகளின் ஆக்கிரமிப்பிலிருந்து உலகைப் பாதுகாக்கிறது. இன்று அந்தச் சீராக்கங்கள் தீவிரவாதத்தை நிறுத்துகிறது, இசுலாமிய பயங்கர வாதிகளிடம் சண்டையிடுகிறது, பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கிறது, நமது வசதியான வாழ்க்கை முறையைப் பாதுகாக்கிறது

பிறகு அன்று நான் எனது அறையிலிருந்து வெளியேறி லிபியாவிற்கான துருக்கியின் முன்னாள் தூதர் உலுக் ஒழுல்கர் அவர்களைச் சந்திக்கச் சென்றேன். பெரும் அறிஞரான அவர் ஐரோப்பிய யூனியன், பொருளாதார ஒத்துழைப்பு மற்றும் வளர்ச்சிக்கான அமைப்பு ஆகிய இரண்டிற்குமான நாட்டின் பிரிதிநிதியாக விளங்கினார்.

குடிப்பதற்குத் துருக்கிய குழம்பி சொல்லிவிட்டு, மெடிட்டரேனியன் முதல் கருங்கடல் வரை போக்குவரத்திற்கு பயன்படுவதோடு ஆசியாவையும், ஐரோப்பாவையும் பிரிக்கின்ற போஸ்போரஸ் நீர்வழித் தடத்தை வேடிக்கை பார்த்தவாறு ஒரு குழம்பியகத்தின் வெளிப்புறம் இருந்த நாற்காலியில் அமர்ந்திருந்தோம். பழங்கால கிரீஸ், பெர்சியா மற்றும் இரோம் நகரங்களுக்கான வர்த்தக மார்க்கமாக போஸ் போராஸ் பங்காற்றியது குறித்து இருவரும் பேசிக்கொண்டிருந்தோம்.

15: பொருளாதாரம்தான் அதிகாரத்தின் சாவி என்று உங்கள் புத்தகத்தில் கூடக் கூறியிருந்தீர்கள்" என்றார் உலுக்.

அப்போது எங்களைக் கடந்து சென்ற ஒரு சரக்குக் கப்பலைக் காட்டி அனைத்தும் வணிகம்" என்றேன்.

"ஆம், அதிலும் கடன்" என்றார் சிரித்தவாறு. பேசிக்கொண்டே பணியாளர் கொண்டு வந்த குழம்பியை ருசித்தார். "நாடுகளுக் கிடையே கடன்களால் இணைத்து வைப்பதே உங்கள் பணி என்று வலியுறுத்துகிறீர்கள்" என்று கூறிக் கொண்டு கோப்பையின் கைப்பிடியை உற்றுப் பார்த்தார். "அச்சமும், கடனும் இந்தப் பேரரசின் இரண்டு மிகப்பெரிய ஆயுதங்கள்" என்று கூறிவிட்டுக் கோப்பையை மேசை மீது வைத்தார். "இராணுவம்தான் பேரரசை நடத்திச் செல்கிறது என்று பெரும்பாலானோர் நினைக்கின்றனர். ஆனால் நீங்கள் நடத்தும் போர்தான் முக்கியமானது. ஏனென்றால் அது ஏற்படுத்தும் அச்சுறுத்தல்தான் பயத்தை விதைக்கிறது. அதனால் பயந்துபோன மக்கள் தங்கள் பணங்களைப் பாதுகாத்துக்கொண்டு பிளவுபட்டு நிற்கிறார்கள். அதற்காக மேலும் கடன் வாங்குகிறார்கள்" என்று சொல்லிச் சிரித்தார். நாம் கடன் வாங்குகிறோமோ இல்லையோ, கடன் நம்மை அடிமை விலங்குகொண்டு கட்டி

வைக்கும். அதனால்தான் பொருளாதார அடியாட்களின் அணுகுமுறை போரைக் காட்டிலும் மிகவும் ஆக்கப்பூர்வமானதாக உள்ளது" என்றார்.

லிபியாவில் அவரது அனுபவத்தைப் பற்றி நான் கேட்டபோது நவீனப் பேரரசுக் கட்டிடத்தில் சிறப்பான வழக்காய்வு ஒன்றை முவாமர் கதாஃபி வழங்கியதாகக் கூறினார். "அவர் ஒரு கொடுமையான சர்வாதிகாரிதான், இருப்பினும் என்னைப் பொறுத்தவரையில் அவரது மக்களுக்கு நிறைய நன்மைகளைச் செய்திருக்கிறார்." என்றார். "இந்தோனேசியா, ஈக்குவேடார் போன்ற நாடுகளில் உள்ள தலைவர்கள் நீங்கள் எழுதிய மற்ற தலைவர்களைப் போல் அல்லாமல் லிபியாவின் எண்ணெய் மூலம் அடைந்த வருமானத்தை முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்தினார். ஆனால் சோவியத் பக்கமான அவரது நிலைப்பாடு அமெரிக்காவை நிலைகுழைய வைத்தது" என்ற உலுக் தொடர்ந்து சோவியத் ஒன்றியம் உடைந்த பிறகு கதாஃபி தான் தனிமைப்படுத்தப்பட்டதாகவும், மிகவும் ஆபத்தான சூழ்நிலையில் இருப்பதாகவும் உணர்ந்தது பற்றியும் விளக்கினார். அதன் விளைவாக மேற்கத்திய நாடுகளுடனான தனது வேறுபாட்டினைச் சரிசெய்ய முடிவெடுத்தார். கதாஃபி ஸ்காட்லாந்தில் உள்ள லாக்கர்பீ மீது பேன் அமெரிக்க விமானம் குண்டு வீசியதில் லிபியாவின் பங்கு இருப்பதை அவர் உறுதி செய்தபோது இங்கிலாந்து மற்றும் அமெரிக்காவிற்கு விலை போய் விட்டார். மேலும் தனது நாட்டில் உள்ள எண்ணெயை இலண்டன் மற்றும் வாஷிங்டனைச் சேர்ந்த எண்ணெய் நிறுவனங்கள் வாங்கிக்கொள்ளலாம் என்று உறுதி செய்தார். ஆனால் அவருக்கு எதிரான பொருளாதார ஒப்புதல்களை அதுவே முடித்துவைத்தது" என்றார்.

"பிறகு ஏன் அமெரிக்காவும், இங்கிலாந்தும் இவரது எதிரிகள் பக்கம் நின்றனர்?" என்று கேட்டேன்.

"அது மிகவும் சிக்கலானது" என்று கூறியவர் மேலும் கொஞ்சம் குழம்பியை எடுத்துக் குடித்தார். பிறகு "சிறு விளக்கம்: புதிய ஆங்கிலேய - அமெரிக்க லிபிய உறவைக் கண்டு ஃபிரெஞ்சு கோபமடைந்தது. மேலும் அதனாலேயே பாரிஸ் தனது எண்ணெய் ஒப்பந்தங்களை இழந்தது" என்றார். அதிபர் சர்கொழி அதிருப்தி அடைந்த பழங்குடி இனத் தலைவர்களுக்கும், கதாஃபியை பதவியிலிருந்து அகற்ற முயன்ற லிபியா உட்பட எகிப்து, அரபு நாடுகளிலிருந்து வந்த படைகளுக்கும் ஆதரவளித்தது பற்றியும் விளக்கினார். அதேநேரத்தில் இங்கிலாந்தும், அமெரிக்காவும் முன்பு தாங்கள் கடுமையாக எதிர்த்து வந்த கதாஃபியின் படைகளைக் காப்பாற்றுவதன் மூலம் உலக அளவிலான கண்டனங்கள் எழுவதைக் கண்டனர்" என்றவர் தொடர்ந்து "அது தவிர, டாலருக்கு பதிலாக லிபியாவின் தங்க நாணயமான தினாருக்கு எண்ணெய்களை விற்குமாறு அரபு நாடுகளை ஊக்கப்படுத்தி வந்தார் கதாஃபி என்றார்.

"சதாம் ஹுசேனின் எதிரொலி இப்போது ஈரானிலும் " என்றேன் நான்.

"ஆம், உங்களுக்குத் தெரிந்ததைப் போலவே டாலர் மீது தாக்குதல் ஏற்படுவதை வாஷிங்டனும், வால் ஸ்ட்ரீடும் பார்த்துக் கொண்டிருந்தது. மேலும் மத்தியக் கையிருப்பும் போர் நடப்பதைப் போல நடந்து கொண்டது. எனவே கதாஃபியை பதவியிலிருந்து இறக்கிக் கொலை செய்த உள்நாட்டுப் போரில் அமெரிக்காவும், பிரிட்டனும் பிரான்ஸ் மற்றும் இதர நேட்டோ நாடுகளுடன் இணைந்து கொண்டது. நீங்கள் எழுதுவது போலவே இதுவும் வழக்கமான ஒன்றுதான் பெர்கின்ஸ். பொருளாதார அடியாட்கள், குள்ள நரிகள், மற்றும் இராணுவம் அனைத்தும் ஒன்றிணைந்து நுட்பமாகவும், வெளிப்படையாகவும் பணியாற்றியது" என்றார்.

கடந்து சென்ற ஒரு கப்பலைக் கண்டார். "அது இங்கேயும் கூட நடந்தது உங்களுக்குத் தெரியும். 1980 இல் எங்கள் நாட்டில் நடந்த ஆட்சிக் கவிழ்ப்பை முடிவு செய்தது அமெரிக்காதான்" என்றார். அதிபர் கார்ட்டர் அந்த ஆட்சிக்கவிழ்ப்பை ஆதரிக்க மூவாயிரம் படை வீரர்களை அனுப்பியதைப் பற்றியும், 4 பில்லியன் டாலர்கள் செலவு செய்தது பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம். பொருளாதார அடியாட்கள் முறையைப் போலவே, இதில் சில தொகை நேட்டோ மற்றும் பொருளாதார ஒத்துழைப்பு, வளர்ச்சிக்கான அமைப்பினால் வடிகட்டப்படுகிறது. ஆட்சிக்கவிழ்ப்பைத் தொடர்ந்து சர்வதேச நாணய நிதியம் தனியார்மயத்தையும், பெரிய தொழில்களைத் தனியார் நிறுவனங்கள் அபகரிப்பதையும் ஆதரிக்கத் தொடங்கியது.

"துருக்கியும் பன்னாட்டு நிறுவனமயத்திற்குள் விழுந்தது" என்றார் உலுக். பன்னாட்டு நிறுவனங்களை உலகமயமாக்கியது உலகப் பொருளாதாரத்தையே நிலைகுழையைச் செய்ததையும், போர்களைக் கட்டியமைப்பது அல்லது போர் குறித்த அச்சுறுத்தல்களை விதைப்பது, கடன் மற்றும் இயற்கை வளங்களைச் சுரண்டுவது என்ற மரணப் பொருளாதார நிலைக்குள் தள்ளியதையும் நான் குறிப்பிட்டேன். மேலும் உலக மக்கள் தொகையில் ஐந்து சதவிகிதத்திற்கும் குறைவாகக் கொண்ட அமெரிக்கா 25 சதவிகித இயற்கை வளங்களை நுகர்ந்து களிக்க பாதி உலகமே ஆற்றொணா வறுமையில் தவிக்கிறது. எவ்வளவுதான் முயன்றாலும் சீனா, இந்தியா, பிரேசில், துருக்கி அல்லது எந்த நாடுகளும் இந்த நிலையை அடைய முடிவதில்லை" என்றேன்."

"ஆம் அச்சம், கடன் மற்றும் மற்றொரு முக்கியக் கூறான பிரித்தாள்வது" என்றார் அவர். சன்னிகளுக்கும், சீட்டிகளுக்கும் இடையேயான பிளவு பற்றியும், உள்நாட்டுப் போர்களும், பழங்குடியினப் பிரிவிகளும் எவ்வாறு ஒரு அதிகார வெற்றிடத்தை ஏற்படுத்தி சுரண்டலுக்கு வழிவகுத்தது என்பது பற்றியும் பேசினோம். "அத்தகைய மோதல்களில் இருவருமே அதிகமான கடன்களை வாங்கிக் குவிப்பர், அதிகமான ஆயுதங்களை வாங்குவார்கள், இயற்கை வளங்களையும், உட்கட்டமைப்பையும் அழிப்பார்கள், பிறகு மேலும் கடன் பெற்று நிதி நிலையை மேலும் மறுகட்டமைப்பு செய்வார்கள். மத்திய கிழக்கு, சிரியா, ஈராக், எகிப்து, ஆப்கானிஸ்தான், .....மற்றும் பல நாடுகள் பணக்காரர்களின் கூடாரமாக மாறிப்போனதை நாம் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறோம்" என்றார்.

மரணப் பொருளாதாரத்தை நிலைப்பட்ட பொருளாதாரமாக மாற்றுவது பற்றிய அவர் கருத்து என்னவென்று நான் கேட்டேன். அதற்கு "நீங்கள் இன்றைய உலகை இயக்கும் வியாபாரிகளின் பின்னால், முதலாளிகளின் பின்னால், பல நாடுகளில் உள்ள முக்கியப் பங்குதாரர்களின் பின்னால் ஓட வேண்டும். அதுதான் இந்த இன்னல்களுக்கெல்லாம் ஆணிவேர்" என்றார்.

- மறு நாள் இஸ்தான்புல்லிலிருந்து வீடு திரும்புகையில், விமானத்திலிருந்தபடி கீழே மெடிட்டரேனியனைப் பார்த்த போது குற்றவுணர்ச்சியைக் காட்டிலும் கோபம் வருவதையே உணர்ந்தேன். பொருளாதார அடியாட்கள் முறையை நமது வியாபாரிகளும், அரசியல் தலைவர்களும் எனது காலகட்டத்தில் அல்லது இருண்ட காலம் என்று சொல்லப்படுகிற எனது விமானத்திற்கு கீழிருக்கும் நிலம் முழுவதையும் ஆண்ட நிலப்பிரபுத்துவப் பேரரசுகளின் சகாப்தத்தில் கற்பனைக்கு எட்டாத உயரத்தில் எடுத்துச் சென்றுவிட்டார்கள்.

அப்படியென்றால் வருங்கால வரலாற்று ஆய்வாளர்கள் 9/11 நிகழ்விற்குப் பிற்பட்ட காலங்களை இருண்ட காலமாகப் பார்ப்பார்கள் என்று எனக்குள் எழுந்த சந்தேகத்தைத் தவிர்க்க முடியவில்லை. அமெரிக்காவில் உள்ள நாங்கள் பற்றாக்குறை குறித்து அஞ்சலி வேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பதிலும், அதனால் நாங்கள் கடினமாக உழைக்க வேண்டும், பணம் சேர்க்க வேண்டும், பொருட்களை மிகுதியாக வாங்கிக்கொண்டே இருக்க வேண்டும், மேலும், மேலும் கடன் என்ற புதைகுழிக்குள் சென்று விழ வேண்டும் என்ற நிலைப்பாட்டில் எனது கோபம் அதிகரித்தது. நமது நாடு உலக வளங்களை வாங்கிக் குவிக்க வேண்டும் என்பதில் தேசப் பற்று மேலோங்கியிருப்பதாகக் கருதும் மனநிலைக்கு ஒவ்வொரு தனிப்பட்ட மனிதனையும் இட்டுச் செல்கிறது. நிலப்பிரபுத்துவப் பேரரசுகளின் கொள்கை முடிவுகளில் இருந்ததைப் போலவே இராணுவத்திற்குத் தேவையான நிதி திரட்டக் கடன் பெறுவதும் கூட நமது நன்மைக்கே என்று நமக்கு உறுதியளிக்கப்படுகிறது. இராணுவத்திற்குச் செலவிடப்படுவது நமது ஆதாயங்களைக் குறைக்கிறது என்று நாம் குறிப்பிடும்போதெல்லாம், இராணுவத்தை ஆதரிக்கும் நிகழ்வுகள், இலாபங்களை ஈட்டிடும் வகையிலான மானியங்களை வழங்குதல், பொருளாதார வளர்ச்சி என்ற பெயரில் பெருநிறுவன முதலாளிகளுக்கு வரிச் சலுகைகள் வழங்கி ஊக்கப் படுத்துதல் என்று கடந்த பத்து ஆண்டுகளில் பெரிய முரண்பாடு இருந்தபோதிலும் அந்த நிலைகீழ் பொருளாதாரம் வேலை செய்ததை நினைக்கும்போது ஆத்திரமாக வருகிறது. நான் குனிந்து ஆங்கிலக் கால்வாயைப் பார்த்த போது விரோதிகளான இங்கிலாந்து பிராட்டடஸ்டன்டுகளுக்கும், பிரான்சு கத்தோலிக்கர்களுக்கும் இடையிலான பிரிவுக்கோடு நான் பொருளாதார அடியாளாக இருந்த காலகட்டங்களில் அந்த அமைப்பு எவ்வளவு வலிமையாக இருந்திருக்கிறது என்று என்னை யோசிக்க வைத்தது. மேலும் 9/11 க்குப் பிறகு பொருளாதார அடியாட்கள் முறை சற்று ஓய்வெடுத்திருக்கிறது. கடன் மற்றும் அச்சத்தின் பயன்கள், தேசப்பற்று நடவடிக்கை, காவல்துறை இராணுவமயமாக்கல், பரந்து விரிந்த புதிய கண்காணிப்புத் தொழில் நுட்பங்கள், ஊடுருவல் மற்றும் ஆக்கிரமிப்புக்கான நாசவேலை, தனியார் சிறைச்சாலைகளின் வியத்தகு விரிவாக்கம் ஆகியவை தங்கள் எதிரிகளை ஓரங்கட்டும் வல்லமையை அமெரிக்காவிற்கு வழங்கியது. பெருநிறுவனத்தால் மாபெரும் நிதி ஆதாயம் பெறும் அரசியல் நடவடிக்கை குழுக்கள் ஒன்றுபட்ட குடிகளாலும், இதர நீதிமன்ற முடிவுகளாலும் வலுப்படுத்தப்பட்டது. அமெரிக்க சட்டமன்ற மாற்றத்திற்கான சபைக்கு நிதியுதவி வழங்கும் கோச் சகோதரர்கள் போன்ற பணக்காரர்களால் ஜனநாயக நடைமுறையைக் கவிழ்க்கவும் பிரச்சாரங்களால் ஊடகங்களை நிரப்பித் தேர்தலில் வெற்றி பெறவும் முடிந்தது. அரசியல் தரகர்களை, வழக்கறிஞர்களை, ஊழலை சட்டப் பூர்வமாக்குவதற்கான வல்லுநர்களை வாடகைக்கு எடுத்து அரசின் அனைத்துத் துறைகளிலும் செல்வாக்கை அதிகரித்துக் கொண்டது.

நான் அமெரிக்காவிற்குத் திரும்பியபோது, ஏதோ ஒன்று எனது கோபத்தை வலுப்படுத்தியதைக் கண்டுபிடித்தேன். ஈக்குவேடார் அதிபர் ரஃபேல் கொரியா ஆட்சிக் கவிழ்ப்பு முயற்ச்சியிலிருந்து தற்காத்துக்கொண்ட போதும் அமேசான் பகுதியில் உள்ள தனது எண்ணெய் உரிமைகளை ஏலத்தில் விடுவதாக அறிவித்தார். கைப்பற்றுவதற்கான பிரச்சாரங்களினால் அவர் மீண்டும் தாக்குதலுக்கு உள்ளாகும் அபாயத்தில்தான் இருந்தார். பிரச்சனைகளுக்கான மூல காரணங்களினால் பெருநிறுவனங்களைக் கட்டுப்படுத்தியவர்கள் என்று உலுக் விவரித்த நபர்களால் அவர் மீண்டும் நெரிக்கப்பட்டார்.

# அத்தியாயம் 8 - ஃபன்டேசியன் நகரின் பச்சமாமா அமைப்பிற்கு எதிரான பலாத்காரம்

கொரியாவிற்கு எதிரான ஆட்சிக் கவிழ்ப்பு முயற்சி தோல்வியடைந்தபோதும் மற்றொரு வகையில் அது வெற்றியடைந்தது. சேய்க்கெல்லசில் தோல்வியடைந்ததிலிருந்து சில நேரங்களில் அதிபர்களை விட்டுவைப்பதும் நன்மைக்கே என்று குள்ளநரிகள் பாடம் கற்றுக்கொண்டதை நான் பார்க்கிறேன். போதுமானளவு பயந்தே அவனோ அல்லது அவளோ காய் நகர்த்துவார்கள். மேலும் எதிர்ப்பதற்கும் பயனில்லை என்பதை அறிந்து அரசின் மற்ற தலைவர்களோடு இணைந்தார்கள். கொரீயா தன்னுடைய முந்திய நிலைப்பாட்டிற்குத் திரும்பி எண்ணெய் நிறுவனங்களுக்கு விற்பனைக்கு என்ற அறிகுறியை ப்ளாக்ஸ்' எனப்படும் அமேசானின் பதிமூன்றில் ஆறு மில்லியன் ஏக்கர்களுக்கு மேலான நிலங்களை எப்போது வேண்டுமானாலும் அறிவிக்கலாம்.

இருப்பினும் ஏதோ தவறு நடந்துவிட்டது. எண்ணெய் நிறுவன ஏலத்திற்கான எதிர்ப்பு கொரியாவின் தீர்க்கமான முடிவை வலுவிலக்கச் செய்தது அல்லது குறைந்தபட்சம் அவரது திட்டங்களையாவது மாற்றிக்கொள்ள அழுத்தம் கொடுத்தது. எனவே அவர் ஊசலாடினார். நவம்பர் 2012 முதல் இரண்டுமுறை ஏலத்தை ஒத்திவைத்தார்.

நான் வியட்நாம் மற்றும் இஸ்தான்புல்லிலிருந்து திரும்பிய போது எண்ணெய் நிறுவனங்களும், அதன் பொது உறவுகளும் மக்களைச் செயலில் இறங்கச் செய்தது. நான் இணையத்திலும், இஸ்பானியப் பத்திரிக்கைகளிலும் படித்த கட்டுரைகள் என்னை அதிர வைத்தது. ரோல்டோஸ் ஆட்சியலிருந்தபோது வெளிவந்த கட்டுரைகளை நினைவூட்டுவதாக இருந்தது. அவை தங்கள் நாடு தரமான பள்ளிகள் மற்றும் மருத்துவமனைகளுக்கு நிதி ஒதுக்கவும், மின்சாரம், போக்குவரத்து, தண்ணீர் மற்றும் கழிவு நீர் மேலாண்மை ஆகியவற்றிற்குத் தேவையான கட்டமைப்பை உருவாக்கவும், அமேசானில் உள்ள எண்ணெய் வளங்களைச் சுரண்டுவதுதான் வறுமையை ஒழிப்பதற்கான ஒரே வழியாகவும், அண்டியன் தீவுகளிலும், கடற்கரையோரப் பகுதிகளிலும் வாழ்ந்து வந்த ஈக்குவேடாரிய மக்களை சமாதானப்படுத்துவதில் குறிக்கோளாக இருந்தன. மூன்றில் ஒரு பங்கு நிலம் மட்டுமே அடர்த்தி குறைவான மக்கள் தொகையைக் கொண்டிருந்தாலும் வறுமையான மற்றும் மிகவும் அடர்த்தியான மக்கள் தொகையைக் கொண்ட நாடுகளில் ஒன்று ஈக்குவேடார் என்பது குறித்த வாதங்கள் செய்து ஓய்ந்தாகி விட்டது. அவ்வாறு மக்கள்தொகை அடர்த்தி குறைவான பகுதியும் எண்ணெய் அதிகமாக உள்ள மழைக்காடுகள் ஆகும்.

2013 ஆம் ஆண்டு கோடையில் கியூட்டோவிலிருந்து செல் நிறுவனம் செல்லும் கண்கவர் சாலையில் பயணித்தேன். பிறகு அங்கிருந்து ஒரு சிறிய விமானம் மற்றும் படகு மூலம் அடர்ந்த அச்சுவார் எல்லைப் பகுதிக்குச் சென்றேன். அச்சுவார்களும் அவர்களுக்கு அருகில் வசிப்பவர்களான குவாரனி, கிச்சுவா, சபரா, சிவியார் மற்றும் சுவார் இனத்தவர்கள் மிகுந்த அச்சத்திலும், சீற்றத்திலும் இருந்தார்கள். தங்களுக்காக மட்டுமின்றி உலகில் வாழும் அனைத்து உயிரினங்களின் நன்மைக்காகவும் அந்த மகத்தான மழைக்காடுகளின் மகத்துவம் உணர்ந்து பெரும்பாலானோர் தங்கள் நிலங்களைக் காப்பாற்ற முடிவெடுத்திருந்தார்கள். வனங்கள்தான் பூமியின் இதயம் மற்றும் நுரையீரல் என்று ஒப்பிட்டார்கள். மேலும் வனம் என்பது பல்லுயிர் காக்கும் இடங்களுள் முக்கியமான ஒன்று என்பதையும், காற்றை

மாசுபடுத்தும் கரியமில வாயுவை அழிக்கும் இடம் என்பதையும், கேன்சர் உட்பட பல கொடிய நோய்களுக்கான மூலிகை மருந்துகளைக் கொண்ட இடம் என்பதையும் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

பில் டுவிஸ்டு, பச்சமாமா கூட்டணியின் இதர பணியாளர்கள் மற்றும் ஃபன்டேசியனின் பச்சமாமா அமைப்பினர் ஆகியோர் இந்தப் பகுதியில் வாழும் பழங்குடியினர்களுக்கு ஆதரவாகச் செயல்பட்டு எண்ணற்ற நேரம், பணம் மற்றும் உழைப்பைச் செலவிட்டார்கள். எண்ணெயை பெருமளவில் உபயோகிக்கும் எங்களில் பலரும் அவர்களுக்கு ஆதரவாக இருப்பதையும், எண்ணெய் உபயோகத்தைக் குறைக்கச் சொல்லி அமெரிக்காவையும், ஐரோப்பாவையும் சமாதானப்படுத்த முயற்சி செய்து அதன் மூலம் எண்ணெய் நிறுவனங்களை அமேசானிலிருந்து வெளியேறச் செய்வதற்கான அழுத்தம் கொடுக்கிறோம் என்றும் அந்த மக்களுக்கு உணர் வைத்தார்கள்.

என்னுடைய பழைய பாவங்களைத் துடைப்பதற்கான வாய்ப்பாக அமைந்தது. டெக்சகோ நிறுவனம் நாட்டிற்கு நன்மை பயக்கக்கூடியது என்று 1960களின் பிற்பகுதியில் நான் பல கட்டுக் கதைகளைக் கேள்விப்பட்டேன். 1970களில் இராணுவ சர்வாதிகாரி களை ஊக்கப்படுத்தி அவர்கள் நாட்டையே கடனில் மூழ்கடிக்கச் செய்த பொருளாதார அடியாட்களில் நானும் ஒருவன். ரோல்டோசை எங்கள் அணியில் இணைந்து கொள்ள கோரிக்கை வைத்திருக்கிறேன். குற்ற உணர்வினால் கடுமையான வேதனைக்கு ஆளானேன். இப்போது செயல்பாட்டில் ஈடுபடுத்திக் கொண்டுள்ளேன். அவற்றுள் ஒன்றுதான் பச்சைமாமா கூட்டணியில் எனது ஈடுபாட்டை அதிகப்படுத்துதல்.

கொரியாவிற்கு உதவும் திட்டம் வகுப்பதில் பில், லைன் மற்றும் சில முக்கிய ஆதரவாளர்களோடு இணைந்து கொண்டேன். அவர் நெருக்கடியான சூழ்நிலையில் இருப்பதை நாங்கள் புரிந்து கொண்டோம். அதிபர் தலைமையில் ஒரு மாநாட்டிற்கு ஏற்பாடு செய்ய முடிவெடுத்தோம். அது எண்ணெய் ஏலத்திற்கான மாற்றத்தை விரும்புகிறவர்களுக்கு இவரைச் சரியான நபராகக் காட்டக் கூடும் என்று நம்பினோம்.

அதே கால கட்டத்தில் பழங்குடியின மக்களும் தங்களது தனிப்பட்ட பிரச்சாரத்தை முன்வைத்தார்கள். பச்சமாமா ஊராட்சி அமைப்புகளின் ஆதரவோடு அவர்களது மழைக்காடுகளிலிருந்து அண்டிஸ் வழியாக தலைநகருக்கு பேரணியாகச் சென்று அதிபர் மாளிகை முன்பு மறியல் செய்து எண்ணெய் நிறுவனங்களுக்கான ஏலத்தை அவர் கொரீயா இரத்து செய்ய வேண்டும் என்று வலியுறுத்தினர். உலகம் முழுவதுமுள்ள ஊடகங்களின் கவனத்தை இந்தப் போராட்டம் ஈர்த்தது. ஆனால் எந்தவொரு முயற்சியும் கொரியாவை பின்னடையச் செய்யவில்லை. நவம்பர் 2013 இல் ஏலத்தை நடத்தினார்.

இருப்பினும் ஏதோ அதிசயம் நிகழ்ந்தது. பல எண்ணெய் நிறுவனங்கள் வெளியேறின. அமெரிக்காவைச் சேர்ந்த ஒரு நிறுவனம் கூடத் தலைகாட்டவில்லை. பதிமூன்று ப்ளாக்குகளில் நான்கிற்கு மட்டுமே மனுக்கள் வந்தன. இத்தகைய மோசமான விளம்பரத்திற்குப் பிறகு துணிந்து ஏலத்தில் கலந்துகொள்வதில் எந்தப் பயனுமில்லை " என்று ஒரு எண்ணெய் நிறுவன அதிகாரி என்னிடம் கூறினார்.

அதிகப்படியான மக்கள்தொகை கொண்ட கடலோரப் பகுதியிலும், அண்டிசிலும் எண்ணெயைப் பொருளாதார வளர்ச்சியின் ஊக்கியாகக் கருதும் ஈக்குவேடாரியன்கள் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் தற்போது கடுமையான ஏமாற்றத்திற்கும், சீற்றத்திற்கும் ஆளாகியுள்ளனர். அனைத்துப் பகுதியிலும் உள்ள பெருவணிக முதலாளிகளுக்கு அறிக்கை விடப்பட்டது. அடிப்படை உணர்வில் மாற்றம் ஏற்பட்டுள்ளதற்கான அறிகுறிதான் ஈக்குவேடாரில் நிகழ்ந்தவை. மேலும் முன்பு ஓரங்கட்டப்பட்ட ஏழை மக்கள் அனைவரும் ஒன்றிணைந்துவிட்டனர். இப்போது அவர்களிடையே அதிகாரம் இருக்கிறது.

கொரீயா இப்போது ஒரு கூட்டணியில் இருக்கிறார். அவருடைய அதிபர் பதவியும், அவருடைய உயிரும் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. டிசம்பர் 2013இல் ஒரு பலிகடா தேவைப்பட்டது. அவருடைய காவலர்களை ஃபன்டேசியனில் உள்ள பச்சமாமா அலுவலகதிற்கு அனுப்பினார். மற்ற குடிமக்களைப் போலவே எளிமையான உடையணிந்த பதினைந்து அதிகாரிகள் திடீரென்று உள்ளே நுழைந்தனர். தங்களது அடையாள அட்டையை நிர்வாக இயக்குனர் பெலன் பேழிடம் காண்பித்தவர்கள் அனைவரையும் அலுவலகத்தை விட்டுக் களைந்து செல்லுமாறு உத்தரவிட்டார்கள். பிறகு கதவைத் தாழிட்டு, அரசின் நிலைத்தன்மையைக் கெடுத்ததாகப் புகார் தெரிவித்து நிறுவனத்தின் மீது முத்திரை வைத்தனர். பிறகு ஃபன் டேசியனில் உள்ள பச்சமாமா அலுவலகத்தின் கணினிகள், மேசைகள், மற்றும் அனைத்துப் பொருட்களையும் வேறு அலுவலகங் களுக்கு வழங்கிட காவல்துறையினர் உத்தரவிட்டனர். எங்கள் நிறுவனப் பணியாளர்களை இதுவரை கைது செய்யவில்லை என்றபோதும் பலமுறை பெலன் மற்றும் சிலரைப் பின்தொடர்ந்து தொந்தரவு செய்திருக்கிறார்கள்.

எங்களது அலுவலகங்களை மூடிய பிறகு நான் ஈக்குவேடார் பயணித்தேன். பன்டேசியனின் பச்சமாமாவை ஆதரித்தவர்களையும், அரசுசாரா பொதுநல அமைப்புகளின் பிரதிநிதிகளையும் சந்தித்தேன். நாங்கள் அனைவருமே கொரியா மீது அதிருப்தியில் இருந்தோம் என்பதே உண்மை . கொரியாவை ஆதரித்து வந்த நிறுவனங்களும், தனிப்பட்ட நபர்களும் இப்போது தீவிரமாக தங்களது எதிர்ப்பைப் பதிவு செய்தார்கள். அவர்களது கருத்தை நான் ஏற்றுக் கொண்ட போதும் ஏதோ ஒரு நெருடல் எனக்குள் இருந்தது.

நான் ரஃபேல் கொரியா என்ற மனிதரைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். அவருக்கு என்ன ஆனது? எப்படிப்பட்ட ஒரு நிலையை அவர் சந்திக்கிறார்? நாங்கள் கேள்விப் படுவதற்கும், ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வதற்கும் அப்பாற்பட்டு ஏதோ இருக்கிறது என்று மட்டும் எனக்குத் தெரியும்.

நாற்பது வருடங்களுக்கு முன்பு இந்த நாட்டில் எனது முதல் பயணத்தின் போது டெக்சகோவைச் சேர்ந்த நில அதிர்வு மதிப்பீட்டாளரின் இரவு உணவு விருந்தாளியாக கியூடோ விடுதியின் (முன்பு இண்டர் காண்டினென்டல் மேல் மாடியில் உள்ள உணவகத்திற்கு வந்த அதே இடத்தில் ஒருநாள் மாலை தனியாக அமர்ந்திருந்தேன். ஊர்சுற்றிவரும் மேகக்கூட்டங்களின் கண்கவர் காட்சியைக் காணும் வாய்ப்பை மீண்டும் பெற்றேன். எரிமலையின் முகப்பை சூரியனின் நிழல் தடுத்தபோது 1968 இல் இந்த நாட்டிற்கு எண்ணெய் வழங்கப்படும் என்ற எனது நம்பிக்கையைப் பற்றியும், கொரியாவைப் பற்றியும் நினைத்தேன்.

அவரது இந்த மனமாற்றத்தையும் பன்டேசியன் பச்சமாமாவிற்கு எதிரான நடவடிக்கைகளையும் நான் வெறுத்தபோதிலும் அவரைப் புரிந்துகொண்டேன். அவர் சமரசம் செய்து கொள்ள வேண்டும், தனது பதவியைத் தக்க வைத்துக்கொள்ள வேண்டும், வெற்றி வாய்ப்பிற்காகப் போராட வேண்டும் எனவே பெரிய எண்ணெய் நிறுவனங்களைத் தாக்க முடியாது என்று அவருக்குத் தெரியும். இல்லையென்றால் ஹான்டுரான் அதிபர் ஜெலேயாவைப் போல இவரும் பதவியிலிருந்து தூக்கி எறியப் படுவார். மேலும் பல இன்னல்களை அவர் சந்திக்க நேரிடும் அல்லது இவரது நினைவில் அடிக்கடி வந்து செல்லும் ரோல் டோசை போலவே கொலை செய்யப்படலாம். தான் பதவியிலிருந்து தூக்கி எறியப்பட்டால் அந்த இடத்தில் சிஐஏவின் கைப்பாவையாக யாராவது வருவார்கள் என்பதை உணரக்கூடிய அளவிற்கு கொரியா அறிவுள்ளவர்தான்.

உண்மையில் கொரியா ஒரு பெரிய ஒப்பந்தத்தை நிறைவேற்றினார். தனக்கு முன்பு பத்து ஆண்டுகளில் எட்டு அதிபர்களைக் கண்ட நாட்டில் சுமார் எட்டு ஆண்டுகள் அவர் பதவியில் இருந்தார். பொது நிகழ்வுகளில் பல தொகைகளை முதலீடு செய்தார். ஈக்குவேடாரியன் களுக்கு நல்வாழ்வு அமைத்திட அரசின் அனைத்துத் துறைகளிலும் அனைத்தும் சரிவர நடக்கிறதா என்பதை அறிந்து கொள்ள பியூனோ விவிர் என்ற அரசு முகவாண்மையை உருவாக்கினார். அவர் வாசிங்டனை நிந்தித்தபோது இலத்தீன் அமெரிக்காவில் உள்ள மிகப்பெரிய இராணுவத் தளத்தை மூடி வியத்தகு வீரத்தை வெளிப்படுத்தினார். மேலும் தனது மக்களின் நன்மைக்காக எண்ணெய் நிறுவனங்களுக்குக் கேடு விளைவிக்கும் வகையில் அதன் ஒப்பந்தங்களை மறு ஆய்வுக்கு உட்படுத்தினார். அவரது உதாரணம் புதிய தன்மையை ஏற்படுத்தியது. அவருடைய ஆட்சியின்போது செவ்ரான் (இப்போது டெக்சகோ நிறுவனத்தின் முதலாளி) நிறுவனத்திற்கு எதிராக ஈக்குவேடாரிய வாதிகள் வழக்கை வென்றனர். ஈக்குவேடாரிய நீதிமன்றம் அந்த நிறுவனத்தைக் குற்றவாளி என அறிவித்து 9.5 பில்லியன் டாலர் அபராதம் விதித்தது (இந்தத் தீர்ப்புக்கு எதிராகப் போராட செவ்ரான் ஒரு வழக்கறிஞர் படையையே நியமித்தது) 2. உலகிலேயே முதன் முறையாக மாற்ற முடியாத உரிமைகளைப் பாதுகாக்கும் புதிய அரசியலமைப்பிற்கு ஒப்புதல் அளிக்கப்பட்டது. உலக வங்கி அறிக்கையின்படி 2010 இல் 32.8 சதவிகிதமாக இருந்த வறுமையின் அளவீடு 2014 இல் 22.5 சதவிகிதமாகக் குறைந்தது 3. இதில் என்னைப் பெரிதும் கவர்ந்தது என்னவென்றால் முனைவர் பட்டம் பெற்ற பொருளாதார நிபுணர்கள் மேற்கத்திய அதிபர்களைக் கடனில் நிறுத்தியதுதான். முந்திய அரசுகளின் தலைமை கடன் பெற்றதற்காக மேற்கொண்ட சட்டப் பூர்வமான தன்மையை மறு ஆய்வு செய்வதற்கு கடன் தணிக்கை ஆணையத்தை நியமனம் செய்தார். அதிலும் குறிப்பாக நான் பொருளாதார அடியாளாக இருந்த ஆரம்ப காலத்தில் சிஐஏ ஆதரவு பெற்ற சர்வாதிகாரிகள் ஆட்சியில் இருந்தபோது மேற்கொண்டவை. நாட்டின் வெளியுறவுக் கொள்கைகளில் சட்டத்திற்குப் புறம்பான பல விவகாரங்களை இந்த ஆணையம் வெளிக்கொண்டு வந்தது. நாடு ஒரு தவறை நோக்கிச் செல்வதற்கு மாறாக உலக வங்கி, சர்வதேச பண நிதியம், மற்றும் வால் ஸ்ட்ரீட்டின் கடுங்கோபத்தை அடைவதற்கு 30.6 மில்லியன் டாலர்கள் வட்டிப்பணத்தைக் கட்ட கொரியா மறுத்துவிட்டார்.

அது நடந்த பிறகு, சட்டத்திற்குப் புறம்பான மற்றும் சட்டதிற்கு எதிரான வங்கியின் நடைமுறைகள் எந்த வகையிலும் ஈக்குவேடாருக்குத் தடையாக இல்லை. உண்மையில் அதன் பிறகு அமெரிக்கா உட்பட அனைத்து நாடுகளும் உலகின் சிறந்த நிதி நிறுவனங்களில் குற்றவியல் நடவடிக்கைகளில் ஈடுபட்ட குற்றவாளிகளாக அறியப்பட்டார்கள்.

## அத்தியாயம் 9 - மற்றொரு பொருளாதார அடியாளின் வங்கி ஊழல்

2014இல் நடந்த மற்றொரு ஊழலால் நிதி உலகம் நடுங்கியது. முன்பு நடந்த லிபார் ஊழலில் ஈடுபட்ட இரண்டு வங்கிகளும் மற்றும் சில புதிய வங்கிகளும் இதில் அடக்கம். பர்கிலேஸ், சிட்டி குழுமம், ஜேபி மார்கன் (கேஸ் மற்றும் ஸ்காட்லாந்து இராயல் வங்கி ஆகியவை வெளிநாட்டுப் பணங்களின் மதிப்பில் மோசடி செய்த குற்றத்தை ஒப்புக்கொண்டனர். மேலும் அவர்களுக்கு 2.5 பில்லியன் டாலர் அபராதம் விதிக்கப்பட்டது. அதன் பிறகு ஒரு வருடங்களுக்கு உள்ளாகவே இந்த நான்கு வங்கிகள், மற்றும் ஒன்று, யுபிஎஸ் ஆகியவற்றிற்கு பர்க்லேசின் வழக்கில் தொடர்புடைய கோரிக்கைகளை நிவர்த்தி செய்வதற்கு மற்றொரு 1.3 பில்லியன் டாலர் அபராதத்தோடு சேர்த்து கூடுதலாக 1.6 பில்லியன் டாலர் அபராதம் விதிக்கப்பட்டது.

2007 முதல் கூட்டமைப்பு" என்ற ஒன்றை அதன் உறுப்பினர்கள் நடத்தினார்கள். மின்னஞ்சல் மற்றும் தனிப்பட்ட விவாதங்களுக்கு மத்தியில் தங்கள் குழுவிற்கென பண்டிட் கிளப், மாஃபியா போன்ற தனிப்பட்ட பெயர்களைக் கண்டுபிடித்தனர்.

அமெரிக்க அரசின் முதன்மை வழக்கறிஞரான லோரேட்டா லிஞ்ச் வங்கிகளின் வெளிநாட்டுப் பணத் திட்டங்களை "அப்பட்டமான கூட்டுச்சதி யின் வெளிப்பாடு மற்றும் வெளி நாட்டு பணப் பரிவர்த்தனைச் சந்தையைக் கையாளுதல்' என்று விவரித்தார். மேலும் அது திகைப்பூட்டும்படியான சதி என்கிறார். அமெரிக்க முதன்மை வழக்கறிஞரால் கூறப்பட்ட வார்த்தைகளான கூட்டுச் சதி, சதி போன்றவை குறிப்பிட்டுக் கூறப்பட்டது. வங்கிகளுடன் இணைந்து இரகசியமாகப் பணியாற்றுவது பல ஆண்டுகளாக உலகின் மிகவும் நம்பிக்கைக்குரிய வியாபாரங்களுள் ஒன்றாக இருந்து வருவதாக அது ஒப்பிடப்பட்டுள்ளது. வங்கிகளின் நடவடிக்கைகள் சதி, கூட்டுச் சதி, பித்தலாட்டம், மோசமான போட்டி நடவடிக்கைகள் போன்ற அனைத்தும் அதிக இலாபம் ஈட்டப்படும் வரையில் பெருநிறுவன வாதத்தின் மூலம் (ஞாயப்படுத்தப் படுகிறது.

இந்த ஊழலைப் பற்றிய கட்டுரைகள் எனது குற்ற உணர்வை மீண்டும் பற்றவைத்தது. நாற்பது வருடங்களுக்கு முன்பு நான் என்ன செய்து கொண்டிருந்தேன் என்று எழுகின்ற சந்தேகத்தை என்னால் அழிக்க முடியவில்லை. முடிவில்லாத இந்த ஊழல் மடைதிறந்த வெள்ளமெனக் கரை புரண்டு ஓட நான் பெரிதும் உதவியிருக்கிறேன். படிக்கப் படிக்க எனது உணர்வுகள் கோபமாக மாறியது.

நான் செய்த காரியங்கள்தான் இப்படிப்பட்ட நிலையை உருவாக்கியிருக்கிறது என்று என்னதான் நான் ஒப்புக்கொண்டாலும், பொருளாதார அடியாட்களாகிய நாங்கள் நடத்தியதற்கும் இரக்கமற்ற வழியில் நவீன வங்கியாளர்கள் நடத்துவதற்கும் உள்ள வேறுபாட்டில் நான் தடுமாறி நிற்கிறேன். எங்களது நாட்களில் கடன்களை ஞாயப்படுத்தக் கடுமையாக உழைத்தோம். நாங்கள் இலக்கு வைத்த நாடுகளில் எங்களது திட்டங்கள் பொருளாதார வளர்ச்சியை உருவாக்கும் என்பதை விளக்க ஆடம்பர பொருளாதார மாதிரிகளை நாங்கள் வடிவமைத்தோம். அந்த நாடுகளைச் சேர்ந்த மக்களை சமாதானப் படுத்துவதோடு எங்களை நாங்களே சமாதானப் படுத்திக்கொள்ள வேண்டியிருந்தது. இன்றைய நாகரிக பொருளாதார அடியாட்கள் தங்களது நடவடிக்கைகளுக்கு ஞாயம் பார்க்க வேண்டி நினைப்பதில்லை. அவர்கள்

கூச்சல்மிக்கவர்கள், இணக்கமற்றவர்கள், முற்றிலும் இரக்கமற்றவர்கள். பண்டிட்களைப் போல, போதகர்களைப் போல அவர்களது பாத்திரத்தில் மகிழ்ந்தனர். கார்டலின் அங்கத்தினராக இருப்பதில் வீராப்பாக இருந்தனர். அனைவரையும் சுரண்டிப் பிழைக்கும் தன்மையில் பெருமை கொள்கிற இந்தப் புதிய பொருளாதார அடியாட்களைக் கண்டு நான் அதிர்ச்சியும், ஆத்திரமமும் அடைந்தேன்.

எனது கோபம் வங்கியாளர்களோடு மட்டும் நின்றுவிடவில்லை அதன் கட்டுப்பாட்டாளர்களையும் உள்ளடக்கியது என்பதை மெதுவாக உணர ஆரம்பித்தேன். கண்டுகொள்ள யாருமில்லை என்ற எண்ணத்தோடு தண்டனையிலிருந்து தப்புவதற்கான முயற்சியோடு 5 ஆண்டுகளாக இத்தகைய சதி நடந்தது. மேற்பார்வை செய்ய ஆளில்லாமல் "தீயதைப் பார்க்காதே, தீயதைக் கேட்காதே, தீயதைப் பேசாதே" என்ற சிந்தனையற்ற நிலையே அரசு முகவாண்மையர் களிடத்தில் வியாபித்துள்ளது. இது பொருளாதார அடியாட்கள் முறையின் மற்றொரு அங்கமாகவே விளங்கியது. வங்கிகளுக்கும், இதர பெரு நிறுவனங்களுக்கும் சமூகம் அல்லது சுற்றுப்புறச் சூழலின் நலன் கருதாது அதிக இலாபம் என்ற இலக்கை மட்டும் மனதில் வைத்து அவர்களுக்கு உதவ என்னென்ன செய்ய வேண்டுமோ அனைத்தையும் செய்யலாம் என்று நம்பி வந்தார்கள்.

தவறு செய்கையில் தண்டனைகளுக்கான அளவீடும் கூட அரசுக்கும், பெருநிறுவனத்திற்கும் இடையிலான ஒப்பந்தத்தோடுதான் நடைமுறையில் இருந்தது. லிபார் மற்றும் வெளிநாட்டு நாணய மதிப்புகளில் நடந்த தில்லுமுல்லுகளில் 14 பில்லியன் டாலர்களுக்கும் அதிகமான அபராதம் முதலில் பெரும் தொகையாகவே தெரிந்தது. ஆனால் தொடர்ந்து நடந்த சோதனைகளுக்குப் பிறகு வங்கிகளின் சொத்துகளுக்கு மதிப்பிடுகையில் அந்தத் தொகை மிகக்குறைந்த அளவே என்பதை நான் தெரிந்து கொண்டேன். இதில் கொடுமை என்னவென்றால் இதுவரை எந்தவொரு வங்கி அதிகாரியும் தங்களது குற்ற நடவடிக்கைகளுக்கு தண்டனை பெறவில்லை.

இத்தகைய சுரண்டலுக்கு எப்படி இந்த அமெரிக்க மக்கள் வாய்மூடி இருக்கிறார்கள் என்று நான் திகைத்து நின்றேன். கண்மூடி இருக்கலாம் என்ற இவர்களது விருப்பம் 1970களில் நான் சுரண்டலுக்கு உட்படுத்திய நாடுகளிலிருந்த அணுகுமுறைக்கு இணையானதாகவே இருந்தது. ஒப்பீட்டளவில் வங்கியாளர்களின் இரகசியத் திட்டங்களுடன் வெளிப்படையான நடவடிக்கைகள் மூலமாகவும் திருடப்பட்டோம். அதையும் நாங்கள் சரியான நடவடிக்கை என்று ஏற்றுக் கொண்டோம். அரசு ஏற்படுத்திய மாணவர்களுக்கான வானளாவிய கல்விக்கடனும், கல்வித் துறையில் கூட்டாட்சிகளுக்கிடையே ஏற்பட்ட பிளவும், தேசிய அளவிலான சுகாதாரக் குறைபாட்டினால் தொடர்ந்து அதிகமாகிக்கொண்டே இருந்த மருத்துவக் கடனும், காப்பீடுகளும், கொள்ளையடிக்கும் தினசரிக் கடனும், பலரிடமிருந்து பிடுங்கப்பட்டு சில பணக்காரார் களுக்கு மட்டும் மானியம் வழங்கும் வரிவிதிப்புச் சட்டங்களும், வேலை வாய்ப்புகளை வெளிநாட்டு மக்களிடம் வழங்குதலும் இதில் அடங்கும். "எதை எடுத்துக்கொண்டாலும் நாங்கள் செய்வோம்" என்று வங்கியின் நிர்வாகக் கூட்டத்தில் ஒலித்த வார்த்தை காங்கிரசு அலுவலகத்தில் எதிரொலித்தது.

2015-ஆம் ஆண்டு கால்பந்தாட்ட ஊழல் நடந்தபோது அது வீட்டிற்கே வந்தது. பொருளாதார அடியாட்கள் முறை எங்கும் வியாபித்து விளையாட்டுத் துறை உட்பட சமூகம் முழுவதையும் பாதித்துள்ளது.

சர்வதேசக் கால்பந்தாட்ட அமைப்பின் தலைவர்களுக்கு எதிராக அமெரிக்க நீதித்துறையால் குற்றம் சுமத்தப்பட்டதன்படி, இலஞ்சம், பித்தலாட்டம், பண மோசடி என பொருளாதார அடியாட்களின் பல கூறுகளைக் குற்றம் சுமத்தப்பட்டவர்களும் பயன்படுத்தி யிருக்கிறார்கள். மேலும் அது பல பெரிய வங்கிகளோடு இணைந்து செய்யப்பட்டிருக்கிறது. இருபது வருடங்களாக இந்த ஊழல் தடையில்லாமல் நடந்து கொண்டிருந்தது. செல்வ வளமிக்க பல நாடுகளில் உள்ள வரி செலுத்துவோரையும், சமூகங்களையும் அழித்து ஒரு சிலரை மட்டும் பணக்காரர்களாக வைத்திருந்தது. 'குற்றம் சுமத்தப்பட்டவர்கள் அதை மறுத்தனர். இதை எழுதுகிற இந்நாள் வரை ஒருவர் கூட தண்டிக்கப்படவில்லை. நிரூபிக்கப்பட்ட இந்த ஊழல் உலகம் முழுவதும் தலைப்புச் செய்தியாக வெளிவந்தது.

முதலில் நீதித்துறை நடவடிக்கை எடுத்தமைக்காக நான் நிம்மதியடைந்தேன். அது சரியான பாதைக்கான முதல் அடியாகவும் தெரிந்தது. அதன் கட்டுப்பாட்டாளர்கள் இறுதியில் அனைத்தையும் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தார்கள். அதன் பிறகு நான் வேறொரு நிலையைக் கண்டேன்.

கால்பந்தாட்ட ஊழல் எந்த பாதிப்பும் இல்லாமல் பல திருப்பங்களைக் கண்டது. உண்மையான குற்றவாளிகள் உலகப் பொருளாதாரத்தைத் திருடிக்கொண்டிருக்க ஊடகங்களின் கவனமும் வாழ்க்கைக்கு முக்கியமில்லாத விளையாட்டின் பக்கம் திரும்பியது. தனிப்பட்ட கால்பந்தாட்டக் கழக அலுவலர்கள் கைது செய்யப் பட்டார்கள். ஆனால் வங்கி அதிகாரிகள் பல மில்லியன் டாலர் ஊக்கத் தொகையைப் பரிசாகப் பெற்றுக் கொண்டார்கள். நம் அனைவரையும் பாதித்த வங்கி அதிகாரிகளின் மீது என் குற்றம் சாட்டப்படவில்லை ?

வங்கி ஊழியர்கள் பெருநிறுவனத்துவத்தின் உறுப்பினர்களாக இருக்கிறார்கள், கால்பந்தாட்டக் கழக அலுவலர்கள் அவ்வாறு இல்லை என்பதுதான் வெளிப்படையான பதில் நீதித்துறை தொடர்ந்து தீவிரமான குற்றச்சாட்டுகளை கால்பந்தாட்டக் கழக அலுவலர்கள் மீது முன்வைத்ததும், தவறு செய்ததாகப் பல கட்டுக் கதைகளை அவர்கள் மீது கட்டவிழ்த்து விட்டதும் பல பெரிய உண்மைகளின் பக்கம் கவனம் செல்லாமல் திசை திருப்பியது. காரணமேயில்லாமல் வங்கி ஊழியர்கள் நீதித்துறையின் பேராதரவைப் பெற்றார்கள். நமக்குச் சேவை செய்வதற்காக நம்மால் தேர்தலில் தேர்வு செய்யப்பட்டவர்களையும், தகவல்களை நமக்குச் சரிவர முன்வைப்பவர்களான ஊடகங்களையும் வங்கிகள் விலைக்கு வாங்கும் அளவிற்கு வலிமை வாய்ந்ததாக இருந்தது.

"ஹாவர்ட் ஜின்னை மீண்டும் நினைத்துக் கொண்டிருந்ததை உணர்ந்தேன். தரகர்களின் வளர்ந்து வரும் வலிமை பற்றி அவரும் நானும் விவாதித்திருக்கிறோம். நாம்தான் வாக்களிக்கிறோம், ஆனால் நம்மால் தேர்வு செய்யப்பட்டவர்கள் நம்மை கவனிக்கப் போவதில்லை . அவர்களது பிரச்சாரத்திற்கு நிதியுதவி செய்யும் பெருநிறுவன அரசியல் தரகர்களின் கட்டளைக்குத்தான் அவர்கள் கீழ்படிவார்கள்" என்றார் அவர். நான் அது போல் எதையோ செய்ததாகவும் குறிப்பிட்டார். மேலும் "நாம் உலக வங்கிக்குக் கட்டுப்பட்டோம்" என்று கூறிவிட்டு நிறுத்தியவர், "உலக வங்கிக்கு வறுமையை ஒழிக்க வேண்டிய எண்ணம் இருப்பதாக நீ நினைக்கிறாயா?" என்று கேட்டார்.

1967 இல் நான் தொழில் நிர்வாகப் பட்டப்படிப்பைப் படித்துக்கொண்டிருந்த காலகட்டத்தில் உலக வங்கியின் வாயிலில் நின்று "வறுமை ஒழிக்கப்பட்ட உலகை உருவாக்க

உழைக்கிறோம்" என்ற வாசகத்தைப் படித்தது நினைவிற்கு வந்தது. அந்த வார்த்தைகளை நான் உண்மையென்று நம்பினேன். ஆனால் அது நெடுநாட்களுக்கு நீடிக்கவில்லை. உலக வங்கியின் வேலையை மோசடிகளின் அடையாளமாக அது வெளிபடுத்துவதைக் கண்டுபிடித்தேன். இந்தப் புத்தகத்தின் முதற் பதிப்பு வெளியாவதற்கு முன் வளர்ச்சிக்கான வல்லுநர்கள் உலக வங்கியைக் காப்பாற்ற முயலும் பல கூட்டங் களிலும், விவாதங்களிலும் கலந்து கொண்டேன். வறுமையை முற்றிலும் ஒழிப்பதற்காகத்தான் அவர்களும், நானும் பணியாற்றுவதாக வாதிட்டார்கள். இருப்பினும் உண்மை நிலை பல கதைகளைச் சொல்லியது.

சமீபத்திய ஆக்சிபெம் அறிக்கை உலகின் ஒட்டுமொத்த வளங்களும் இப்போது 1 சதவிகித மக்களிடமே இருப்பதாகவும், பத்தில் ஏழு பேர் கடந்த முப்பது ஆண்டுகளில் பொருளாதார ஏற்றத்தாழ்வு அதிகமான நாடுகளில் வாழ்வதாகவும் கூறுகிறது. உலக வங்கியின் திட்டங்களை வளர்த்துக் கொண்டிருந்த அர்ஜென்டினா, கொலம்பியா, எகிப்து, இந்தோனேசியா போன்ற நாடுகளில் இருந்த சேரி வாசிகள் இப்போது கைப்பேசி வைத்திருக்கலாம், ஆனால் அவர்கள் எந்த வகையிலும் வறுமையிலிருந்து மீட்டெடுக்கப் படவில்லை. உண்மையில் நான் பொருளாதார அடியாளாக இருந்த காலகட்டத்தை விட இன்று மோசமான நிலையில்தான் இருக்கிறார்கள். உலக வங்கி புள்ளிவிவரத்தின்படி 2011 இல் 2.2 பில்லியன் மக்கள் இன்றும் ஒரு நாளைக்கு இரண்டு டாலருக்கும் குறைவான வருமானத்தில் வறுமையில்தான் இருக்கிறார்கள். "உலகின் வறுமையை முற்றிலும் ஒழித்திட" பல பில்லியன் டாலர்கள் பெருநிறுவனங்களுக்குக் கொடுக்கப்படுகிறது என்று பெருவாரியான மக்கள் நம்பிக்கொண்டிருக்கிறார்கள்." வறியவர்களின் சதவிகிதம் அலுவல் கணக்கின்படி குறைந்த போதும் மக்கள் தொகைப் பெருக்கத்தாலும், வாழ்வியல் நிலை மாறியதாலும் உண்மையில் வறியவர்களின் எண்ணிக்கை அதிகமாகியிருக்கிறது.

கடந்த முப்பது ஆண்டுகளாக உலகின் வருமையான நாடுகளில் அறுபது நாடுகள் 540 பில்லியன் டாலர் கடனுக்காக 550 பில்லியன் டாலர் அசலும், வட்டியும் சேர்த்துக் கட்டியுள்ளனர். இருப்பினும் அதே கடனுக்கு இன்றும் 523 பில்லியன் டாலர்கள் திருப்பிக் கட்ட வேண்டியிருக்கின்றனர். அந்த நாடுகள் கல்விக்கும், சுகாதாரத்திற்கும் செலவிடுவதைக் காட்டிலும் அதிகமாக தங்கள் கடன் தொகையைத் திருப்பிச் செலுத்துவதில் செலவிடுகிறார்கள். மேலும் அது அவர்களுக்கு வரும் வெளியுறவு வருமானத்தை விட இருபது மடங்கு அதிகமாக இருக்கிறது. மேலும் உலக வங்கியின் திட்டங்கள் பல வெளியே சொல் ல முடியாத துயரங்களை வறியவர்களுக்கு வழங்குகிறது. கடந்த பத்து ஆண்டுகளில் மட்டும் அப்படிப்பட்ட திட்டங்கள் 3.4 மில்லியன் மக்களை வல்லடியாக வீட்டை விட்டு வெளியேற்றியிருக்கிறது. இத்திட்டங்களை எதிர்ப்போரை அந்த அரசுகள் அடித்துத் துன்புறுத்திக் கொலை செய்திருக்கிறது."

நானும், என் சகாக்களும் பெருநிறுவன, முதலாளித்துவ வல்லரசை விரிவுபடுத்த வேண்டி நினைத்ததைச் செய்தோம். அதுவே எங்களது உண்மையான இலக்கு. உலக வங்கியின் பொன்மொழி தந்திரம் வாய்ந்தது. எங்களிடம் கடன்களைப் பெற்றுக்கொண்டு அவர்களது இராணுவத்திற்குப் பயிற்சியளிக்கவும், கட்டமைப்புகளை மேம்படுத்தவும் எங்களுக்குப் பணம் செலுத்தாவிடில் அவர்களின் குடிமக்கள் ஸ்டாலின் போன்ற கொடுமையான சர்வாதிகாரிகளால் ஆளப்படுவார்கள் என்று கூறி அந்த அரசுகளின் தலைவர்களை நாங்கள் சமரசம் செய்தோம். பெருநிறுவன முதலாளித்துவம் அவர்களை நிலப்பிரபுத்துவத்தின் இருண்ட காலத்திலிருந்து

வெளியேற்றும் என்றும் அமெரிக்கா வழிநடத்தும் செழிப்பான நவயுகத்தில் இட்டுச் செல்லும் என்றும் விளம்பரம் செய்தோம்.

ஒரு பொருளாதார அடியாளின் வாக்குமூலம் வெளியானதிலிருந்து இந்த முறை பெருகிவிட்டது. இன்று உலக வங்கியோடு சேர்த்து தனியார் வங்கிகள், குற்றவியல் செயல்களில் ஈடுபடுவோர் ஆகியோரால் வளர்தெடுக்கப்படுகிறது. அதற்காக அவர்கள் சிறை தண்டனை பெறுவதற்கு பதிலாக பல மில்லியன் டாலர்கள் ஊக்கத்தொகை பெறுகிறார்கள். அவர்களும், அவர்களது பெருநிறுவன சகாக்களும் சமூக நலனில் பெரும்பங்காற்றுவதைக் காட்டிலும் தனிப்பட்ட சொத்து சேகரிப்பில்தான் ஒருவரது வெற்றி அடங்கியிருக்கிறது என்று உலகம் முழுவதிலும் உள்ள மக்களை சமரசம் செய்கிறார்கள். தனியார் மயமும், விதிமுறைகள் தளர்வும் பொதுமக்களைப் பாதுகாக்கும் என்றும், மக்களின் தேவைக்கான அரசுதவி வீணென்றும், சமூக நலனில் அரசு முதலீடு செய்வதைக் காட்டிலும் தனிப்பட்ட முறையில் கடன் பெறுவதே சிறந்தது என்றும், மாடமாளிகைகளில் தங்கிக்கொண்டு, தனியார் விமானங்களிலும், வசதியான படகுகளிலும் பயணம் செய்யும் ஆண்களும், பெண்களும் முன்மாதிரியாக எடுத்துக்கொள்ள வேண்டியவர்கள் என்றும் நம்ப வைக்கிறார்கள்.

இத்தகைய வெற்றுரையை எவ்வாறு பெருவாரியான மக்கள் ஏற்றுக்கொள்கிறார்கள் என்று ஹாவர்ட் ஜின் புரிந்துவைத்திருந்தார். அதாவது நடுத்தர வர்கத்தினர் வசதி வாய்ப்புகள் என்னும் ஆசை வலையில் சிக்கிக் கொள்வார்கள் ஏனென்றால் பேராசைப்படக் கற்றுக்கொடுக்கப்பட்ட வசதிகளை அவர்கள் அடைவார்கள். எனவே அவர்கள் அதை இழக்க மாட்டார்கள். அதே போல வறுமையில் இருப்பவர்கள் தங்களது உழைப்பு முழுவதையும் எளிமையான வாழ்வாதாரத்திற்கே செலவிட்டு மெத்தனமாக இருப்பார்கள்.

இவையனைத்தும் புதிய பொருளாதார அடியாட்களால் திறமையாக நிர்வகிக்கப்படுகிறது.

## அத்தியாயம் 10 - இன்றைய பொருளாதார அடியாட்கள் என்பவர்கள் யார்?

1970களில், பொருளாதார வளர்ச்சி அடைந்த நாடுகள் அனைத்தும் ஊழலின் கூடாரமாகப் பார்க்கப்பட்டது. என் போன்றவர்கள் அமைதியாக வணிகம் செய்துகொண்டிருந்தோம். ஆனால் அனைவரும் நினைத்ததைப் போலவே இலத்தீன் அமெரிக்கர்கள், ஆப்பிரிக்கர்கள், ஆசிய நாடுகளின் அரசு அதிகாரிகள் ஊழலில் செழித்து இருந்தார்கள். பனானா குடியரசு அரசியல்வாதி ஒருவர் சில சலுகைகள் செய்ததற்குப் பரிசாக டாலர்கள் நிறைந்த உறையைப் பெற்றுக்கொள்வது போன்ற புகைப்படம் பத்திரிகைகள் மற்றும் ஹாலிவுட்டில் ஆழமாகப் பதிந்தது. மற்றொருபுறம் இவையனைத்திற்கும் மேலாக பெரிய அளவில் ஊழல் நடக்கும் நாடாக அமெரிக்கா நினைக்கப்பட்டது.

அது முற்றிலும் மாறியது. நான் பொருளாதார அடியாளாக இருந்த காலத்தில் அமெரிக்காவில் ஒழுக்கங்கெட்ட, ஏற்றுக்கொள்ள முடியாத, சட்டத்திற்குப் புறம்பான நடவடிக்கைகளாகப் பார்க்கப் பட்ட அனைத்தும் இப்போது நிலையாகத் தொடர்ந்து நடக்கிறது. போலியான

சொற்களால் அது மறைக்கப்படுகிறது, ஆனால் அதற்கடியில் அதே பழைய கூறுகளான அச்சுறுத்தல்களும், கையூட்டுகளும், போலி அறிக்கைகளும், மிரட்டிப் பணம் பறித்தலும், பாலியல் துன்புறுத்தல்களும், இதர தொந்தரவுகளும் அரசு மற்றும் வியாபாரங்களின் மேல்மட்டத்தில் தொடர்ந்து நிலவுகிறது. பொருளாதார அடியாட்கள் எங்கும் நிறைந்திருக்கிறார்கள். அமெரிக்கக் காங்கிரசுக் கட்சியின் வழியாக வெள்ளை மாளிகையின் வாயிலிலிருந்து, வால் ஸ்ட்ரீட், மற்றும் அனைத்துப் பெரிய நிறுவனங்களின் நிர்வாக அரங்குகள் வரை அவர்கள் உலவி வருகிறார்கள். மேல்மட்டத்தில் நடக்கும் ஊழல்கள் சட்டப்பூர்வமாக மாற்றப்பட்டு விட்டது. ஏனென்றால் பெருநிறுவனத்தின் பொருளாதார அடியாட்கள்தான் அதற்கான சட்டத்தை வகுக்கிறார்கள். மேலும் அதை அமலாக்கும் அரசியல்வாதிகளுக்கு நிதி வழங்குகிறார்கள்.

நான் ஹாவர்ட் ஜின்னை கடைசியாக சந்தித்தபோது அவரிடம் நாகரிகமான புதிய பொருளாதார அடியாட்கள் பற்றி அவர் எங்கு படித்துத் தெரிந்துகொண்டார் என்று கேட்டேன். 'தாச்லே மற்றும் தோட் ஆகிய அரசியல்வாதிகளைப் படியுங்கள்" என்றார்.

ஹாவர்ட் மறைவு வரை அவர் சொன்ன அந்த ஆலோசனையை நான் பின்பற்றவே இல்லை. பிறகு இந்தப் புத்தகத்தை நான் எழுதத் தொடங்கியபோது தான் படித்தேன். பிறகுதான் அவர் சொல்வது சரியாக இருப்பதை மீண்டும் கண்டுபிடித்தேன்.

டாம் தாச்லேவும், க்றிஸ் தாட்டும் பல கருத்துகளில் ஒத்துப் போகின்றனர். இருவருமே அமெரிக்க செனட் சபையின் உறுப்பினர்களாக நீண்ட காலம் பணியாற்றியவர்கள். தாச்லே 1987 முதல் 2005 வரையும், தாட் 1981 முதல் 2011 வரையும் பணியாற்றினார்கள். இருவருமே ஜனநாயகக் கட்சியின் வளரும் நட்சத்திரங்களாக இருந்தார்கள். தாச்லே செனட் சபையின் பெரும்பான்மைத் தலைவர். தாட் தேசிய ஜனநாயகக் கூட்டணியின் தலைவராகவும், செனட் சபையின் வங்கிக்குழுத் தலைவராகவும் மற்றும் அதிபர் வேட்பாளராகவும் இருந்தார். இருவருமே அமெரிக்க அதிபரோடும், பல நாட்டுத் தலை வர்களோடும், பெரு நிறுவனங்களோடும் தொடர்பில் இருந்த வலிமையான தலைவர்கள்.

இருவருமே மக்களுக்கான தலைவர்களாகத் தங்களை அடையாளப்படுத்திக் கொண்டவர்கள். தாச்லேவின் ஆரம்பகாலப் பரப்புரைகள் போன்டியாக்கைத் தாக்குவதாகவே இருந்தது. தான் என்றுமே பொறாமை பிடித்த சந்தர்ப்பவாதப் பரப்புரையாளர்களுக்கு இணங்கப் போவதில்லை என்று சத்தியம் செய்தார் தாட். இருவருமே அவர்களது பிம்பங்களையும், கட்சிகளுக்குச் செய்து கொடுத்த சத்தியத்தையும் ஏமாற்றினார்கள். அவர்கள் புதிய, பலம்வாய்ந்த, மிகவும் ஆபத்தான, பொருளாதார அடியாட்களுக்கு இணையான குழுவை முன்மொழிந்தார்கள்.

செனட்டை விட்டு வெளியேறிய பிறகு தாச்லே ஒரு சட்ட அமைப்பில் இணைந்து கொண்டார். அது சுகாதாரத்திற்கான அரசியல் பரப்புரை மற்றும் இதர பெருநிறுவனங்கள் மூலம் பல மில்லியன் டாலர்களை இணைத்து வைத்திருந்தது. தனியார் பங்கு வர்த்தக வருமானத்திற்கு அப்பாற்பட்டு அவரது சம்பளம் மற்றும் ஊக்கத் தொகை 2 மில்லியன் டாலர்களைத் தாண்டும் என்று ஒரு அறிக்கை சொல்கிறது. தன்னுடைய வாடிக்கையாளர்களின் நலன் காக்கும் இலாபகரமான ஒப்பந்தங்களுக்குத் தரகு பார்ப்பதுதான் இவருடைய பணியே என்றபோதும், "அரசியல் ஆலோசகர்" போன்ற தெளிவற்ற பட்டப்பெயர்களைத் தாங்கிக்கொண்டு அரசியல் தரகராகத் தன்னை வகைப்படுத்திக் கொள்வதைத் தவிர்க்க முயன்றார்.

2013 இல் வங்காளதேசத்தில் ஒரு ஆடைத் தொழிற்சாலை இடிந்து விழுந்த பிறகு உதாரணமாகச் சொல்லும்படியாக ஒரு நிகழ்வு நடந்தது. 1100 பேருக்கும் அதிகமானோரை அது பலிகொண்டது. தாச்லே நேரடியாக அதில் தொடர்புடையவர் என்று எந்த அறிகுறியும் இல்லாவிட்டாலும் அவரது சட்ட அமைப்பான டிஎல்ஏ பைப்பர் குறைந்தபட்ச ஊதியப் பணியாளர்களை இலக்காகக் கொண்டு சட்டப்படியான பாதுகாப்பு அம்சங்களுக்காக வங்காளதேசத் திட்டத்தை நடைமுறைப்படுத்தச் சண்டையிட்டார்கள்."

தாச்லேவைப் போலவே தாட்டும் ஒரு நேர்மையான அரசியல் வாதியைப் பிரபலப்படுத்தக் கடினமாக உழைத்தார். அரசியல் தரகர்களாக இருக்கும் சக அரசியல் தலைவர்களின் குழுவில் என்றுமே இணையப் போவதில்லை என்றும் அமெரிக்கப் பெருநிறுவனங் களுக்கு விலைபோகப் போவதில்லை என்றும் வலியுறுத்திக் கூறினார். இருப்பினும் இவர் அமெரிக்க அதிபராக முயன்றபோது செனட் வங்கிக் குழுவால் கட்டுப்படுத்தப்பட்ட முதல் தொழிலான நிதிச் சேவை நிறுவனங்களிடமிருந்து நிதியைப் பெற்றுக்கொண்டார். இந்த வெளிப்படையான கருத்து வேற்றுமை 2010 இல் இவர் செனட்டிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு இவர் செய்த காரியங்கள் மூலம் முறியடிக்கப்பட்டது. அரசியல் தரகராக இருக்கப் போவதில்லை என்ற இவரது தொடர் வாக்குறுதிகளுக்கு அப்பாற்பட்டு 2011 இல் அமெரிக்காவின் அசைவுப் படக் குழுவின் தலைமைத் தரகராகவும், தலைவராகவும் இருந்த டேன் க்ளிக்மேன் என்பவருக்கு பதிலாக அந்தப் பதவியில் அமர்ந்தார்.?

'ஹாவர்ட் எனக்கு ஒரு வழி காட்டியிருந்தார். அதை நான் பின்பற்றியபோது சில மாறுதல்கள் எந்த வகையிலும் ஜனநாயகக் கட்சியினருக்கு கட்டுப்பாடு விதிக்காது என்று தெரிந்து கொண்டேன். ஜான் ஆஸ்க்ராஃப்ட், பாப் டோலே, நியூட் கிங்ரிச், பில் கிரேம், சக் ஏகல், ட்ரென்ட் லாட், வாரன் ரூட்மேன்..... ஆகியோர் செனட்டிலிருந்து தரகர்கள் குழுவிற்குத் தாவிய குடியரசுக் கட்சியினர்களுள் நன்கு தெரிந்தவர்கள். அந்த வகையில் ஜனநாயக மற்றும் குடியரசுக் கட்சியினர்களின் பட்டியல் முடிவின்றி நீளும். மேலும் தங்களைப் பொருளாதார அடியாட்களாக மாற்றிக்கொண்ட அமெரிக்க வெள்ளை மாளிகைப் பிரிதிநிதிகள் இன்னும் சிலர் இருக்கின்றனர்.

"சுழற் கதவு" வழியாகச் செல்லும் ஆண்கள் மற்றும் பெண் களுடன் சேர்த்து பெரும்பாலான அரசியல் தலைவர்கள் தங்களை அரசியல் தரகர்கள் என்று அழைத்துக்கொள்ள மாட்டார்கள். அவர்கள் சட்ட அமைப்பிற்காகப் பணியாற்றுவார்கள். "ஆலோசகர்", "தகவல் நாடுபவர்" அல்லது "அரசு நிர்வாக ஆலோசகர்" போன்ற புனைப் பெயர்களோடு செல்வார்கள். ஒரு பெரிய ஆலோசனை மையத்தின் "தலைமைப் பொருளாதார வல்லுநர்" என்று அதிகாரப் பூர்வமாக அழைக்கப்படுவது போல. இருப்பினும் அவர்களது உண்மையான வேலை என்னவென்றால் எனது பணியைப் போலவே அரசுகளையும், மக்களையும் திட்டங்களுக்குள் இணைத்து பணக்காரர்களை மேலும் பணக்காரர்களாகவும், ஏழைகளை மேலும் ஏழைகளாகவும் உருவாக்குவதும்தான். அவர்கள் பெருநிறுவன முதலாளித்துவத்தை வளர்தெடுப்பதற்காக ஊதியம் பெறும் பொருளாதார அடியாட்கள். பெருநிறுவனம் எனும் பேரரசை விரிவுபடுத்துவார்கள். மேலும் மரணப் பொருளாதாரத்தின் விழுதுகளை உலகம் முழுவதும் பரப்புவார்கள். நிழல் உலகில் பதுங்கியிருப்பார்கள், இருப்பினும் அவர்களது செல்வாக்கு அளவிட முடியாதது.

இதில் குறிப்பிடத்தக்கது என்னவென்றால் தொழிற்சாலைகளின் சங்கமான அமெரிக்க அரசியல் தரகர்களின் சங்கம் 2013ஆம் ஆண்டு தனது பெயரை அரசு உறவுகள் முறைக் கழகம் என மாற்றிக்கொண்டது. அந்த ஆண்டில் மட்டும் கடந்த பத்து ஆண்டுகளில் இருந்ததைக் காட்டிலும் பதிவு செய்யப்பட்ட தரகர்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்தது. இருப்பினும் அதன் எண்ணிக்கை ஒவ்வொரு செனட் உறுப்பினருக்கும் மற்றும் பிரிதிநிதிகளுக்கும் இருபத்து மூன்று தரகர்கள் என்ற விகிதத்தில் 12,281 பேர் இருந்தனர். எனது காலத்தில் இருந்த பொருளாதார அடியாட்களின் எண்ணிகையை விடவும் இது அதிகமானது. இருப்பினும் இந்த அதிர்ச்சிகரமான எண்ணிக்கை கூட குறைத்து மதிப்பிடப்படுகிறது. ஒரு தரகராக முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக அனுபவம் பெற்ற அமெரிக்கப் பல்கலைக் கழகப் பேராசிரியர் ஜேம்ஸ் தர்பரின் ஆய்வுப்படி பணியாற்றும் தரகர்களின் உண்மையான எண்ணிக்கை சுமார் ஒரு இலட்சம் இருக்கும் என்கிறது. 2013 இல் தரகர்களின் பிரச்சாரங்களை ஆதரிக்க ஆண்டுச் செலவு 3 பில்லியன் டாலர் என்பதை அதிகாரபூரவ் எண்ணிக்கை காட்டுகிறது. ஆனால் தர்பரின் கணக்குப்படி அது சுமார் 9 பில்லியன் டாலர் இருக்கும் என்கிறது.

வெளிப்படைத்தன்மையில் குறைபாடு, தரகர்களின் அற்பமான செல்வாக்கைச் சுற்றியுள்ள மர்மங்கள் ஆகியவை அதன் முழுமையான தாக்கத்தை கணக்கிட முடியாமல் செய்துவிடுகிறது. இருப்பினும் அமெரிக்காவில் தொழில் புரியும் ஒவ்வொரு பெரிய நிறுவனமும் நூறு தரகர்களுக்கு மேல் வைத்திருக்கிறார்கள். அனைத்துத் தொழிலாளர் சங்கங்கள் மற்றும் தொழிலாளர் உரிமைகள், சுற்றுப்புறச்சூழல், சுகாதாரம், கல்வி, மற்றும் பல சமூக சேவைகள் ஆகியவற்றை முன்வைத்து "நம் மக்கள்" என்று பிரிதிநிதித்துவப்படுத்தும் பொது நலக் குழுக்கள் முதலீடு செய்யும் ஒவ்வொரு டாலருக்கும் இணையாக இந்தப் பெருநிறுவனங்களும், அதன் அமைப்புகளும் முப்பது டாலர்களைச் செலவிடுகிறது.

சட்டத்தை அமல்படுத்தக் கூடிய அதிகாரிகள் தரகர்களையும் அவர்கள் பிரிநிதித்துவப்படுத்தும் பெருநிறுவனங்களையும் எதிர்க்க அஞ்சுகிறார்கள்.

பின்வரும் இந்த அறிக்கை ஆயுதங்கள் தயாரிப்புத் தொழிற் சாலையான காமன் ட்ரீம்ஸ் வெளியிட்டதுதான், ஆனாலும் உலகில் உள்ள பெருநிறுவனங்களின் பிரிதிநிதியாகவே இது உள்ளது:

உலகின் தலைசிறந்த பத்து சர்வதேச ஆயுத உற்பத்தியாளர்களில் எட்டு அமெரிக்கர்களுடையது. ஆயுதத் தொழில் துறைகள் காங்கிரசுக்கும், அதன் சட்டப்பேரவை உறுப்பினர்களுக்கும் பல மில்லியன்களைச் செலவழிக்கிறது. அதன் மூலம் தங்களது அடித்தளத்தை வலுவாகவும், முழு ஆற்றலுடனும் போட்டியின்றி நிலை நிறுத்திக் கொள்கிறது. உதாரணமாக எ.ஃப்-35 போர் குண்டுதாரிகள்தான் அமெரிக்க வரலாற்றிலேயே மிக விலையுயர்ந்த ஆயுதங்கள். இதன் மதிப்பு 1.5 ட்ரில்லியன் டாலர், ஆனால் வேலை செய்யாது. இது விளையும் அதிகம், பறப்பதற்கே மிகவும் ஆபத்தானது. பல குறைபாடுகள் கொண்டது. இருப்பினும் இதை வலுக்கட்டாயமாக நம்மைப் பயன்படுத்த வைத்த பெருநிறுவனங்களை குறைந்த அளவிலான சட்டமன்ற உறுப்பினர்களே எதிர்க்கின்றனர்."

நான் குடியிருந்த மாகாணத்தில் ஒரு பெரிய செய்தியை ஏற்படுத்தினார் ஆயுதத் தயாரிப்பாளர்களில் ஒருவரான போயிங். இது எண்பதாயிரம் தொழிலாளர்களுக்கு மேல் கொண்ட வாசிங்டனின் மிகப்பெரிய நிறுவனம். உலகின் மிகப்பெரிய மூன்று இராணுவ

ஒப்பந்ததாரர்களுள் ஒன்று (லாக்கீத் மார்ட்டின், நார்த்ரேப் க்ரம்மன் ஆகிய மற்ற இரண்டு நிறுவனங்களும் கூட அமெரிக்காவைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்படுவதே)." போயிங் நிறுவனத்திற்கு வரிச் சலுகை பெறுவதற்காக அதன் தரகர்கள் இரவு, பகல் பாராது உழைத்தார்கள். அரசியல்வாதிகள் அதற்கு மறுத்தால் தங்களது 777து தயாரிப்பு வசதிகளை வேறு மாகாணத்திற்கு மாற்றிவிடுவதாக மிரட்டினார்கள்.

இறுதியில் வாசிங்டன் சட்டசபை 8.7 பில்லியன் டாலர் என்ற அளவிற்கு அதுவரை எந்த மாகாண வரலாற்றிலும் இல்லாத அளவிற்கு வரிசக் சலுகை செய்து ஒரு சட்டத்தை அமல்படுத்தினார்கள். அந்தச் சட்டம் அரசு மானியங்களை அனுபவிக்கிற அமெரிக்காவின் முதல் பெருநிறுவனம் என்ற மிகப்பெரிய இடத்தை அந்நிறுவனத்திற்கு வழங்கியது. போயிங் நிறுவனத்தின் பொருளாதார அடியாட்களுக்கு இது ஒரு மிகப்பெரிய வெற்றி. அதேநேரத்தில் என்னைப் போல் வாசிங்டன் அரசுக்கு வரி செலுத்துபவர்களுக்கும், ஜனநாயகத்திற்கும் இது மிகப்பெரிய இழப்பு.

வாசிங்டன் அரசு அதிகாரிகளை போயிங் நிறுவனம் கையாண்ட விதம் "இடம் கண்டறியும் தரகர்கள்" எனப்படும் சிறப்புப் பொருளாதார அடியாட்களால் உபயோகப்படுத்தப்படும் முறைக்கு உதாரணமாக விளங்குகிறது. தொழில்நுட்ப அடிப்படையில் அவர்கள் தரகர்கள் என்று அழைக்கப்பட்டாலும் மிகவும் சிறப்பு வாய்ந்தவர்கள். பல ஆண்டுகளாக அவர்கள் பொருளாதார வளர்ச்சி அடைந்த நாடுகளோடு தொடர்புடையவர்களாக இருக்கிறார்கள். அதிலும் போயிங் வழக்கு அவர்கள்தான் முக்கியக் காரணி என்பதைக் காட்டுகிறது.

வேலை வாய்ப்பை உருவாக்கக் கூடிய வசதிகளைக் கண்டு பிடிக்கும் பெருநிறுவனங்களின் முடிவுகள் விற்பனையாளர்களுக்கும், வாடிக்கையாளர்களுக்குமான தங்களது சந்தையின் அருகாமை நிலை, தொழிலாளர் சந்தைகள், போக்குவரத்துப் பிணையங்களுக்கான நடைமுறையில் உள்ள கட்டுமானத்தின் நிலை, மின்சாரக் கட்டணம் ஆகிய கூறுகளை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கும் என்று தொழில் முனைவோருக்கான பள்ளிகளும், திட்ட வல்லுநர்களும் கோருகிறார்கள். ஆனால் உள்நாட்டு அரசு அலுவலகங்களோடு கொண்ட ஒப்பந்தம்தான் பெரிய முடிவாக இருந்திருக்கிறது. மிகக்குறைவான சுற்றுப்புறச் சூழல் மற்றும் சமூக நலச் சட்டங்கள், குறைந்த வரிகள் ஆகியவற்றைத் தராதவரை அந்தச் சமூகம் புறக்கணிக்கப்படும் என்ற அச்சத்தைப் பொருளாதார அடியாட்கள் விதைக்கிறார்கள். வழக்கமாகப் பொதுத்துறை அதிகாரிகள் இது போன்ற ஒப்பந்தங்களை ஏற்பாடு செய்ய ஆர்வமாக இருந்தபோதிலும் பெருநிறுவன ஊழியர்கள் உட்பட ஒட்டு மொத்த சமூகத்திற்கும் பயன்தரும் பள்ளிகள், சாலைகள், பொழுதுபோக்கு வசதிகள் மற்றும் இயற்கை வளங்கள் போன்ற சமூக சொத்துகளைச் சீரழித்துவிடும் என்ற நீண்டநாள் விளைவுகளையும் எண்ணிப் பார்த்தார்கள்."

மற்றொரு முக்கியமான அம்சம் என்னவென்றால், பொருளாதார அடியாட்கள் சமூகத்திடமிருந்துதான் ஊதியம் பெறுகிறார்கள். அதோடு ஏற்பாடு செய்து தரும் மானியத்தில் பெருநிறுவனங் களிடமிருந்து 30 சதவிகிதத்திற்கும் அதிகமான தரகுத் தொகையும் பெறுவார்கள்.

அர்ஜென்டினா, கொலம்பியா, ஈக்குவேடார். எகிப்து, இந்தோனேசியா மற்றும் பனாமா ஆகிய இடங்களில் நான் செய்த பணிகளை நினைவூட்டுவதாக இருந்தது போயிங் நிறுவனத்தின்

ஒப்பந்தம். முக்கியமான வேறுபாடு என்னவென்றால் உலக வங்கிக் கடன்களுக்கு பதிலாக நவீனப் பொருளாதார அடியாட்கள் அமெரிக்காவின் வரிக் கொள்கைகளையும், மானியங்களையும் பயன்படுத்திக் கொண்டனர். இது கடன்களைக் காட்டிலும் கூடுதல் திறன் வாய்ந்தது. பணத்தைப் பதிவு செய்ய வேண்டிய தேவையையும், கடனாளி தனது கடனைத் திரும்பிச் செலத்துவதை உறுதி செய்யும் அமைப்பிற்கான அழுத்தங்களைக் கொடுக்கும் ஒப்பந்தங்களில் கையெழுத்திடுவதையும் பெருநிறுவனங்கங்கள் தவிர்த்து வந்தார்கள். இதில் அமெரிக்காவைப் பொறுத்தவரை யாரும் நேரடியாகப் பணம் கட்டத் தேவையில்லை. அதற்கு பதிலாக வரியின் அடிப்படையில் பணம் எடுத்துக்கொள்ளப்படும். அதாவது அமெரிக்காவில் வரி செலுத்துவோரிடமிருந்து திருடப்படும் பணம் பெருநிறுவனங்களின் கையில் ஒப்படைக்கப்படும். சுகாதாரம், கல்வி மற்றும் இதர சமூகப் பயன்பாட்டிற்குச் செலவிட வேண்டிய பணம் முழுவதும் பொருளாதார அடியாட்கள் மற்றும் ஊழல் கறைபடிந்த அரசியல் வாதிகளின் அன்புப் பரிசாக பேராசை பிடித்த பெருநிறுவனங்களின் பணப்பெட்டிக்கு அனுப்பப்படுகிறது.

2000ஆம் ஆண்டு முதல் நடுவண் அரசினால் வழங்கப்படும் கடன்கள், சலுகைகள் மற்றும் மானியங்களை மறு ஆய்வு செய்யும் தேசியக் கொள்கை மையமான கூட்ஸ் ஜாப்ஸ் ஃபஸ்டில்தான் முதலில் எனது ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. அதன் அறிக்கையின்படி கடந்த பதினைந்து ஆண்டுகளாக 68 பில்லியன் டாலர் சலுகைகளாகவும், வியாபாரிகளுக்கான சிறப்பு வரிக் கடன்களாகவும் நடுவண் அரசு வழங்கியிருக்கிறது. அதில் இரண்டில் மூன்று மடங்குத் தொகை பெருநிறுவனங்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

மானியங்களைப் பெறுவதில் வெற்றிகரமான தரகர்களைக் கொண்ட முக்கிய நிறுவனங்களை அது கண்டுபிடித்தது. அது டவ் இரசாயன நிறுவனம், போர்ட் இயந்திரவியல் நிறுவனம், ஜெனரல் மின்பொருள் மற்றும் ஜெனரல் இயந்திரவியல், கோல்ட்மேன் சாக், ஜேபி மார்கன் கேஸ், லாக்கீத் மார்டின், யுனைடெட் டெக்னாலஜிஸ் மற்றும் நூறு சிறந்த இலாபகரமான நடுவண் அரசு ஒப்பந்ததாரர்களில் பாதிப்பேர் ஆகிய அனைவரும் அதில் அடக்கம். 298 பெருநிறுவனங்கள் ஒவ்வொருவரும் தனிப்பட்ட முறையில் மானியமாக 60 மில்லியன் டாலர்கள் அல்லது அதற்கும் அதிகமாக பெற்றிருப்பதாக அது கூறுகிறது. 19 இந்த நிறுவனங்கள் அனைத்தும் துறைமுகங்கள், விமான நிலையங்கள், நெடுஞ்சாலைகள், பள்ளிகள், தீயணைப்பு நிலையங்கள் மற்றும் இதர சேவைகள் மூலம் பெரும் பயன்களை அறுவடை செய்தார்கள். மேலும் பல பில்லியன் டாலர்கள் இலாபம் அடைந்தார்கள். இருப்பினும் அதில் குறைந்தளவு பங்கைக் கூட அவர்களுக்கு சேவை செய்யும் நிறுவனங்களுக்கும், அதன் தொழிலாளி களுக்கும் கொடுக்கவில்லை.

எரிபொருள் நிறுவனம்தான் அதிகமான மானியம் பெறுகிறது என்று தெரிந்து கொண்டதில் நான் வியப்படைய எதுவுமில்லை. இருப்பினும் அந்த நிறுவனங்களுக்கு வழங்கப்படும் மானியங்களின் அளவு நான் எதிர்பார்த்ததைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. கார்டியன் பத்திரிகையின் சமீபத்திய ஆய்வு 'நிலக்கரி, எண்ணெய் மற்றும் எரிவாயு நிறுவனங்கள் 550 பில்லியன் டாலர்கள் மானியங்கள் மூலம் பயனடைந்துள்ளது. மேலும் இது புதுப்பிக்கத்தக்க மின்சார உற்பத்திக்குச் செலவிட்டதை விட நான்கு மடங்கு அதிகம்" என்கிறது. பொருளாதார அடியாட்களின் முயற்சியாலும், தங்களது பிரச்சாரங் களுக்கு நன்கொடை பெற்ற அரசியல்வாதிகளின் உதவியால் மானியம் பெற்ற மூன்று நிறுவனங்களைப் பற்றிய தகவல்கள் இதோ.

2012 இல் நடந்த ஒப்பந்தத்தின்படி பென்சில்வேனியாவில் வரவிருக்கின்ற செல் நிறுவனத்தின் எண்ணெய் சுத்திகரிப்பு நிலையம் ஆண்டு நிகர இலாபமாக 26.8 பில்லியன் டாலர்களை ஈட்டுகிற போது 1.6 பில்லியன் டாலர்களை மானியமாகப் பெறவிருக்கிறது.

லூசியானாவில் உள்ள எக்சான் மொபில் நிறுவனத்தின் தரம் உயர்த்தப்பட்ட பேடன் ரூக் எண்ணெய் சுத்திகரிப்பு நிலையம் 199மில்லியன் டாலர்களை மானியமாகப் பெற்றது. 2011 இல் இதற்கான ஆதரவினை அந்த நிறுவனம் பெற்றபோது அந்த நிறுவனம் 41 மில்லியன் டாலர் இலாபம் அடைந்தது.

ஒகியோவில் உள்ள மாரத்தான் பெட்ரோலிய நிறுவனத்திற்கு -2 தில்லியன் டாலர் மதிப்புமிக்க ஜாப்ஸ் மானியத் திட்டம் அந்த நிறுவனம் 2.4 பில்லியன் டாலர் இலாபம் ஈட்டியபோது 2011 இல் தொடங்கியது."

விவசாயத் தொழிலின் பொருளாதார அடியாட்கள் மிகவும் பிரபலமானவர்களாகவோ அல்லது பிரபலமற்றவர்களாவோ இருப்பார்கள். அமெரிக்க நாடாளுமன்ற உறுப்பினர்களால் சூலை 2015 இல் எச்ஆர் 1599 இன் பகுதி இதற்கு ஒரு உதாரணம். பாதுகாப்பான மற்றும் துல்லியமான உணவுப் பெயரிடல் சட்டம் 2015 என்று அதிகாரப் பூர்வமாக அறியப்படுகிறது. ஆனால் எதிர்கட்சி மறுதலிக்கும் அமெரிக்கர்களுக்கான தெளிவுபடுத்திக் கொள்ளும் உரிமைச் சட்டம் (டார்க் என்று அறியப்படுகிறது. மரபணு மாற்று உயிரணுக்களைக் கொண்ட பங்கு பொருட்களுக்குப் பெயரிடுவதைத் தடை செய்கிறது இந்தச் சட்டம். மளிகைப் பொருட்கள் உற்பத்தியாளர்கள் சங்கம் மற்றும் மான்சான்டோவின் பொருளாதார அடியாட்கள் இந்த மசோதாவை அமல்படுத்த பல மில்லியன் டாலர்களைக் கொட்டினார்கள். கார்டியன் பத்திரிகையின் அறிக்கை பின்வருமாறு குறிப்பிடுகிறது.

இந்த மசோதா தாக்கல் செய்யப்படுவதற்கான முயற்சி மான்சான்டோ மற்றும் அதன் விவசாயத் தொழில் எடுபிடிகளால் பல மில்லியன் அமெரிக்கர்களின் ஜனநாயக உரிமையை நசுக்குவதற்காக எடுக்கப்பட்டது. பெருநிறுவனத்தின் செல்வாக்கு வென்றது, மக்களின் குரல் அலட்சியப்படுத்தப்பட்டது" என்றார் உணவுப் பாதுகாப்பு மையத்தின் நிர்வாக இயக்குனர் அன்ட்ரூ கிம்ப்ரெல்.

சுற்றுப்புறச் சூழல் பணிக்குழுவும் இந்த மசோதாவை எதிர்த்ததோடு மரபணு மாற்று உயிரினங்களுக்கான பொதுமக்களின் பரந்து விரிந்த எதிர்ப்பையும் கண்டது.

"நாடாளமன்ற உறுப்பினர்களில் சிலர் பெரும்பான்மையான அமெரிக்கர்களின் விருப்பத்தை நிராகரித்து வாக்களிப்பது முறையற்றது" என்றார் சுற்றுப்புறச் சூழல் பணிக்குழுவின் அரசு விவகாரங்களுக்கான மூத்த துணைத் தலைவர் ஸ்காட் ஃபேபர். 12

இவ்வாறு ஏழைகளிடமிருந்து திருடிப் பணக்காரர்களிடம் கொடுக்கப்படும் இந்தத் திட்டங்கள் எந்தவகையிலும் இராணுவம். விவசாயம், மற்றும் மின் உற்பத்திக்குத் தொடர்பில்லாதது. பொருளாதாரத்தின் தன்மையோடு அது முற்றிலும் வியாபித்துள்ளது. வால்மார்ட் அதற்கு ஒரு சிறந்த உதாரணம்.

சமீபமாக அமெரிக்காவிற்கு வந்த சுவார் இனத்தைச் சேர்ந்த நண்பன் ஒருவன் வால்மார்ட் என்ற "மிகப்பிரபலமான கடையைப்" பார்க்க வேண்டுமென்று கேட்டான். அங்கே நான் எதுவும் வாங்க மாட்டேன் என்றும் சுற்றிப்பார்க்க மட்டும் அவனை அங்கு அழைத்துச் செல்வதாகவும் கூறினேன். அங்கே செல்லும் முன், வரிக்கான நேர்மை குறித்து அமெரிக்கர்களால் வெளியிடப்பட்ட தகவல்களை அவனுடன் பகிர்ந்து கொண்டேன். அது எங்கள் இருவருக்குமே திகைப்பாக இருந்தது.

அமெரிக்காவில் வரி செலுத்துவோரிடமிருந்து வால்மார்ட் நிறுவனம் எத்தனை பில்லியன் டாலர்களைச் சுரண்டியிருக்கிறது என்று அந்த அறிக்கை விவரிக்கிறது. அதன் பல்வேறு கூறுகளில் ஒன்றான வெளிநாட்டு வரிப் பணங்கள் பெரிய பிணையத்தை உள்ளடக்கி 76 பில்லியன் டாலர் சொத்துகளைக் கொண்டது. மேலும் அந்த அறிக்கையின்படி:

15 துறைமுகப் பகுதிகளில் 78 துணை நிறுவனங்களை விரிவுபடுத்தியிருக்கிறது வால்மார்ட், ஆனால் எதுவுமே அறிவிக்கப் படவில்லை.

உலகின் பெரிய நிறுவனங்கள் வரி செலுத்துவோரை எவ்வாறு ஏமாற்ற உபயோகப்படுத்துகிறது என்று வால்மார்ட் வெப் என்ற பெயரில் வந்த ஒரு பகுப்பாய்வு கூறுகிறது. அது லக்சம்பர்கில் இருக்கும் 22 செல் நிறுவனங்களுக்குக் குறைவில்லாமல் வால்மார்ட்டும் வைத்திருக்கிறது என்றும் அதில் இருபது நிலையங்கள் 2009 இல் தொடங்கப்பட்டும், ஐந்து நிலையங்கள் 2015 இல் மட்டும் தொடங்கப்பட்டிருக்கிறது. மேலும் அந்த ஆய்வின்படி, 2011 முதல் அந்தத் துணை நிறுவனங்களுக்கு 45 பில்லியன் டாலர் சொத்துகளைக் கைமாற்றியிருக்கிறது. ஆனால் 2010 முதல் 2013 வரையிலான 1.3 பில்லியன் டாலர் இலாபத்தில் லக்சம்பர்கிற்கு 1 சதவிகித வரி மட்டுமே செலுத்தியிருக்கிறது."

அதைத் தொடர்ந்து எண்ணற்ற விற்பனையகங்களைக் கண்டோம். இங்கு யாருமே எவருடனும் பேசாமல் செல்வதை எனது சுவார் நண்பன் கவனித்துக் குறிப்பிட்டான். "எனது நாட்டில் சந்தையில்தான் நண்பர்களோடும், உறவினர்களோடும், உலகமெங்கிலும் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள முடியும். இங்கே ஒருவரை ஒருவர் தவிர்த்துவிட்டு பொருட்களை வாங்குவதில் மட்டும் கவனம் செலுத்திக் கடந்து செல்கிறார்கள்" என்றான். மேலும் ஒரே பொருளில் பல்வேறு நிறுவனத் தயாரிப்புகளைக் கண்டும் வியந்தான், "நீளம், சிவப்பு, மஞ்சள் பெட்டி என்று பல்வேறு நிறத்தில் உள்ள சவர்க்காரத்தில் எதைத் தேர்ந்தெடுப்பது என்று நீங்கள் எப்படி முடிவெடுப்பீர்கள்?" என்று கேட்டான். ஆண்டிற்கு 6 பில்லியன் டாலருக்கும் அதிகமாக ஊட்டச்சத்து, சுகாதாரம் மற்றும் வீட்டு வசதித் திட்டங்கள் மூலம் வால்மார்ட் ஊழியர்கள் மானியம் பெறுகிறார்கள் என்ற அறிக்கை மிகவும் வருந்தத்தக்கது. பெரும் பண முதலாளிகள், வால்டன் குடும்ப உறுப்பினர்கள் ஆகியோர் உலகப் பணக்காரர்கள் வரிசையில் இருக்கிறார்கள். மற்ற பணக்காரர்களைப் போலவே சமூகநலத் திட்டங்களைக் கடுமையாக விமர்சித்தார்கள். ஆனால் அதன் மூலம் பெரிதும் பயனடைந்தவர்கள் அவர்கள்தான் என்கிறது வரலாறு."

பொருளாதார அடியாட்கள் என்ற புற்றுநோய் எவ்வாறு தடம் மாறியது என்பதற்கு இந்தப் பெருங்கழுகு நிதியங்கள் மற்றொரு உதாரணம். ஒரு நாடு தன்னுடைய இயல்பு நிலையிலிருந்து தவறிப் பொருளாதாரக் குழப்பத்தில் விழுந்த பிறகு அந்த நாட்டின் கடன்களை இந்த நிதியங்கள் குறைந்த தொகைக்கு வாங்கி விடுகிறது. அந்த நாட்டின் பொருளாதாரம் மீள ஆரம்பித்த பிறகு வட்டியோடு சேர்த்துக் கடனைத் திருப்பிச் செலுத்தச் சொல்லி

வற்புறுத்துவதோடு, பெரும்பாலும் கூடுதல் தொகையும் சேர்த்தே விதிப்பார்கள். அதிலும் பெரும்பானோர் இலக்கில் இருக்கும் நாட்டில் வியாபாரங்களை முடக்கிட முதலீட்டாளர்களை அச்சுருத்துவது என்று அடுத்த அடியை எடுத்துவைப்பார்கள்.

இதில் இருபத்தியாறு பெருங்கழுகுகள் 1 பில்லியன் டாலரை உலகின் மிக ஏழையான நாடுகளிடமிருந்து வசூலித்திருக்கிறது. மேலும் 1.3பில்லியன் டாலர்களை வசூல் செய்ய ஒதுக்கியிருக்கிறது. அந்த 1 பில்லியன் டாலரானது செஞ்சிலுவைச் சங்கத்தின் சர்வதேச நிதிநிலை அறிக்கை 2011 ஆம் ஆண்டில் ஆப்பிரிக்கா முழுவதுக்குமாக ஒதுக்கப்பட்ட நிதியைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகம். சோமாலியாவின் பஞ்சத்திற்கு ஐநாவிடம் முறையிடப்பட்ட மொத்தத் தொகையும் இதிலிருந்து வழங்கலாம்.

கழுகு நிதியங்கள் அர்ஜென்டினா, பிரேசில், காங்கோ , ஈக்குவேடார், கிரீஸ், ஐஸ்லாந்து மற்றும் அயர்லாந்து போன்ற நாடுகளின் பின்னால் சென்றது. மேலும் தனது பார்வையை கடனிலும், பொருளாதாரச் சிக்கலிலும் தவித்துக் கொண்டிருக்கும் இத்தாலி மற்றும் ஐரோப்பிய நாடுகளின் மீதும் செலுத்தியது. இதற்கு எத்தனையோ உதாரணங்கள் இருப்பினும் பெரு நாட்டின் நிலை கவனிக்கத்தக்கது.

1983ஆம் ஆண்டு பெரு நாடு பொருளாதார மற்றும் சமூகச் சரழிவைச் சந்தித்தது. இது தீவிரவாத நடவடிக்கைகளாலும், சமாளிக்க முடியாத வெளிநாட்டுக் கடன்களாலும் தீவிரமடைந்தது. நீண்ட பேச்சுவார்த்தைக்குப் பிறகு அதன் கடன்கள் 1996 இல் தீர்த்துவைக்கப் பட்டது. அரசியல் பிரச்சாரங்களின் முக்கிய ஆதரவாளரான பால் சிங்கரால் நடத்தப்படும் நிதி நிறுவனமான எல்லியட் கூட்டமைப்பு 20 மில்லியன் டாலர் பெருவியர்களின் கடன்களை 11 மில்லியன் டாலருக்கு வாங்கினார். அதன் பிறகு மூலத் தொகையை வட்டியுடன் சேர்த்துக் கட்ட வேண்டுமென்று பெரு நாட்டு அரசின் மீதும், சென்ட்ரல் வங்கியின் மீதும் நியூயார்க் நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தார். 58 மில்லியன் டாலர் திருப்பிச் செலுத்த வேண்டுமென்ற தீர்ப்போடு வழக்கை வென்றது எல்லியட் நிறுவனம். ஆக முதலீடு செய்ததில் 400 சதவிகிதத்திற்கும் அதிகமான அளவில் 47 மில்லியன் டாலர் இலாபம். மிகப்பெரிய தொகையான இந்த இலாபம் சமூக மற்றும் சுற்றுப்புறச் சூழல் திட்டங்களுக்காக அந்த நிறுவனம் செய்யும் அதிகபட்ச செலவுத் தொகையாக மீண்டும் பெரு நாட்டிற்குள் வந்தது."

உலகம் முழுவதும் இறுதியாக வந்த பொருளாதார மந்த நிலையும், நெருக்கடியும் இந்தக் கழுகு நிதியங்கள் மேலும் சுரண்டுவதற்கு வழிவகுத்தது. வளந்துவரும் இந்த வகைப் பொருளாதாரச் சூழலில் பெரு அல்லது ஐரோப்பிய நாடுகள் உட்பட கடுமையான கடனில் தவிக்கும் ஏழை நாடுகள் திட்டத்தின் கீழ் உலக வங்கியிடம் கடன் வாங்கத் தகுதி பெற்றிருந்த முப்பத்தொன்பது இதர நாடுகளும் (பெரும்பாலும் ஆப்பிரிக்க நாடுகள், அவர்களது இலக்காக இருந்தது.

பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம் புத்தகத்தில் உலக வங்கியையும் அதன் இணை நிறுவனங்களையும் நாடுகளை அடிமையாக்கிட அவர்களின் கடன்களை ஆயுதமாகப் பயன்படுத்து கின்றனர் என்று சித்தரித்திருந்தேன். அது முற்றிலும் உண்மையானது. அன்றிலிருந்து இந்தக் கழுகு நிதியங்கள் அடிமைப்படுத்துவதற்கான முக்கியக் கூறாக கடன்களைப் பயன்படுத்தி தங்களின் செயல் பாடுகளை அடுத்த கட்டத்திற்கு எடுத்துச் சென்றுவிட்டனர்.

பொருளாதார அடியாட்களின் வளர்த்து விட்ட பல்வேறு நடவடிக்கைகளைப் போல் கழுகு நிதியங்கள் இலக்கு வைத்த நாடுகளைப் பாழ்படுத்துவதோடு நின்று விடவில்லை உலகப் பொருளாதாரத்தை நிலைத்தன்மையற்றதாகவும் மாற்றினார்கள்.

உலக வங்கியின் முன்னாள் துணைத் தலைவரும், பொருளாதார வல்லுநருமான ஜோசப் டிக்ளிட்ச் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

அர்ஜென்டினாவில் கழகு நிதியங்கள் என்றழைக்கப்பட்ட சிறிய முதலீட்டாளர்களோடு அதிகாரிகள் மோதியதால் நாட்டின் பெரும்பான்மையான கடன்களையும் திரும்பச் செலுத்த முன்வந்த அவர்களால் பிறகு பாதிப்பு ஏற்பட்டது. அதேபோல கிரீஸில் வலியத் திணிக்கப்பட்ட சிக்கன நடவடிக்கையினால் மொத்த உள்நாட்டு உற்பத்தியில் 25 சதவிகித சரிவைச் சந்தித்து மக்களை மோசமான நிலையில் கைவிட்டது. மேலும் உக்ரெய்னில் அரசின் கடனுக்காக எழுந்த வலிமையான அரசியல் கிளர்ச்சி ஏற்படுத்திய பாதிப்புகள் ஏராளம்.

***

கடந்த காலங்களை நான் திரும்பிப் பார்கையில் 1970களில் பொருளாதார அடியாட்கள் மற்றும் அவர்களது பெருநிறுவன முதலாளிகளிடையே நடந்ததற்கும், இப்போது நடப்பதற்கும் ஒப்பிட்டுப் பார்க்கிறேன். இருப்பினும் இதில் அச்சமூட்டும் வகையில் கவனிக்கத்தக்கது என்னவென்றால் இன்றுதான் கொடிய நடவடிக்கைகள் அதிகமாக வியாபித்துள்ளது. மேலும் வியாபாரக் கல்வியின் தரத்தை நிர்ணயிக்கும் கல்வியாளர்களாலும், பொது மக்களாலும் பெரு நிறுவனங்களை நிர்வகிக்கும் செயலாளர்களாலும் அவை பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டன.

திருட்டு முதலாளிகளும், அவர்களது ஆதரவாளர்களும், நவீன பொருளாதார அடியாட்களும் அவர்களுக்கு முக்கிய மென்று கருதப்படும் கடன் மற்றும் அச்சத்திற்கான கொள்கைகளை ஆதரிக்க என்ன வேண்டுமானாலும் செய்யும் உரிமை அவர்களுக்கு இருக்கிறது என்று நம் அனைவரையும் சதியினால் நம்ப வைத்தார்கள். அமெரிக்க உச்சநீதிமன்ற முடிவுகளையும், முதலாளித்துவத்தின் மிகக் குறுகிய முறையின் நன்மைகள் பற்றிய வாதங்களையும் பார்க்கும்போது அவர்களது வசதியான வாழ்க்கைக்குத் தேவையான உரிமைகளை நாமாகவே வழங்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள் என்று தெரிகிறது. நமது மறைமுக ஒப்புதலோடு நமது செலவிலேயே அவர்கள் இதைச் செய்துகொண்டார்கள். பொருளாதார மந்தநிலை முடிந்துவிட்டதென்று சொல்லப்பட்ட 2009 ஆம் ஆண்டு முதல் ஒரு சதவிகித அமெரிக்கர்கள் 95 சதவிகித செல்வத்தைப் பெற்றுக் கொண்டார்கள். 90 சதவிகித மக்கள் ஏழையாகவே இருக்கிறார்கள். ஒவ்வொரு 1 பில்லியன் டாலர் செல்வம் உற்பத்தியானபோதும், சராசரி அமெரிக்கக் குடிமகன் ஒரு டாலர் பெறுகிறான். உலக அளவில் பாதிமக்களை விடவும் அதிகமான வளங்களை 85 தனிநபர்கள் மட்டுமே தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டார்கள். 19 - இன்றைய பொருளாதார அடியாட்கள் அமெரிக்காவிலும், உலகப் பொருளாதாரம், அரசியல், சமூகம் மற்றும் சுற்றுப்புறச் சூழல் விவகாரங்களிலும் ஏற்படுத்திய தாக்கத்தில் சில துளிகள் மட்டுமே இங்கு உதாரணமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவை நான் பணியாற்றிய காலந்தொட்டு பொருளாதார அடியாட்கள் எந்த அளவிற்கு வேலை செய்தார்கள் என்று எடுத்துரைக்கிறது.

பயங்கரமான ஒன்று குள்ளநரிகளுக்கு இடையேயும் நடந்தது.

## அத்தியாயம் 11 - இன்றைய குள்ளநரிகள் யார்?

இஸ்தான்புல்லில் வியாபார மாநாட்டில் பேசிக்கொண்டிருந்த போது நான் சந்தித்த மாணவன் ஜாபர் என்னிடம் வந்து, "எனது தாத்தா, பாட்டி வாழ்ந்த கிராமத்தில் (பாகிஸ்தானில்) உள்ள தெரு வழியாக நடந்துகொண்டிருந்தேன். அப்போது திடீரென எனக்கு அடுத்து இருந்த கட்டிடம் எறிகணைத் தாக்குதலால் வெடித்தது. மக்கள் அனைவரும் அலறியடித்துக் கொண்டு வெளியே ஓடினர். தனது குழந்தையைக் கையில் தூக்கிக்கொண்டு ஓடிய ஒரு பெண் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தாள். நான் உடனே அவளிடம் விரைந்து சென்று, குழந்தையை வாங்கிவிட்டு, அவளைத் தரையில் படுத்து உருளுமாறு கூறினேன்" என்று கூறிக் கண்ணீர்விட்டு அழுதான்.

அந்த எறிகணைத் தாக்குதலை நடத்தியவர்கள் புதிய குள்ள நரிகள். ஜாபர் போன்ற மக்கள் சொல்வதை கேட்கையிலும், எறிகணைத் தாக்குதல் பற்றிய பல அறிக்கைகளை வாசிக்கையிலும் வார்த்தைகளால் விவரிக்க இயலாத ஒரு கடுமையான உணர்ச்சிக்கு ஆளாகிறேன். பற்றியெரியும் கட்டிடங்களிலிருந்து அமெரிக்க அதிரடிப்படை - பாதிக்கப்பட்ட குழந்தைகளை மீட்பது, நார்மேன்டியின் கடற்கரைகளில் மையம் கொள்வது, நாஜிகளின் அகதிகள் முகாம்களை விடுவிப்பது போன்ற புகைப்படங்கள் மூலம் இரண்டாம் உலகப் போரின் வீரக் கதைகளைக் கேட்டு வளர்ந்தவன். நான் 1950களைப் பார்த்தவன், நம்ப முடியாத வீரத்துடன் பொதுவுடைமைவாதிகளின் சிறைச்சாலைகளில் ஊடுருவிய, மூன்று விதமான வாழ்க்கை நடத்தும் அமெரிக்க உளவாளிகளை நான் தலைமையேற்று வழி நடத்தியிருக்கிறேன். எனவே இரகசியமான சோவியத் ஒரு ங் கிணைப்பை ஊடுருவிய சிஐஏ உளவாளிகளையும், சேய்க்கெல்லசிற்குள் நுழைந்த குள்ள நரிகளையும் பார்த்திருக்கிறேன். ரோல்டோஸ் மற்றும் டோரிஜோசியின் விமானங்களில் வெடிகுண்டு வைத்ததைப் போன்ற அவர்களின் செயல்களை நான் எதிர்த்த போதிலும் பேராபத்தை சந்தித்திருக்கிறேன்.

ஆனால் எறிகணைத் தாக்குதல் நடத்துபவர்கள் அப்படிப் பட்டவர்கள் அல்ல. அவர்கள் தங்களது உயிரைப் பணயம் வைக்க மாட்டார்கள்; இறந்தவர்கள் மற்றும் காயம் பட்டவர்களின் அலரல்களைக் காதில் வாங்கிக் கொள்ள மாட்டார்கள் அல்லது பாதிக்கப்பட்ட அப்பாவிகளின் துயரங்களைக் கண்டு கொள்ள மாட்டார்கள். கணினி முன்பு அமர்ந்திருப்பார்கள். அவர்கள் வீரமானவர்களும் அல்ல. அவர்களது பணியில் எந்த சாகசத் தன்மையும் அடங்கியிருக்காது. ஒரு நாடு இத்தகைய துயரங்களை பிற மக்கள் மீது திணிப்பதிலும் எந்த வீரமும் அடங்கியிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

உண்மையில் இன்றைய உலகில் நாம் செய்து கொண்டிருப்பதை நினைத்து நான் வெட்கப்படுகிறேன். இருப்பினும் ஒரு ஆழமான மனக்குழப்பத்தையும் நான் உணர்கிறேன். ஹெனாய் சிறைச்சாலையில் எனக்குள் தோன்றிய அந்தக் கேள்விகளைத் திரும்பத் திரும்ப கேட்டுக்கொள்கிறேன்: நமது தலைவர்கள் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்? அவ்வாறு பிற உயிர்களின் மீது இரக்கமில்லாமல் நடத்தப்படும் அவமதிப்பு இரண்டாம் உலகப் போரின்போது உலகின் மதிப்பைப் பெருக்கி ஒரு நாட்டின் நன்மதிப்பைச் சீர்குலைத்ததை அவர்கள் காணவில்லையா?

அல் கு வெய்தா மற்றும் இதர தீவிரவாத இயக்கங்களின் தலைவர்களை அழிக்க ஏவுகணைத் தாக்குதல் நடத்தியபோது அப்பாவி மக்கள் படுகொலை செய்யப்பட்டதாகப் பல கதைகள்

செய்திகளில் வந்தபோதும், பென்டகன் கூறும் இணை சேதத்தினால் அனைத்துத் தவறுகளின் புள்ளிவிவரங்களும் சரியாகக் கிடைப்பதற்கு வாய்ப்பில்லாமல் போனது. அவற்றைக் கணக்கிடலாம் ஆனால் அதிர்ச்சிகரமானதாக இருக்கும்.

ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான், ஏமன், சோமாலியா, ஈராக், பிலிப்பைன்ஸ், லிபியா மற்றும் சிரியா ஆகிய நாடுகளில் அமெரிக்காவின் கொடூரத் தாக்குதலால் 6000 மக்களின் உயிர்கள் நீதிக்குப் புறம்பாகப் பறிக்கப்பட்டது என்று சூன் 2015இல் பன்னிரண்டு இராணுவ வீரர்கள் வெளியிட்ட கடிதங்கள் மூலம் அறியப்பட்டது. இந்தக் கடிதங்கள் கிடைக்கப் பெற்றதும் எறிகணையை இயக்குபவர்கள் தொடர்ந்து செயல்பட மறுத்துவிட்டனர். பொதுமக்கள் மீதான இந்த கண்மூடித் தனமான தாக்குதலையும் தீவிரவாதத் தாக்குதலாகவே உலகம் பார்ப்பதை அந்த இராணுவ வீரர்கள் புரிந்து கொண்டனர்.

பல்வேறு மோதல்களுக்கும் ஆதாரமாக விளங்கக் கூடிய இயற்கை வளங்கள், எண்ணெய் வயல்கள், போர், அழிவு, மறுஆக்கம் ஆகியவற்றிலிருந்து பெருத்த பயனடையும் பெருநிறுவன முதலாளி களுக்கு நவீனக் குள்ள நரிகள் மற்றும் எறிகணைக் கட்டுபாட்டாளர் களின் நடவடிக்கை பயன்தருவதாக அமைவதை இராணுவ வீரர்கள் முதன்முறையாகக் கண்டனர். அதேநேரம், அவர்களது நடவடிக்கை அமெரிக்காவின் நம்பகத் தன்மையைக் குறைப்பதாகவும், அமெரிக்கக் குடிமக்களின் விருப்பங்களுக்கு எதிரானதாகவும் இருந்தது. அச்சத்தின் அடிப்படையில் அமைந்த பொருளாதாரத்தை வளர்த்தது.

ஓய்வு பெற்ற அமெரிக்க இராணுவத்தின் தலைமைத் தளபதியும், அதிபர் ஒபாமாவின் முன்னாள் உளவுத்துறை அதிகாரியுமான மைக்கேல் பிளைன், எறிகணைத் தாக்குதலை வன்முறையையும், தீவிரவாதத்தையும் ஊக்குவிக்கும் "தோல்வியுற்ற போர்த்தந்திரம் " என்று குறிப்பிடுகிறார். மேலும் நீங்கள் எறிகணை விமானத்திலிருந்து ஒரு குண்டை வீசுகையில்...... அதன் மூலம் அடையும் நன்மையைக் காட்டிலும் பாதிப்புகளே அதிகம் என்றார். 2014 இன் கோடைகாலம் வரை பென்டகனின் இராணுவ உளவுப்பிரிவு முகவாண்மைக்குத் தலைமை தாங்கியவர் பிளைன் என்பது குறிப்பிடத்தக்கது.

பொருத்தமற்ற, கோழைத்தனமான செயல்களாகப் பார்க்கப் பட்ட அனைத்தையும் இன்றைய குள்ள நரிகள் மாறுவேடத்தில் செய்கிறார்கள். விக்கி லீக்ஸ் மற்றும் எட்வர்ட் ஸ்நோடென் சமீபத்தில் வெளியிட்ட ஆவணங்கள் சிஐஏவின் கொடுமைகளும், உச்சகட்டக் கடத்தல் காட்சிகளும், அரசால் வாடகைக்கு அமர்த்தப்பட்ட துணை இராணுப் படைகளும், பன்னாட்டு நிறுவனங்களும், சிஐஏ மற்றும் சிறப்புப் படைகளின் உயர்மதிப்பு இலக்குப் படுகொலை நிகழ்வுகளும் அதிகமாகி வரும் உண்மையை எச்சரிக்கிறது.

தங்களது வீரம் மற்றும் அறிவை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் இரகசிய உளவாளிகளைப் போல் அல்லாமல் வான்வழித் தாக்குதல்கள், செயற்கைக் கோள்கள் மற்றும் இதர தொழில் நுட்பங்களின் ஆதரவோடு புதிய "குள்ளநரிகள் கூட்டம் இயங்குகிறது.

பொதுவாக அமெரிக்கர்களுக்கு பென்டகனின் சிறப்புப் பயிற்சி இராணுவக் குழுக்களின் நடவடிக்கைகள் பற்றி எந்தத் தகவலும் அறியாதபடி வைத்திருப்பினும், முதன்மைக் கடற்படை மற்றும் உள்நாட்டு இராணுவப் படை அதிகாரிகள் எங்கு தாக்குதல் நடத்தினாலும் அதில் எவ்வித இரகசியமும் இருக்காது.

சூன் 2015 வெளிட்ட "சீல் குழு எண் 6: அமைதியான கொலைகளும், தெளிவற்ற கோடுகளும் என்பதன் இரகசிய வரலாறு" என்ற ஒரு கட்டுரையில் நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை அத்தகைய குழுக்களுடைய இரகசியங்களின் முகத்திரையைக் கிழித்துப் போட்டது. அதில் இவ்வாறு எழுதப்பட்டிருந்தது!

உலகம் முழுவதும் முன்னணி நிறுவனங்களின் பணியாளர் களாகவும், வணிகப் படகுகள் வைத்திருப்பவர்களாகவும் அவர்கள் உளவுப்பிரிவு நிலையங்களை நடத்தி வந்தார்கள். அமெரிக்கா கொலை செய்ய அல்லது பிடிக்க நினைக்கும் நபர்களைப் பின்தொடர் ஆண் - பெண் கூட்டாக இணைந்து தூதரகங்களில் இரகசிய நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்.

அத்தகைய நடவடிக்கைகள் அனைத்தும் நாட்டின் புராதணமிக்க, இரகசியம் வாய்ந்த, மிகக்குறைந்த அளவே ஆராயப்பட்ட இராணுவ அமைப்பான கடற்படையின் சில் குழு எண் 6 இன் இரகசிய வரலாற்றின் ஒரு பகுதி. தனித்து அமைக்கப்பட்ட சிறப்புவாய்ந்த சிறிய குழு ஒன்று மிக அரிதான பணிகளுக்கு மட்டுமே ஒதுக்கப்பட்டது. ஆனால் ஒசாமா பின் லேடனைக் கொலை செய்வதற்காக ஒதுக்கப்பட்ட அந்தப் பிரிவு பத்து வருடங்களுக்கு மேலாக மனித வேட்டையாடும் இயந்திரமாகவே போரில் பயன்படுத்தப்படுகிறது.

மேலும் அந்தக் கட்டுரை பெரும்பாலான அமெரிக்கக் கொள்கைகள் தற்போது இரகசியமாகவே நடத்தப்படுகிறது என்ற உண்மை நிலையை வன்மையாக எடுத்துரைக்கிறது. டைம்ஸ் பத்திரிகையின் புலனாய்வுக் குழு ஒரு முடிவிற்கு வருகிறது:

எறிகணைத் தாக்குதல் பற்றிய சிஐஏக்களின் பரப்புரையைப் போல, கொள்கை உருவாக்குபவர்களுக்கு விலையுயர்ந்த போர் களுக்கான மாற்றத்தை சிறப்பு நடவடிக்கைகள் வழங்குகிறது. ஆனால் 6ஆம் எண் குழுவைச் சுற்றியுள்ள இரகசியத்தின் அரண் இறந்த பொதுமக்கள் பற்றிய தகவல்கள் அல்லது அதன் உறுப்பினர்கள் செயல்படும் நாட்டில் ஏற்பட்டிருக்கும் ஆழ்ந்த மனக்கசப்பு ஆகியவை உட்பட அதன் ஆவணங்களையும், அதன் நடவடிக்கைகளின் விளைவு கனளயும் முழுமையாக அணுக வாய்ப்பில்லாமல் செய்துவிடுகிறது."

இராணுவக் குழுக்கள் மற்றும் ஊடகங்கள் ஆகியவற்றில் மட்டும் இந்த மனக்கசப்புகள் இல்லை. நான் உரையாற்றிய அமெரிக்கக் கல்லூரிகளிலிருந்த மாணவர்களாலும் இது வெளிப் படுத்தப்பட்டது. ஆஸ்திரேலியா, அமெரிக்கா, ஐரோப்பா ஆகிய பகுதிகளிலிருந்து மத்தியகிழக்கு நாடுகளுக்கு ஐஎஸ்ஐஎஸ் மற்றும் இதர இசுலாமிய இராணுவ அமைப்புகளில் சேர தங்கள் வயதொத்த ஆண்களும், பெண்களும் பயணம் செய்ததைப் பற்றிக் கூறினார்கள். விரக்தியும், மனக்கசப்பும்தான் அவர்களது இந்த முடிவிற்குக் காரணமாக இருக்கக் கூடும் என்று யூகித்தார்கள். மேலும் அமெரிக்காவின் கொள்கைகள் தீவிரவாதத்தை ஊக்குவிப்பதாகவும் கவலை கொண்டார்கள்.

பெரும்பாலான நாடுகளில் வன்முறைதான் அனைத்துக்குமான தீர்வு என்று வாதிடும் நீண்ட வரலாறு கொண்ட வலிமையான தீவிரவாதிகள் பணியமர்த்தப்படுவதையும், அமெரிக்க ஆட்சியாளர் களால் முன்மொழியப்படும் வறுமை ஒழிப்பு", "பசியை வென்றுடுத்தல்", "போதைப் பொருட்களுக்கு எதிரான போர்" ஆகிய பரப்புரைகளும் வன்முறையால் எந்தப் பயனும் இல்லை என்று வலியுறுத்துகிறது என்பதையும் மாணவர்கள் அடிக்கடி கூறினார்கள். மேலும்

திரைப்படங்களும், தொலைக்காட்சி நிகழ்ச்சிகளும் துப்பாக்கிகளைப் பற்றியும் பல இன்னல்களில் சிக்கிக்கொண்டு வெளிவரும் இளைஞனைப் பற்றியும்தான் அதிகம் காட்டுவதாகவும் குறிப்பிட்டார்கள்.

எனது காலங்களில் கிளர்ச்சிகளுக்கு எதிராகவும், அமெரிக்காவின் உள்ளிருக்கும் பொதுவுடைமைக் கூட்டங்களைக் களையவும் ஈடுபடுபவர்களைத் தவிர மற்ற குள்ளநரிகள் பெரும்பாலும் வெளி நாடுகளுக்கு அனுப்படுவார்கள். அதுவும் கூட இப்போது மாறி விட்டது. 9/11 நிகழ்விற்குப் பிறகு அச்சத்திலிருந்த அமெரிக்கர்கள் தங்கள் அந்தரங்கத்தையும், சுதந்திரத்தையும் தியாகம் செய்ய வேண்டிய நிலைக்கு ஆளானதோடு என்எஸ்ஏ, சிஐஏ, எஃப்பிஐ மற்றும் இதர முகவாண்மைகளுக்கு அதுவரை இல்லாத அளவிற்கு அதிகாரங்களை வழங்கினார்கள். வெளிநாடுகளில் பயன்பட்டு வந்த ஏவுகணைக ளும், கண்காணிப்பு விமானங்களும் தற்போது அமெரிக்காவில் எங்களை உளவு பார்க்கப் பயன்படுகிறது.

தகவலுக்கான சுதந்திரம் வழங்கும் வழக்கின்படி அமெரிக்க மைய அதிகாரம் வெளியிட்ட ஆவணங்கள் அமெரிக்காவின் இருபது மாநிலங்களில் குறைந்தது அறுபத்து மூன்று ஏவுகணைத் தளங்கள் செயல்பாட்டில் இருப்பதாகக் கூறுகிறது (2012 வரை). அதில் பல உள்நாட்டு இராணுவ வீரர்களால் செயல்படுத்தப்படுகிறது. மற்றவை சட்ட அமலாக்க முகவாண்மைகளாலும், அமெரிக்க எல்லைப் பாதுகாப்புப் படையினராலும் நடத்தப்படுகிறது. அதில் சில மக்களைப் படுகொலை செய்ய மட்டுமே பயன்படுத்தப்படுகிறது."

சூன் 2015இல் ஒருங்கிணைக்கப்பட்ட பத்திரிகை வெளியிட்ட அறிக்கை தாழ்வாகப் பறக்கும் விமானங்கள் கொண்ட சிறிய விமானப் படை அமெரிக்க முழுவதும் இருப்பது போன்ற காட்சிகள், கைபேசிக் கண்காணிப்புத் தொழில்நுட்பங்கள் என அரசாங்கத்தின் முன்னோடிகளாக விளங்கும் போலி நிறுவனங்களுக்குப் பின்னால் மறைந்துகொண்டிருக்கும் இவையனைத்தும் எஃப்பிஐ வசம் உள்ளது" என்கிறது. மேலும் சரியான அனுமதி பெறாமலேயே இந்த விமானங்கள் செயல்படுகிறது என்றும் "சமீபத்தில் கடந்த முப்பது நாட்களாக 11 மாநிலங்களில் உள்ள 30 மாநகரங்களுக்கு மேல் இவை பறந்தது' என்றும் அந்த அறிக்கை சொல்கிறது.

***

இந்தக் கட்டுரைகளைப் படிக்கையில் ஹாவர்ட் ஜின்னைச் சந்தித்த பிறகு நான் ஏற்றுக் கொண்டிருக்கும் பொறுப்பை நினைத்துப் பார்த்தேன். எனது சமூகத்தில், எனது நாட்டில், உலகில் என அனைத்து இடங்களிலும் என்ன நடக்கிறது என்பதைக் கூர்ந்து கவனிக்க வேண்டி நான் மேலும் கடுமையாக உழைத்திட உறுதியெடுத்துக் கொண்டேன். மக்களின் நடவடிக்கைகளில் நான் பல மாற்றங்களை உணர ஆரம்பித்தேன். 2011, செப்டம்பர் 11, நிகழ்வு தங்கள் சுதந்திரத்தை விட்டுக்கொடுக்க வேண்டிய அச்சுறுத்தலைத் தந்தது. ஆனால் இராணுவத் தளங்களில் நடந்த கொடுமைகள், சிஐஏவின் கடத்தல் காட்சிகள், தகவல் தெரிவிப்பவர்கள் மீதான தாகுதல்கள், காவல் துறையின் கொடுமைகள், தனிப்பட்ட தொலைபேசி அழைப்புகளை ஒட்டுக் கேட்டல் ஆகியவை பற்றி வந்த தொடர்ந்த அறிக்கைகள் சிந்தனையை மாற்றியது. நமது அந்தரங்கத்தைப் பாதுகாப்பதற்கான சட்டவிதிகளை மீறுவதாக இத்தகைய நடவடிக்கைகள் இருப்பதாக ஊடகங்களும், இணையப் பக்கங்களும் அதிகமாக குறிப்பிட்டு வந்தன. மின்னணு பாதுகாப்பு அமைப்பின் அறிக்கையின்படி :

தேசியப் பாதுகாப்பு முகவாண்மை அமெரிக்கர்களின் தொலைபேசி அழைப்புகளையும், இணையத் தொடர்புகளையும் இடைமறிப்பதாக டிசம்பர் 2008இன் செய்தி அறிக்கைகள் முதலில் வெளியிட்டது. அந்தச் செய்தி அறிக்கைகள் மே 2006 இல் அமெரிக்கா டுடே பத்திரிகையோடு சேர்ந்து பல்வேறு காங்கிரசு உறுப்பினர்களின் அறிக்கைகளையும் இணைத்து அமெரிக்கர்களின் தொலைபேசி அழைப்புகள் மற்றும் தொடர்புகள் பற்றிய மொத்த ஆவணங்களின் நகல்களையும் அமெரிக்கப் பாதுகாப்பு முகவாண்மை பெறுவதாகக் கூறியது. இவ்வகையான அனைத்துக் கண்காணிப்பு நடவடிக்கைகளும் அமெரிக்க சட்ட அமைப்பும், காங்கிரசும் ஏற்படுத்தித் தந்த சட்ட விதிகளை மீறுவதாகவே இருந்தது."

கொடுமையான, குள்ளநரிகளின் நடவடிக்கைகள் ஆயிரக் கணக்கான பக்கங்களில் விக்கிலீக்ஸ் மற்றும் எட்வர்ட் ஸ்நோடென் பத்திரிகையால் வெளியிடப்பட்டது. அது பல அதிர்ச்சியூட்டும், சோகக் கதைகளைக் கூறியது. அரசால் வழங்கப்பட வேண்டிய மக்களாட்சி அவர்களாலேயே ஏமாற்றப்பட்டதையும், லிங்கனால் அறிமுகப்படுத்தப்பட "மக்களால், மக்களுக்காக, மக்களே உருவாக்கும் ஆட்சி என்பது குழிதோண்டிப் புதைக்கப்பட்டதையும் பல மக்கள் புரிந்து கொள்ளத் தொடங்கினார்கள். ஒவ்வொரு நாளும் இரு நூறு மில்லியன் குறுஞ்செய்திகளை தேசிய பாதுகாப்பு முகவாண்மை கண்காணிப்பதாகவும், உளவு பார்க்கக்கூடிய மென்பொருளை ஆயிரம் கணினிகளில் பொருத்தியுள்ளதாகவும் அதன் மூலம் அந்தக் கணினிகளில் உள்ள தகவல்களைத் தெரிந்து கொள்ள முற்படுவதாகவும் நான் கேள்விப்பட்டு அதிர்ச்சி அடைந்தேன். எனது கணினியும் அதில் ஒன்றாக இருக்குமோ என்று வியக்கிறேன்.

குள்ளநரிகள் முகவாண்மைகளில் மனசாட்சியற்ற. குற்றச் செயல்களில் நான் உழைத்துச் சோர்வுற்றதினால் என்னைப் பணியமர்த்திய நிறுவனத்தின் வெளிப்பாடு என்னைச் சீற்றம் கொள்ளச் செய்தது. அதாவது அர்ஜென்டினா, பிரேசில், பிரான்சு, ஜெர்மனி, பிரிட்டன் மற்றும் பல நட்பு நாடுகளில் உள்ள அரசின் உயர்மட்ட இரகசிய ஆலோசனைகள் உட்பட முப்பத்தி ஐந்து தலைவர்களின் தொலைபேசி உரையாடலை தேசியப் பாதுகாப்பு முகவாண்மை ஒட்டுக்கேட்டது போன்றவை தான் அவை. "வெள்ளை மாளிகை, பென்டகன் மற்றும் மாகாண அரசு ஆகிய இடங்களில் தங்களது நிறுவனத்தின் வாடிக்கையாளர் துறையில் உள்ள மூத்த அதிகாரிகளை தங்களது தகவல் சேகரிப்புக் கருவியான 'ரோலோடெசியைப் பகிர்ந்து கொள்ளுமாறு ஊக்கப்படுத்தியது தேசியப் பாதுகாப்பு முகவாண்மை. அப்போதுதான் இவை முன்னணி அரசியல் தலைவர்களின் தொலைபேசி எண்களை தங்களுடைய கண்காணிப்பில் இணைக்க முடியும்" என்கிறது குவார்டியன் பத்திரிகையின் அறிக்கை.

இதை என்னால் ஏற்றுகொள்ள முடியவில்லை. ஆனால் இது நம்பமுடியாத முட்டாள்தனமான அரசியல்தந்திரம். ஜெர்மனின் அஞ்ஜெலா மார்கல் கடுமையாக எதிர்த்ததும், பிரேசிலிய அதிபர் தில்மா ரூசெப் வாஷிங்டன் செல்வதாக இருந்த தனது அரசுமுறைப் பயணத்தை இரத்து செய்ததும் இதனால் ஏற்பட்ட விளைவுகளில் தான் என்பது குறிப்பிடத்தக்கது.

நவீன குள்ளநரிகளின் மற்றொரு கருவி ஒருவரது நடத்தையைச் சீர்குழைப்பது. ஒவ்வொரு அதிபருக்கும், அரசியல்வாதிக்கும் அரசு அதிகாரிகளுக்கும் ஊழல் செய்தால் தங்களது பதவி பறிபோகும் என்பது தெரியும். தற்போது இருக்கின்ற மற்றும் எதிர்காலத் தலைவர்கள் அனைவருக்கும் அதிபர் கிளிண்டன் ஒரு எச்சரிக்கை விடுத்தார். பலரும் சந்தேகப்படுவது போல மோனிகா தலவென்ஸ்கியை லின்டா ட்ரிப் ஏற்பாடு செய்தாரோ, இல்லையோ கிளிண்டன் பாலியல் வழக்கில் இழித்துப் பேசப்பட்டார் (அரசியல் படுகொலை செய்யப்பட்டார்).

என்னுடைய நாட்களில் அதிபர் கென்னடி பல பெண்களோடு தொடர்பு வைத்திருந்தது அனைவரும் அறிந்ததே, ஆனால் அதை யாரும் பொதுவெளிக்கு உட்பட்டதாகப் பார்க்கவில்லை. எனவே அவரைக் கொலை செய்ய ஒரு தோட்டா தேவைப்பட்டது. நவீன ஒட்டுக்கேட்கும் தொழில்நுட்பம் அல்லது தங்களுக்கு எதிரான குற்றச்சாட்டுகளை விதைப்பது போன்றவை தங்களை அழிக்க பயன்படுத்தப்படலாம் என்று உலகம் முழுவதும் இன்று அதிகாரத்தில் இருக்கும் தலைவர்கள் தெரிந்து வைத்திருக்கிறார்கள்.

யாருக்கும் பதில் சொல்ல வேண்டிய அவசியமில்லாதவாறு இராணுவத்தினர் பயன்படுத்துவது போன்ற துப்பாக்கிகளை வாங்கித் தருவது என்று உலகின் பல பகுதிகளில் இன்று கூலிப் படைகள் குள்ளநரிகளுக்கு உதவி வருகிறார்கள். அமெரிக்காவின் 68000 இராணுவ வீரர்களுக்கு ஒப்பிடுகையில் 2012 இல் ஆப்கானிஸ்தானில் மட்டும் 10000 ஒப்பந்தக் கூலிப் படையினர் உள்ளனர். மேலும் வியட்நாமில் உள்ள 70000 கூலிப் படையினர்களையும், 359000 இராணுவ வீரர்களின் எண்ணிக்கையும் இதோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்."

உலகம் முழுவதும் அமெரிக்கர்களின் வரிப்பணத்தில் ஊதியம் பெறும் கூலிப்படையினர் எண்ணிக்கை பற்றிய சரியான தகவல் இல்லை என்றபோதும், அது மில்லியன்களில் உள்ளது என்பது மட்டும் நமக்குத் தெரியும். 2014 இல் அது முப்பது வலிமை வாய்ந்த பாதுகாப்பு நிறுவனங்களாக மாறியது. அதில் ஜிஎஸ் என்ற நிறுவனம் 620000 பணியாளர்களைக் கொண்டு 2012 இல் 12 பில்லியன் டாலர்களுக்கு மேல் ஈட்டியது. வீரர்களை அனுப்பியதோடு, உளவு பார்க்கின்ற கண்காணிப்புக் கருவிகளையும் அரசுக்கும், பெருநிறுவனங்களுக்கும் வழங்கியது.

பொதுமக்களுக்கு நன்கு தெரிந்த கூலிப்படை நிறுவனமான ப்ளேக் வாட்டர் (அகெடமி என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டு விட்டது) ஈராக்கியப் பொதுமக்கள் படுகொலையில் ஈடுபட்டதால் முப்பதாவது இடத்திற்கு வந்துவிட்டது."

வாசிங்டன் கூலிப்படைகளைப் பயன்படுத்துவதன் மூலம் இராணுவம் பின்வாங்குவதாகக் கோருவதற்கு வழி செய்தது. அதனால் அமெரிக்கர்களின் இறப்பு எண்ணிகையும் குறைந்ததோடு கொடுமை களுக்கும், போர்க் குற்றங்களுக்கும் அமெரிக்கா பொறுப்பாவதையும் தவிர்த்தது. வியட்நாம் போரின்போது போருக்கு எதிரான இயக்கத்தைத் தூண்டிவிட்ட செல்வாக்கற்ற வரைவின் தேவையையும் கூலிப்படையின் பயன்பாடு தவிர்த்தது. பென்டகனுக்கோ, அதிபருக்கோ, காங்கிரசுக்கோ அறிவிக்காமல் அவர்கள் குள்ளநரிகளின் சட்டத்திற்குப் புறம்பான காரியங்களுக்கு ஆதரவளித்தனர். அவர்கள் யாருக்கும் பதில் சொல்ல வேண்டிய அவசியமற்று இருந்தார்கள்.

முதலாளித்துவத்தின் விருப்பமும், ஆற்றலும் ஆட்கொணர்வு மனுவற்ற கைது அல்லது படுகொலை உட்பட அனைத்து நடவடிக்கை களையும் கண்காணித்து நடவடிக்கை எடுப்பதாக இருந்தது. அதன் உந்து சக்தியான பேராசைக்கு அச்சுறுத்தல் என்று நினைத்ததால் நாங்கள் செய்வது அனைத்தும் ஜனநாயகத்துக்கு விரோதமாகக் கருதப்பட்டது. எங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகாரிகளை அதன் தரகர்கள் விலைக்கு வாங்கினார்கள். அதன் சிறப்பு நடவடிக்கைக் குழுக்கள் சட்டத்திற்குப் புறம்பான படுகொலைகளை நிகழ்த்தினார்கள். அதன் குள்ளநரிகள் எங்கள் தொலைபேசி உரையாடல்களையும், இணையத் தொடர்புகளையும் கண்காணித்தனர். கட்டுப்பாடுகளைத் தொடர்ந்து செயல்படுத்த என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்பது முதலாளித்துவத்தின் தீர்மானமாக இருந்தது.

இருப்பினும் சமீபகாலமாக முதலாளித்துவத்தின் நடவடிக்கை களில் தயக்கநிலை அதிகரித்துள்ளது. சீனா என்ற புதிய பேராற்றலின் மீது கொண்ட அச்சமே இதற்குக் காரணம்.

## அத்தியாயம் 12 - சீனாவிற்கான பாடம்

வாசிங்க்டனிற்கு பதில் நாம் பீஜிங்கிலிருந்து கடன்களை வாங்கலாம். ஏனென்றால் அமெரிக்காவைப் போல் சீனா நமது தலைவர்களைப் பதவியிலிருந்து இறக்கவோ, கொலை செய்யவோ இல்லை " என்று 2015இல் ஈக்குவேடாரிய உயர் அதிகாரி ஒருவர் என்னிடம் சொன்னார்.

ஆசியாவின் மீதான சீனாவின் படையெடுப்பை நான் குறிப்பிட்ட போது, "ஆம், அவற்றைத் தங்கள் பண்டைய கால அரசாட்சிக்கு உட்பட்ட பகுதிகளாகப் பார்த்தார்கள். ஆனால் அமெரிக்காவைப் போல் இலத்தீன் அமெரிக்காவிலும், ஆப்பிரிக்காவிலும், மத்திய கிழக்கு நாடுகளிலும் அவர்கள் அதைச் செய்யவில்லை " என்று கூறினார்.

நான் பொருளாதார அடியாளாக இருந்த நாட்களில் சிஐஏ ஆதரவு பெற்ற ஈக்குவேடாரிய சர்வாதிகாரிகள் வாங்கிய கடன்களின் சட்டப்பூர்வமான தன்மையை மறு ஆய்வு செய்யும் கடன் தணிக்கை குழுவைப் பற்றி நாங்கள் விவாதித்துக் கொண்டிருந்தோம். அதிபர் கொரீயா 3 பில்லியன் டாலர்களுக்கும் அதிகமான கடன் தொகையைக் கட்டத்தவறி விட்டதாக அந்தக் குழு தெரிவித்தது. 2012 உலக ஒப்பந்தத்தின்படி நிலுவையில் உள்ள 519 மில்லியன் டாலர்களில் அதிபர் திரும்பிச் செலுத்த மறுத்த 30.6 மில்லியன் டாலர்களுக்குப் பழி வாங்க ஸ்டேண்டர்ட் அண்ட் புவர் மதிப்பீடுகளும், ஃபிட்ச் மதிப்பீடுகளும் ஈக்குவேடாரின் கடன் மதிப்பீடுகளைக் குறைத்தது."

அப்போது கொரீயா பீஜிங்கின் பக்கம் திரும்பினார். ஈக்குவேடாருக்கு 1 பில்லியன் டாலர் கடன் தந்தது சீனா. அது விரைவில் 2 பில்லியன் டாலராக மாறியது. கொரியாவின் தலைமையிலான அரசு அந்தக் கடனைத் திருப்பிச் செலுத்தியதும் ஈக்குவேடாரின் கடன் நிலைப்பாட்டை மீண்டும் நிறுவினார் கொரியர். ஆனால் அதோடு தனது நாட்டைச் சீனாவிற்கும், அதன் பொருளாதார அடியாட்கள் முறைக்கும் கடன்பட்டதாக உருவாக்கினார். ஏப்ரல் 2015தோடு சீனாவிடம் ஈக்குவேடார் வாங்கிய கடன் கிட்டத்தட்ட 5.4 பில்லியன் டாலர்களாக உயர்ந்தது. இது ஈக்குவேடாரின் மொத்த வெளிநாட்டுக் கடன்களில் 28 சதவிகிதம் ஆகும்.

2015 கோடைகாலத்தில் நான் ஈக்குவேடார் திரும்பினேன். ஃபன்டேசியனில் உள்ள பச்சமாமா உள்ளாட்சி அமைப்பு சட்டப்படி கலைக்கப்பட்டது. ஆனால் அமெரிக்காவை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் பச்சமாமா கூட்டணியின் பணியை நிறுத்திட எந்த முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை. அச்சுவார் பகுதிகளுக்கான ஆதரவாளர்கள் குழுவிற்குத் தலைமை தாங்கி ஒரு பயணம் மேற்கொண்டிட பில், லைன் ட்விஸ்ட், டேனியல் கூப்பர்மன் ஆகியோருடன் நான் இணைந்தேன்.

கியூடோவிலிருந்து அடர்ந்த வனத்திற்குள் எங்களை அழைத்துச் செல்கையில் விமானங்கள் கிளம்புகிற செல் நிறுவனத்தின் விமான ஓடுதளம் வரையிலான அந்தக் கண்கவர் பயணத்தை நாங்கள் மேற்கொண்டபோது மிகப்பெரிய சுவர் கொண்ட அகோயன் நீர்மின் அணையை நான் உற்று நோக்கினேன். என்னைப் பொறுத்தவரையில் அது சட்டப்பூர்வமாக நான் செய்த குற்றத்தின் சின்னமாகவும், ஜெய்மி ரோல் டோசியின் படுகொலையையும், சமீபத்தில் கொரியாவின் மனதை மாற்றிய சதி முயற்சியின் நினைவுகளையும் வெளிக் கொணர்வது போலவே தெரிந்தது.

உலக வங்கி, சர்வதேச நாணய நிதியம், வால் ஸ்ட்ரீட், கடன் மதிப்பீடு சேவையகங்கள் மற்றும் அமெரிக்க, ஐரோப்பிய வங்கிக் குழு ஆகியவற்றின் மோசடிகள் எவ்வாறு ஈக்குவேடார் மற்றும் அதன் எண்ணெய் வளங்கள் சீனாவின் கரங்களில் சென்று சேர வழி செய்தது என்று யோசித்துக் கொண்டிருந்தேன். 2003இல் இந்த அணையை நான் கடந்தபோது, இந்த நாட்டின் பெரும்பாலான எண்ணெய்கள் அமெரிக்காவிற்குச் செல்கிறது என்று கருதப்பட்டது. ஆனால் 2015 இல் நிலை முற்றிலும் மாறிப்போனது. ஈக்குவேடாரின் எண்ணெய்களில் 55 சதவிகிதத்தைச் சீனா வாங்கிக்கொள்கிறது. அமெரிக்காவிற்கு ஏற்றுமதியாகிவந்த 75 சதவிகித எண்ணெய்கள் கிட்டத்தட்ட முற்றிலும் நின்றுவிட்டது. எல்லாவற்றிற்கும் மேலாக சீனாவின் பங்கு ஈக்குவேடாரில் மட்டுமல்லாது உலகம் முழுவதும் தனது உள்நோக்கத்தை நடைமுறைப்படுத்துவது தான் என்பதை நான் உணர்ந்து கொண்டேன்.

அமெரிக்கா மற்றும் இதர வரலாற்றுப் பேரரசுகள் போன்று சீனாவின் விரிவாக்க வாதமும் நாடுகளுக்குப் பணம் வழங்குவதிலும், அவர்களது வளங்களைச் சுரண்டுவதிலும், அவர்களது தலைவர்களை அச்சத்தில் முடக்குவதிலுமே சுற்றி வந்தது. கொரீயா போன்ற தலைவர்களையும் மற்றும் ஈக்குவேடார், ஹான்டுராஸ் போன்ற பல நாடுகளின் குடிமக்களையும் அச்சுறுத்தும் வேலையை இப்போது சீனா செய்துகொண்டிருக்கிறது.

உலகின் பெரும்பாலான பகுதியினர் எங்களைக் கண்டு அஞ்சும்போது அமெரிக்காவிலிருந்த நாங்கள் சீனா, ரஷ்யா மற்றும் தீவிரவாதிகளுக்கு அச்சப்படக் கற்றுக் கொடுக்கப்பட்டோம். நூற்றுக்கும் மேற்பட்ட நாடுகளில் வாசிங்டன் நிறுவியிருந்த இராணுவத்தையும் பென்டகனையும் அவர்கள் அச்சுறுத்தினர். சிஐஏ, தேசியப் பாதுகாப்பு முகவாண்மை, மற்றும் அனைத்து உளவு முகவாண்மைகளையும் அவர்கள் அச்சுறுத்தினர். ஏவுகணைகள், வெடிகுண்டுகள் ஆகியவற்றையும் அச்சுறுத்தினர். டாலர் மயமான, கடன் அடிப்படையிலான எங்கள் பண அமைப்பையும் அவர்கள் அச்சுறுத்தினர். வெளிப்படையான இது போன்ற அம்சங்களோடு நுட்பமான சிலவற்றையும் கூடுதலாக அவர்கள் அச்சுறுத்தி வந்தனர்.

பொருளாதார வளர்ச்சி அடைகின்ற நாடுகள் தங்களது பெருநிறுவனங்களுக்கான பாதிப்புகளைக் கண்டு அஞ்சினர். ஏனென்றால் வணிக ஒப்பந்தங்கள் மற்றும் கடன் ஒப்பந்தங்களின் மூலம் அவர்களுக்கு விதிக்கப்படும் நிபந்தனைகளின்படி அத்தகைய பெரு நிறுவனங்களை நம்பியே அவர்களது பொருளாதாரம் இருக்கிறது. எனவே அத்தகைய பெருநிறுவனங்களின் உதவியின்றி அவர்களால் வாழ முடியாது என்று அஞ்சினர். பெருநிறுவனங்கள் தங்களது உற்பத்தியை வேறு இடத்திற்கு மாற்றக்கூடும் என்று அஞ்சியதோடு தங்களது எல்லைகளுக்கு உட்பட்ட பகுதியில் இருந்தால் நாட்டை மாசுபடுத்துவதோடு தொழிலாளர்களைக் குறைந்த ஊதியத்திற்குப் பணி செய்யக் கூறி நிர்பந்திப்பார்கள் என்றும் அஞ்சினர். இறுதியில் அந்தப் பெருநிறுவனங்கள் சுற்றுப்புறச் சூழல் மற்றும் சமூகப் பாதுகாப்புச் சட்டங்கள் மிகக் குறைவாக

உள்ள வேறு நாட்டிற்குச் சென்று விடுவதோடு தங்கள் நிறு வனங்களில் பணியாற்றியவர்களை உச்சகட்ட வறுமையில் கைவிட்டுச் செல்லக் கூடும் என்றும் அஞ்சினார்கள்.

அச்சம் மற்றும் கடன் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த அமைப்பு மிகவும் ஆக்கப்பூர்வமாக உள்ளதாகத் தெரியலாம், இருப்பினும் பேரரசுகள் என்றும் வீழ்வதில்லை என்பதை வரலாறு உணர்த்துகிறது. நவீன உலகில் அமெரிக்காவின் எழுச்சியிலும், வீழ்ச்சியிலும் உள்ள இடர்பாடுகள் பெருநிறுவனங்கள் மற்றும் அரசுத் தலைவர்களின் மாபெரும் தோல்வியைக் காட்டுகிறது.

'சோவியத் ஒன்றியம் உடைக்கப்பட்ட பிறகு புதிய பெருவணிக முதலாளிகள் தங்களுடைய அதிகப்படியான இலாபம் என்ற இலக்கை அடைந்திட என்ன வேண்டுமானாலும் செய்வதற்கான அதிகாரம் இருப்பதாக நம்பினார்கள். அரசியல்வாதிகளைக் கெடுத்தல், சட்ட அமைப்புகளைக் கையாளுதல் ஆகியவையும் அதில் அடங்கும். உலக வங்கி போன்ற துணை நிறுவனங்கள் கடன்களுக்கான வட்டி விகிதத்தை உயர்த்தியது, அரசியல் கோரிக்கைகளை முன்வைத்தது, கடன் வாங்கிய நாடுகள் மீது நிபந்தனைகளை விதித்தது, அமெரிக்கா மற்றும் பெருநிறுவனங்களோடு சேர்ந்து தங்களது நிர்வாகத்தின் செல்வாக்கை அதிகரித்தது.

தாங்கள் சுரண்டப்படுவதை அந்த நாட்டில் உள்ள மக்கள் உணர்வதற்கு வெகுகாலம் ஆகவில்லை. இருப்பினும் அவர்களுக்கு வேறு வழியில்லை , அவர்களை ஆதரித்து எதிரீடு செய்யவும் யாருமில்லை. சோவியத் ஒன்றியம் உடைந்தது. பொருளாதார வளர்ச்சி அடைகின்ற நாடுகள் விட்டுக்கொடுப்பதைத் தவிர வேறு வழியில்லை. அதே நேரத்தில் மோசடி செய்யப்பட்டதை உணர்ந்து சீற்றம் கொண்டிருந்தனர்.

பிறகு ஒரே இரவில் சீனா புதிய உலகின் ஆற்றல் மிகுந்த நாடாக உருவானது. பொருளாதார அசுரனாக ஒரு விண்மீனைப் போல் எழுந்தது. சர்வதேச உற்பத்திச் சந்தையில் முக்கியப் பங்காற்றியது. பிறகு அதன் வணிகம் உலக அரங்கில் எதிரீடு செய்யும் ஆற்றல் வாய்ந்த நாடாக சீனாவை மாற்றியது.

அமெரிக்காவும், அதன் நேச நாடுகளும், முதலாளித்துவமும் செய்த தவறுகளிலிருந்து சீனா பாடம் கற்றுக்கொண்டது போல் தெரிந்தது. உலக வங்கி, சர்வதேச நாணய நிதிய ஒப்பந்தங்கள் போன்றவை முன்வைக்கின்ற குறிப்பிட்ட அமெரிக்க கொள்கை களுக்கு வாக்களிக்க வேண்டும் என்பது, டாலர்களில் மட்டுமே வணிகம் செய்ய வேண்டும் என்பது, இராணுவத் தளங்கள் நிறுவ அனுமதிக்க வேண்டும் என்பது போன்ற கடுமையான நிபந்தனைகளை உள்ளடக்கியதாக பெரும்பாலும் சீனா வழங்கும் கடன்கள் இருக்காது. அது உருவாக்கும் தொழிற்சாலைகள் நீண்டகாலம் தொடர்ந்து இயங்கும் என்ற வாக்குறுதியை வழங்கியது சீனா. அந்த வாக்குறுதிகள் காப்பாற்றப்படும் என்ற நிலைப்பாட்டிலும் இருந்தது. ஆனால் இதற்கு எதிராக "இலவச வணிக ஒப்பந்தங்களை வளர்த்தது அமெரிக்கா.

இருப்பினும் சீனாவின் வெளிப்படையான உளச்சார்பு நிலை அமெரிக்காவும், அதன் நேச நாடுகளும் செயல்பட்டதைக் காட்டிலும் சிறப்பாகச் செயல்பட்டு தன்னுடைய கடன் கொள்கை மற்றும் பொருளாதார அடியாள் அமைப்பு முறையைக் கொண்டு நாடு களையும், அதன் வளங்களையும் கட்டுப்படுத்தியது.

- சீனாவிலிருந்து வெளியேறும் மொத்தக் கடன் தொகையைக் கணிப்பது கடினம் என்றபோதும் 2005 முதல் 2013 வரை மட்டும் ஈக்குவேடார் மற்றும் இலத்தீன் அமெரிக்க நட்பு நாடுகளுக்கு 100 பில்லியன் டாலர்கள் கடன் வழங்கியிருக்கலாம் என்று கணிக்கப் படுகிறது. மேலும் உலக வங்கி, அமெரிக்க உள்நாட்டு வளர்ச்சி வங்கி, அமெரிக்காவின் ஏற்றுமதி இறக்குமதி வங்கி ஆகியவற்றையும் விஞ்சியதோடு தற்போதைய கடன் தொகை அதிலும் இரண்டு மடங்காக இருக்கும். புதிய பிரிக்ஸ் (பிரேசில், ரசியா, இந்தியா, சீனா மற்றும் தென்னாப்பிரிக்கா) வங்கி மற்றும் ஐம்பது உறுப்பு நாடுகளைக் கொண்ட ஆசியக் கட்டுமான முதலீட்டு வங்கி ஆகியவற்றின் இயக்கு விசையாக சீனாவே உள்ளது. இந்த வங்கிகளின் சொத்துக்களும், வலிமையும் உலக வங்கியையும் அதோடு தொடர்புடைய நிதி நிறுவனங்களையும் சிறிதாக மாற்றிவிட்டது. கடந்த பத்து ஆண்டுகளில் கடன் வழங்குவதில் உலகத்திற்கே ஆசானாக தன்னை நிலைநிறுத்திக் கொண்டது சீனா."

நான் ஈக்குவேடரில் இருந்தபோது வாசித்த நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை ஒரு கட்டுரையை வெளியிட்டிருந்தது. அதில் தெரிவிக்கப் பட்ட நிகழ்வுகள் எனது காலகட்டத்தில் நடந்த அமெரிக்கப் பொருளாதார அடியாட்கள் முறையின் நடவடிக்கைகளைப் போலவே இருந்தது. சீனர்கள் நிறைய திட்டங்களை எடுத்துக் கொண்டதும், நாங்கள் செய்ததை விட அதிகமாகச் செலவு செய்ததையும் தவிர மற்ற அனைத்தும் ஒத்திருந்தது.

அண்டியன் மலையடிவாரத்தில் உள்ள அடர்ந்த அமேசான் காடுகளில் சுமார் 1000 சீனப் பொறியாளர்களும், பணியாளர்களும் ஒரு அணை மற்றும் 15 மைல் நீளத்திற்கு நிலத்தடிக் கால்வாய் கட்டுவதற்கான கலவையைத் தயார் செய்து கொட்டிக்கொண்டிருந்தனர். அது மூன்றில் ஒரு பகுதிக்கும் மேலான ஈக்குவேடாருக்கு மின்சாரம் தயாரிக்கும் எட்டு மிகப்பெரிய சீன விசையாழிகளுக்கு நதிநீர் வழங்கும் 2.2 பில்லியன் டாலர் திட்டம்.

ஈக்குவேடாரை பெட்ரோலிய பொருட்கள் விற்பனையில் உலக அளவில் உயர்ந்து நிற்கச் செய்யும் ஒரு எண்ணெய் சுத்திகரிப்பு நிலையத்தை பசிபிக் பெருங்கடலில் உள்ள மண்டா துறைமுகத்தின் அருகில் அமைக்க 7 பில்லியன் டாலர்களைக் கடனாக வழங்க சீன வங்கிகள் பேசிக்கொண்டிருந்தன.

நாடு முழுவதும் கிராமங்களிலும், நகரங்களிலும் நெடுஞ் சாலைகள், பாலங்கள், மருத்துவமனைகள், கலாபகஸ் தீவு வரை பல்வேறு இடங்களில் கண்காணிப்பு நிழற்படக் கருவிகளைப் பொருத்துவது என அனைத்தும் சீனப் பணத்தால் உருவாகப் போகிறது. சீனாவின் அரசு வங்கிகள் ஏற்கனவே 11 பில்லியன் டாலர்களை ஈக்குவேடாரின் உள் நாட்டிற்குள் கொட்டிவிட்டது. ஈக்குவேடர் அதற்கு மேலும் கேட்டுக்கொண்டிருக்கிறது.

உலக அரங்கில் வெறும் 16 மில்லியன் மக்களைக் கொண்ட சிறிய நாடு ஈக்குவேடார். ஆனால் அங்கு வாசிங்டன் சிறிது, சிறிதாக தனக்கான நிலங்களை இழந்து கொண்டு வருவதும், பீஜிங் வேகமாக முன்னேறுவதும் எனச் சீனாவின் கால்தடம் விரிந்து கொண்டே போவது புதிய ஒழுங்குமுறையை உருவாக்கியது."

***

வனத்திற்குள் பெய்த அடர்ந்த மழை நிற்க வேண்டி செல் நிறுவனத்தில் எங்களது பச்சமாமா கூட்டணியினர் அலங்கோலமாகக் காத்திருந்தோம். பிறகுதான் நாங்கள் அச்சுவார் இனத்தவர் வாழும் பகுதிக்குச் செல்ல வேண்டும். அங்கு நான் சீனாவைப் பற்றிப் பேசியபோது, சீனா ஒரு அற்புதத்தை நிகழ்த்தியிருக்கிறது என்றும், அவர்களைக் கண்டு அஞ்ச வேண்டும் என்றும் ஒருமித்த கருத்து எழுந்தது. மாவோவின் பண்பாட்டுப் புரட்சியின் சாம்பலிலிருந்து அந்த நாடு எழுந்திருக்கிறது. மேலும் 1972 இல் அதிபர் நிக்சனின் முதல் பயணத்திலிருந்து உலக வரலாற்றில் எந்த நாட்டிலும் இல்லாத அளவு அந்த நாடு ஒரு அற்புதமான பொருளாதார வளர்ச்சியை எட்டியுள்ளது. இருப்பினும் கொடுமையான சுற்றுப்புறச் சூழல் மற்றும் சமூக பாதிப்புகளுக்குப் பிறகே இந்த நிலையை அடைந்துள்ளது. சீனாவிலேயே கடுமையான மாசு ஏற்பட்டு இலட்சக்கணக்கான சீனர்கள் தரமற்ற சமூகச் சூழலில் வாழ்கிறார்கள். சீனா உலக முக்கியத்துவம் வாய்ந்த நாடாக வளர்கிறது என்றும், அமெரிக்காவைக் காட்டிலும் சீனாவின் நடவடிக்கைகள் பயங்கரமான விளைவுகளை ஏற்படுத்தும் என்ற அச்சத்தையும் மக்கள் வெளிப்படுத்தினார்கள்.

ஒரு பொருளாதார அடியாளின் வாக்கு மூலம் எழுதத் தொடங்கிய நாள் முதல் இரண்டுமுறை நான் சீனா சென்று வந்தேன். சாங்காயில் தொழில் நிர்வாகத்துறை முதுகலை மாணவர்களின் மாநாட்டில் நான் உரையாற்றச் சென்றதுதான் எனது கடைசிப் பயணம். அதில் கலந்துகொண்ட பல சீன மாணவர்கள் பொதுவுடைமைக் கட்சியின் உறுப்பினர்களாகவும், வருங்காலத் தலைவர்களாகவும் இருந்தார்கள். தங்கள் நாட்டின் சுற்றுப்புறச் சூழல் பாதிப்புகளைப் பற்றிப் பெரிதும் கவலைப் படுவதாகவும், எனவே அவற்றை ஒழிக்கப் போவதாகவும் தெரிவித்தனர். மண்டி ழாங் என்ற மாணவர் சீனா ஒரு பொருளாதாரப் புரட்சியை ஏற்படுத்தும் என்பதற்குச் சான்றே அதன் பொருளாதார வளர்ச்சிதான் என்ற கருத்தை முன்வைத்தார். மேலும் "இப்போது எனது தலைமுறை ஒரு பசுமைப் புரட்சியை உருவாக்க வேண்டும்" என்றும் வலியுறுத்தினார்.

பச்சமாமா கூட்டணியிலிருந்த ஒருவர் 'நாம் என்ன செய்ய முடியும் ? சீனாவை நாம் எவ்வாறு தடுத்து நிறுத்துவது?" என்று கேட்டார்.

நமக்கு நாமே நேர்மையாக இருக்கையில், அமெரிக்காவில் இருக்கும் நமது மனநிலையை மாற்றுவதைக் காட்டிலும் சீனாவை மாற்றுவது கடினமான வேலை இல்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். சீனாவின் பெரும்பகுதி மாசுபாடு நம்மால் ஏற்பட்டது என்பதை நாம் முதலில் ஒப்புக்கொள்ள வேண்டும். அதேதான் சமூக நிலையிலும். அந்தத் தொழிற்சாலைகளில் உருவாகும் பொருட்களை நாம் வாங்குகிறோம். நாம் குறைந்த விலைக் கடையை நாடுகிறோம், ஆனால் அவற்றின் பெரும்பாலான பொருட்கள் சுற்றுப்புறச் சூழலை மாசுபடுத்தும் சீனத் தொழிற்சாலையில் உருவாகிறது.

- உண்மையில் சீனாவின் பொருளாதார அற்புதங்கள் அமெரிக்காவாலும், பன்னாட்டு நிறுவனங்களாலும் உருவானது. சீனாவின் முக்கிய நபர்கள் முதலாளித்துவத்தோடு இணைந்து விட்டார்கள். உள்நாட்டுத் தயாரிப்பை ஏற்றுமதி செய்யும் நாடுகளில் சீனா முதன்மையானது. 2001 முதல் 2010 வரை வருடத்திற்கு 20 சதவிகிதம் ஏற்றுமதி வளர்ச்சி கொண்டுள்ளது. 2004இல் சீனா 200 பில்லியன் டாலர் மதிப்புமிக்க பொருட்களை அமெரிக்காவிற்கு ஏற்றுமதி செய்தது. அதுவே 2014இல் இரண்டு மடங்காகி 467 பில்லியன் டாலராக மாறியது."

சீனாவைப் பற்றி யூகித்துக் கொண்டிருப்பதற்கு பதிலாக நாம் சீர்திருத்த நடவடிக்கைகளில் ஈடுபடலாம். பெருநிறுவனங்கள் இன்று உலக அளவில் விரிந்துவிட்டது. அமெரிக்காவில் உள்ள நாம் ஒரு வலிமையான, தொலைநோக்குப் பார்வையைச் செலுத்த வேண்டும். தோல்வியடைந்த ஒரு திட்டத்தை இன்று சீனா பின்பற்ற முயற்சிக்கிறது. உலக மக்கள் தொகையில் 5 சதவிகிதத்திற்கும் குறைவான மக்கள் (அமெரிக்காவில் வாழ்பவர்கள்) 25 சதவிகித வளங்களை அனுபவித்துக் கொண்டிருக்கையில், உலக மக்கள் தொகையில் 19 சதவிகிதத்தினரைக் கொண்டசீனா எவ்வாறு அதே வாழ்க்கை முறையைப் பின்பற்ற முடியும்? இந்தியா, பிரேசில் போன்ற நாடுகளையும் அந்த வழிமுறையில் இணைப்பது இயலாத ஒன்று. எனவே நாம் மாற வேண்டும்.

அமெரிக்காவில் உள்ள நாமும், மற்றவர்களும் அவர்களைப் பலிகிடாவாகப் பயன்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும். நாம் அவர்களை அச்சப்படுத்த வேண்டியதில்லை என்பது போலவே, மரணப் பொருளாதாரத்தை வளர்த்த உலகச் சிக்கலான பெருநிறுவன முதலாளித்துவக் கொள்ளைக்கு அவர்கள் மீது பழி சுமத்துவதும், அதற்கான தீர்வுகளை அவர்களிடம் எதிர்பார்ப்பதும் கூடாது. அவர்களும் நம்மைப் போன்றவர்கள்தான் என்று நாம் அங்கீகரிக்க வேண்டும். நம்மில் ஒவ்வொருவரும் பொறுப்பை ஏற்க வேண்டும். சீனர்களும், பிரேசிலியர் களும், இந்தியர்களும், நமது அதிபரும், நமது பெருநிறுவனங்களும், அரசியல் தலைவர்களும் மற்றும் அனைவரும் பின்பற்றும் ஒரு புதிய கொள்கையின் மாதிரியை நாம் உருவாக்க வேண்டும்.

இது பொருளாதாரத்தின் இயக்கவியலை மட்டுமல்லாது அதன் சிந்தனைகளையும், நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக பொருளாதாரத்தை வழிநடத்திய கடன், அச்சம், பிரிவு ஆக்கிரமிப்பு, பற்றாக்குறை போன்ற நம்பிக்கைகளையும் மாற்றுவதும்தான் என்பதை உணர வேண்டும் அது விவசாயம், சுரங்கம் போன்ற பகுதிகளில் சுரண்டப் பட்ட நிலங்களை மீட்பது உட்பட நிலைபெற்ற சிந்தனைகளின் மாற்றமாக இருக்க வேண்டும். இது ஒரு புரட்சி. மரணப் பொருளாதாரத்திலிருந்து வாழ்வியல் பொருளாதாரத்திற்கு மாறுவது என்ற உணர்வு நிலை மாற்றம் அல்லது உணர்வுநிலைப் புரட்சி.

## அத்தியாயம் 13 - உங்களால் என்ன செய்ய முடியும்

"உங்களுக்குத் தேவை அன்பு மட்டுமே" என்கிறார் ஜான் லெனன். அமைதிக்கான நோபல் பரிசு வாங்கிய அவரது எண்ணங்களை ஒரு மாநாட்டின் மூலமாக வெளிப்படுத்துவதைக் காட்டிலும் சிறந்த வழி எது?" என்று என்னிடம் கேட்டார் சமந்தா தாமஸ்.

அமைதி மற்றும் மாற்றத்திற்கான கனவு அமைப்பில் எனது பெரும்பங்கைப் பாராட்டி 'லெனன் ஓனோ' விருதை எனக்கு வழங்கியது 'யோகோ ஓனோ' நிறுவனம். அந்த நிறுவனம் பல ஆண்டுகளாக இருந்து வருகிறது. இருப்பினும் இப்போதுதான் அறிவான, ஆற்றல் வாய்ந்த, இருபது வயதைக் கடந்த சமந்தா என்ற பெண்மணி அதன் நிர்வாக இயக்குனராக வந்திருக்கிறார். தொழில்களில் மேலும் சாதிக்கவும், கருணை பொருந்திய உயர்தரத்தினை நிர்ணயிக்கவும் ஊக்கப்படுத்த வேண்டி 2015ஆம் ஆண்டு வர்த்தக மாநாட்டை நடத்த விரும்பினார். எங்களோடு இணைந்து மாநாட்டை நடத்திட உலகின் சிறந்த, மதிப்பு வாய்ந்த

விளம்பர நிறுவனங்களுள் ஒன்றான வீடன்+கென்னடி குழுமத்தின் முதலாளியான டேன் வீடனை நானும், சமந்தாவும் சமரசம் செய்தோம். ஆரம்பத்திலிருந்தே இதை 'அன்பின் மாநாடு' என்று அழைத்து வந்தார் சமந்தா. ஆனால் நானும், டேனும் இதை மறுத்தோம். தொழில் மாநாட்டிற்கு 'அன்பு' என்ற வார்த்தை பொருத்தமற்றது என்று நாங்கள் கருதிய போதிலும், இறுதியில் அதை ஏற்றுக்கொண்டோம். - வெற்றிகரமான முதலாளிகளாகவும், பெருநிறுவனத்தின் செயலர்களாகவும் வந்திருந்த பெரும்பாலான பங்கேற்பாளர்களைப் போல நாம் ஒருவரை ஒருவர் நேசிப்பதோடு, இந்த உலகையே நேசித்தால் அனைத்தும் நல்லதாகவே நடக்கும் என்பதை நானும், டேனும் புரிந்து கொண்டோம். ஒரு நிறுவனத்தையும், அதன் பொருட்களையும் நேசிக்க வாடிக்கையாளர்களுக்குக் கற்றுக் கொடுப்பதே சந்தைப்படுத்துதலின் நோக்கம் என்று பெரும்பாலான பேச்சாளர்கள் குறிப்பிட்டனர். அவ்வாறு நிறுவனத்தையும், அதன் பொருட்களையும் நேசிக்க வாடிக்கையாளர்களை ஈர்க்க வேண்டும் என்பதே உலகை மாற்ற நாம் செய்ய வேண்டியது. மேலும் தொழில் புரிவோரையும் அதற்காகவே தங்களை ஈடுபடுத்திக் கொண்டு செயல்பட வைத்திடவேண்டும்.

தொழில் புரிபவர்கள் புதியதோர் உணர்வுநிலைக்குச் செல்வ வேண்டும் என்பதை ஒவ்வொரு பேச்சாளர்களும் வலியுறுத்தியதை கவனித்தேன். எனது உயிரைக் காப்பாற்றியதன் மூலம் எனது மனநிலையை மாற்றிய துன்டு வாம் மற்றும் சுவார், சாமன் பழங்குடியின மக்களை நினைத்துக் கொண்டிருந்தேன். நாம் கனவு காண்பதைப் போல்தான் இவ்வுலகம் இருக்கும். பிரித்தாள்வது, ஆக்கிரமிப்பது என்று நமது கனவுகள் இயந்திரமயமாகிவிட்டதோடு, எப்போதும் பிறருக்கு எதிர்மறையான மனநிலையோடு வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

எனக்கு மிகுதியான பொருள் தேவைப்பட்டால், பிறரிடமிருந்து எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நமக்கு நாமே சொல்லிக் கொள்கிறோம். புதிய கனவிற்கான பாதையில் செயல்பட வேண்டிய நேரம் இது.

மாநாட்டின் முடிவில் "அன்பு ஒன்றே உங்களுக்குத் தேவை" என்று சமந்தா கூறியபோது புதிய கனவின் அடிப்படையை அவள் வெளிப்படுத்துகிறார் என்பதை உணர்ந்தேன். இந்தக் கனவைத்தான் பழங்குடியின மக்களும், அன்னை தெரேசா முதல் தலாய் லாமா வரை, புத்தர் முதல் போப் பிரான்சிஸ் வரை அனைத்து ஆன்மீக குருக்களும் கண்டு வந்தார்கள். இது இயற்கைக்காக, உலகிற்காக, நமக்காக, நம் ஒவ்வொருவருக்காக காணப்படும் அன்பின் கனவு. பழைய மரணப் பொருளாதாரத்தை நீக்கி அந்த இடத்தில் புதிய வாழ்வியல் பொருளாதாரத்தை நிலைநிறுத்திட நமக்குச் சொல்லப்படும் கனவு.

இந்தப் புதியப் பொருளாதாரக் கனவு மாசுபட்ட நீர், மண், காற்று ஆகியவற்றைச் சுத்தப்படுத்தும். பசியில் வாடிடும் மக்களுக்குத் தங்களுக்கான உணவைத் தாங்களே தேடிக்கொள்ளும் வலிமையைக் கொடுக்கும். இயற்கை வளங்களை அழிக்காமல் போக்குவரத்து, தொலைத் தொடர்பு, மின்சார உற்பத்தி ஆகியவற்றை வளர்த்தெடுப்பதற்காக மறுசுழற்சி மற்றும் சூரிய ஆற்றல் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தும். சமூகப் பின்புலமுள்ள சந்தையையும், வங்கியையும் உருவாக்கும். கடன் மற்றும் போர் தொடர்பான நாணயங்களைச் சார்ந்திராது. மேலும் இது அச்சம் மற்றும் வெறுப்பில் உருவாவதற்கு மாறாக அன்பு மற்றும் வீரத்தின் அடிப்படையில் உருவாகும் புதிய கனவு.

2004 இல் இந்தப் புத்தகத்தின் முதல் பாகம் வெளியிடப்பட்டது முதல் தொழில் புரிவோர் மாநாட்டிலும், இசை நிகழ்ச்சிகளிலும், வாடிக்கையாளர் மாநாட்டிலும் பேசினேன். பல நாடுகளைச் சேர்ந்த அரசியல் தலைவர்கள் மற்றும் பல்கலைக் கழகப் பேராசிரியர்களைச் சந்தித்தேன். நான் கேள்விப்பட்ட தகவல்களால் ஈர்க்கப்பட்டு மேலும் வளர்ந்தேன். முதலாளிகள், வழக்கறிஞர்கள், செயலாளர்கள், விவசாயிகள் மற்றும் வீட்டில் இருப்பவர்கள் என அனைவரும் பத்துவருடங்களுக்கு முன்பு வியாபித்திருந்த பணம் மற்றும் அதிகாரம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட கனவிலிருந்து மாறிவருகிறார்கள். சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்போடும், சமூகப் பாதுகாப்போடும், நேர்மையாகவும் தன்னளவில் நிம்மதி அடையும் வாழ்வில் தங்கள் குடும்பங்களை வளர்க்க ஆசைப்படுகிறார்கள்.

இத்தகைய புரட்சியின் தேவையை உலகம் முழுவதும் உள்ள மக்கள் புரிந்து கொண்டார்கள். வாழ்வியல் பொருளாதாரத்தை உருவாக்கிடவும், நாம் நேசிப்பதை மட்டுமே செய்ய வேண்டும் என்பதும் நம் அனைவருக்கும் தெரியும். நாம் அனைவரும் இணைந்து இப்படியொரு புரட்சியை நடைமுறைப்படுத்த வேண்டும். அதற்கு நாம் யார் என்றும், நம்மால் என்ன செய்ய முடியும் என்றும் முதலில் நினைக்க வேண்டும்.

பன்னாட்டு நிறுவனங்கள் நடத்தி வந்த தோல்வியுற்ற பூகோள அரசியல்/ பொருளாதார அமைப்பைப் பற்றியே இந்தப் புத்தகம் விளக்குகிறது.

எனவே இந்த அமைப்பை மாற்ற, பன்னாட்டு நிறுவனங்களின் கனவை நாம் மாற்றிட வேண்டும். பன்னாட்டு நிறுவன உலகை நாம் தவிர்த்திட வேண்டும் என்று சிலர் வாதிடுகிறார்கள். ஆனால் அப்படியொன்று நடப்பதற்கான வாய்ப்பு என்பது குறைந்தபட்சம் என் வாழ்நாளில் மிகக்குறைவே உள்ளது. எனவே அதற்கு பதிலாக பெருநிறுவன முதலாளிகளின் இலக்குகளை, நடத்தைகளை மாற்றுவது என்ற எளிய நடைமுறையை நாம் கையாளலாம்.

அறிவாற்றல் மிகுந்த சிந்தனைகளை செயல்பாடுகளாக மாற்றுவதில் பெருநிறுவனங்கள் மிகவும் ஆக்கப்பூர்வமானது. ஆனால் அதிக இலாபம் ஈட்டிட வேண்டிடும் அவர்களது கனவு சமூக, சூழலியல் அக்கறை இல்லாமல் வளங்களை அழிப்பதும், கடன் மற்றும் இயந்திரமயத்தை வளர்ப்பதும் மிகவும் ஆபத்தானது. எனவே மனிதர்களை மட்டுமல்லாது, அனைத்து உயிர்களையும் நேசிக்கும், மக்களையும், எதிர்கால சந்ததியினரையும், உலகையும் காக்கும் புதிய கனவை உருவாக்குவதற்கான நேரம் இது. தீண்டாமையை ஆதரிக்கும் செயல்களை, நதிகளை மாசுபடுத்துவதை, பெண்கள் மற்றும் சிறுபான்மையினருக்கான அங்கீகாரம் வழங்கப்படாததை ஒருபாலினத் திருமணங்களை மறுப்பதை, இயற்கை வேளாண்மையை ஒதுக்குவதை என அனைத்தையும் தவிர்ப்பதன் மூலம் சமீபமாக பெருநிறுவனங்களின் அணுகுமுறைகளை மாற்றிப் பல வழிகளிலும் நாம் ஆற்றல் அடைந்துள்ளோம்.

பல தொழில்துறைச் செயலாளர்கள் மற்றும் முதலாளிகளின் அறிவால் நாம் ஊக்கப்படுத்தப்பட்டுள்ளோம். அவர்கள் ஃபார்ச்சூன் பத்திரிகையினால் பட்டியலிடப்பட்ட அமெரிக்காவின் மிகப்பெரிய 500 நிறுவனங்களில் பணியாற்றுபவர்களாக இருக்கலாம் அல்லது மாம் அண்ட் பாப் கடைகளின் முதலாளிகளாக இருக்கலாம். ஆனால் அவர்கள் முதலாளித்துவத்தின் உறுப்பினர்கள் அல்ல என்பதோடு நம்மைப் போலவே

சுரண்டப்பட்டவர்கள் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். அந்த 1 சதவிகிதம் மக்களும் கூட அச்சுறுத்தப்பட்டவர்களே.

பெருநிறுவன முதலாளிகள் மற்றும் தொழில்துறைக் கல்வியியல் முதுகலை மாணவர்களின் மாநாட்டில் நான் முதலில் பேச அழைக்கப்பட்டபோது 'இது போன்ற புத்தகம் எழுதியிருக்கும் என்னை ஏன் பேச அழைக்கிறீர்கள்?" என்று அதன் ஏற்பாட்டாளர் களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் அனைவரும் நடைமுறையில் இருக்கும் பொருளாதார அமைப்பானது உடைந்து விளிம்புநிலையில் இருப்பதை அவர்களது மக்கள் உணர்ந்திருப்பதாகக் கூறினார்கள். இதுவரை மரணப் பொருளாதாரத்திற்கு எதிரான வாழ்வியல் பொருளாதாரத்தை தொழில் புரிவோர் நினைத்துப் பார்க்கவில்லை. ஆனால் அது வெற்றியடைய புதிய மாதிரிகளை ஆதரிக்க வேண்டும் என்பதை மட்டும் உணர்ந்திருக்கிறார்கள். மேலும் அவர்கள் ஆக்கப்பூர்வமான அணுகுமுறைகளையும், அவற்றை நடைமுறைப் படுத்தும் வழிகளையும் தேடிக்கொண்டிருக்கிறார்கள்.

தங்களது முதலாளித்துவக் கொள்கைகளை மாற்றிட விரும்பும் 'முதலாளிகள் குறுகிய காலச் சந்தையின் பங்கையும், இலாபங் களையும் இழந்துவிட்டால் அதையே முக்கியமானதாகக் கருதும் முதலாளிகளுக்கு வழிவிடுவதுபோல் ஆகிவிடும் என்று அஞ்சுவதாகக் கூறினார்கள். 'உங்கள் பொருட்களை நான் விரும்புகிறேன் ஆனால் உங்களது பணியாளர்களுக்குப் போதுமான ஊதியத்தை வழங்காதவரை நான் அதை வாங்க மாட்டேன்" என்று கடிதங்கள் மற்றும் மின்னஞ்சல் வாயிலாக தங்கள் கருத்தை வெளிப்படுத்தும் புதிய வாடிக்கையாளர் அமைப்பை எதிர்பார்க்கும் நிலையில் சிக்கிக்கொண்டுள்ளதாக உணர்கிறார்கள். மேலும் செயலர்கள் குழு, முக்கியப் பங்குதாரர்கள், நிறுவனர்கள் அல்லது அவர்களைக் கண்டிக்கும் அதிகாரம் உள்ள எவரிடத்திலும் நேரடியாகவே இந்த வாடிக்கையாளர் கூட்டம் அவற்றை எடுத்துச் செல்லக்கூடும் என்று அஞ்சுகிறார்கள்.

இதைக் கேள்விப்பட்டதும் எனக்கு ஊக்கமாக இருந்தது, ஏனென்றால் வாடிக்கையாளர்தான் உண்மையான ஆற்றல் வாய்ந்தவர்கள் என்பதைக் கண்டுகொள்ள இது உதவியது. மேலும் சந்தைதான் ஜனநாயகத்தின் இருப்பிடம் என்பதை நமக்கு உணர்த்துகிறது. அந்த வகையிலே நாம் சந்தையை உபயோகப்படுத்துகையில், ஒவ்வொரு முறை நாம் ஒரு பொருளை வாங்கும்போதும் அதற்கான ஒரு வாக்கைச் செலுத்துகிறோம். மேலும் பெருநிறுவனங்களுக்கு உள்ளிருக்கும் மக்களும் இதைப் பின்பற்றிட வழி செய்கிறது. அத்தகைய மக்கள்தான் இந்தப் புரட்சிக்கும் தேவைப்படுகிறது. புதிய பொருளாதார அமைப்பை உருவாக்குவதில்; அவர்கள்தான் முக்கியப் பங்கு வகிக்கமுடியும்.

நாம் அனைவரும் ஒருங்கிணைந்து இந்தப் புதிய வாழ்வியல் பொருளாதாரத்தை உருவாக்கத் தேவையான அனைத்தையும் செய்ய வேண்டும். தீவிரவாதிகளுக்கும், பெருநிறுவனங்களுக்கும் எதிராக நாம் போர் செய்து கொண்டிருக்கவில்லை என்பதை ஒப்புக்கொள்ளும் நேரமிது. பொருளாதார அடியாட்கள் அமைப்பை முற்றுப்பெற வைக்கும் முயற்சியில்தான் நாம் அனைவரும் இருக்கிறோம். நம்மைத் தோற்கடித்த நடவடிக்கையின் அங்கமாக நாம் அனைவருமே இருக்கிறோம். மேலும் அதற்குள் வலுக்கட்டாயமாக இழுத்து வரப்பட்டிருக்கிறோம். பிறகு அதை ஆதரித்ததோடு, போற்றிப் புகழ்ந்திருக்கிறோம். இப்போது அந்த நிலையை மாற்றிக்கொள்ள வேண்டும். அத்தியாயம் ஒன்றில் குறிப்பிட்ட அண்டியத் தீவினரைப் போல நம்மை அச்சப்படுத்துபவர்களை எதிர்கொள்ள வேண்டும், நமக்கு எதிரான

அநீதிகளை எதிர்த்திட வேண்டும், நல்லதொரு முயற்சியை மற்றவர் செய்திடட்டும் என்று வேடிக்கை பார்ப்பதை நிறுத்திட வேண்டும். நமது குழந்தைகளின் நலன் காக்க வேண்டியவற்றை நாமே முனைந்து செய்திட வேண்டும்.

நியூ கேம்ப்சைரில் நான் வளர்ந்தபோது, 1700களில் பிறந்து அமெரிக்கப் புரட்சியில் கலந்துகொண்டிருக்க வேண்டும் என்று விரும்பினேன். ஆனால் அமெரிக்கப் புரட்சி ஒரு குறிப்பிட்ட வெற்றி மட்டுமே. பிரிட்டிஷ்காரர்கள் தோற்கடிக்கப்பட்ட பின்பும் கூட பெண்களை, சிறுபான்மையினரை, நடுத்தர வர்கத்தினரை, ஏழைகளைப் பாதிக்கும் அநீதிகள் தொடர்ந்து பல ஆண்டுகளாக நீடித்தது. இப்போது அது மேலும் வளர்ந்து உலகில் வாழும் நம் அனைவரையும் பாதிக்கும் அநீதிகளாக மாறிவிட்டது.

இன்றைய புரட்சி அமெரிக்கப் புரட்சியைக் காட்டிலும், விவசாயம் மற்றும் தொழிற் புரட்சியைக் காட்டிலும் மிகப்பெரியது. இது ஒரு உணர்வுநிலைப் புரட்சி. இந்த உணர்வுநிலை மாற்றம் என்பது ஆணாதிக்க மன நிலையிலிருந்து வெளிவருவது உட்பட பெண்ணியம் சார்ந்த, இளகிய, சமத்துவ நடவடிக்கைகளையும் உள்ளடக்கியது. நமது வீட்டைப் பாதுகாப்பதற்கான ஒரு அங்கீகாரத்தை வழங்குகிறது. மேலும் நமது வீடு என்பது இந்தப் பரந்த உலகம் முழுவதையும் உள்ளடக்கியது என்ற உணர்வைத் தருகிறது.

***

அச்சம், கடன், பற்றாக்குறை அதிகமாக உட்கொள்ள வேண்டும் என்ற நுகர்வுத் தன்மையைத் தூண்டுவதும், பிரித்தாள்வது மற்றும் ஆக்கிரமிப்பது என்ற நவீனப் பேரரசின் நான்கு தூண்களைப் பற்றியும் இந்தப் புத்தகம் விளக்கியது. மேலும் சதிகள், படுகொலைகள், குண்டுகள் வீசுவது, ஒட்டுக்கேட்பது, என அனைத்தையும் ஞாயப் படுத்திய சிந்தனையைப் பற்றியும், நிலப்பிரபுத்துவ, ஊழல் படிந்த அமைப்போடு இந்த நான்கு தூண்களும் நம்மைச் சங்கிலிப் பிணைப்போடு வைத்திருந்ததையும் விளக்கியது. இது நீடித்து நிலைத்திருக்க முடியாத ஒரு அமைப்பு.

அப்படிப்பட்ட ஞாயங்களுக்குப் பின்னால் இருந்த கனவை உருவாக்கிட வேண்டியவற்றை நாம் செய்திட வேண்டும். சிறந்த உலகை உருவாக்கிட வாழ்வியல் பொருளாதாரம் போதுமான அனைத்தையும் வழங்கிடும் என்ற நம்பிக்கையோடு அந்த அச்சத்தை வீரமாகவும், கடனைப் பெருந்தன்மையாகவும், பற்றாக்குறையை ஆவலாகவும் மாற்றிட வேண்டும். ஆணாதிக்க உணர்வைப் பெண்ணியம் வளர்க்கும் உணர்வாக மாற்றிட வேண்டும். அழிக்கப் பட்ட சுற்றுச்சூழலை மறு உருவாக்கம் செய்திடும் ஈடுபாட்டோடும், கருணை உணர்வோடும் பிரித்தாள்வது மற்றும் ஆக்கிரமிப்பது என்ற மன நிலைகளை நீக்கிட வேண்டும். ஒரு வளமான எதிர்காலத்தை நோக்கி நாம் ஒன்றிணைந்து உருவாக்கும் இந்தக் குழுவை வழிநடத்திட வேண்டும்.

எனது பயணங்களின்போது "ஒரு பொருளாதார அடியாளின் வாக்குமூலம் பல புள்ளிகளை இணைப்பதாக மக்களிடம் கேட்டு அறிந்துகொண்டேன். அமெரிக்காவும், அதன் பெருநிறுவனங்களும் எவ்வாறு ஏமாற்றி, மோசடி செய்து வளரும் நாடுகளின் பொருளாதாரத்தைச் சுரண்டியது என்பதைப் பற்றிய தகவல் மக்களிடம் எவ்வாறு தவறுதலாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்று 2004 இல் அவ்வாறு இணைக்கப்பட்ட புள்ளிகள் ஒரு

முடிவிற்குக் கொண்டு வந்தது. 2004க்குப் பிற்பட்ட புள்ளிகள் அதைவிடவும் அதிகம் சென்று வளர்ந்த நாடுகளில் உள்ளவர்களும், அமெரிக்காவில் உள்ள நாங்களும் பாதிக்கப்பட்டிருக்கலாம் என்பதோடு நானும் மற்ற பொருளாதார அடியாட்களும் ஆப்பிரிக்கா, ஆசியா, மத்திய கிழக்கு மற்றும் இலத்தீன் அமெரிக்கா ஆகிய நாடுகளில் பயன்படுத்திய கருவிகளைக் கொண்டு மோசடி செய்து சுரண்டப்பட்டிருக்கலாம் என்ற முடிவிற்கு வந்தார்கள். மேலும் மாற்றத்திற்கு என்ன வேண்டுமோ அதைச் செயல்படுத்திடும் நடவடிக்கையில் ஈடுபட வேண்டும் என்றும் முடிவெடுத்தார்கள்.

வாழ்க்கை முழுவதும் நமக்கு ஏராளமான வாய்ப்புகள் இருக்கிறது என்ற அங்கீகாரத்தோடு அத்தகைய நடவடிக்கைகள் தொடங்கும். அது விதியாகவோ, வாய்ப்பாகவோ, விபத்தாகவோ அமையலாம். அதை நாம் நன்மையாகவும் பார்க்கலாம், தீமையாகவும் பார்க்கலாம். இதில் அதற்கு ஏற்றவாறு நாம் எவ்வாறு நடந்து கொள்கிறோம் என்பதே முக்கியம்.

இதற்கு மேல் புத்தகங்கள் எழுதக் கூடாது என்பதற்காக ஒருமுறை நான் பெரும் தொகையைப் பெற்றேன். அந்தப் பணத்தை நான் சுரண்டலுக்கு உட்படுத்திய நாடுகளில் உள்ள மக்களுக்காகச் செலவு செய்திட முடிவெடுத்தேன். ஆனால் அனைத்திற்கும் அப்பாற்பட்டதுதான் அமேசானில் உள்ள மக்களோடு மீண்டும் தொடர்பு ஏற்பட்டதும், பல சமூக நல அமைப்புகளை உருவாக்கியதும் மற்றும் ஒரு எழுத்தாளராகவும், பேச்சாளராகவும் புதிய பணியை ஏற்றுக்கொண்டதும் நடந்தது.

நமக்கு நடக்கின்ற நிகழ்வுகளைக் கண்டால் அவை நமக்கான தகவல்களைத் தாங்கி வருகிறது தெரிகிறது. நடவடிக்கைகளுக்காக வாய்ப்புகளின் கதவுகளைத் திறந்து வைத்திருக்கின்றோம்.

இந்த உலகம் நமக்கு வலிமையான தகவலை வழங்குகிறது. உறைபனிகளும், பனிப்பாறைகளும் உருகி வருகிறது. கடல் மட்டம் உயர்ந்து வருகிறது. பல அரியவகை உயிரினங்கள் அழிந்து வருகிறது. நாம் வாழத்தகுந்த பூமியாக வைத்திருக்க வேண்டுகிறது நம் வீடான இப்புவிக்கோளம். அவள் சூரியனைச் சுற்றி வரும் வெறும் கற்களாலும், மண்ணாலும் இறுக்கிக் கட்டப்பட்டிருக்கும் உருண்டை அல்ல. உயிரினங்கள் வாழும் உயிரியல் உறுப்பினர். இரக்கப்படும், சீர்திருத்தம் செய், அன்பு செலுத்து என்ற தகவலை மட்டும் அனுப்புகிறாள்.

நீங்களும், நானும் அந்தத் தகவலை வைத்துக்கொண்டு என்ன செய்ய?

ஒரு புதிய கனவைக் காண, வாழ்வதற்கான வியக்கத்தக்க மாற்று வழிகளுக்கான வாய்ப்பை ஆய்வு செய்ய, தோல்வியை வெற்றியாக மாற்றிட, இப்புவியை உயிரினங்கள் வாழும் சமூகமாகக் கட்டியமைத்திட நமக்கு வாய்ப்பு இருக்கிறது.

உங்கள் தனிப்பட்ட திறமைகளும், உணர்வுகளும் அன்பளிப்பாகிட வேண்டும். நீங்கள் மரவேலை செய்பவராக, பல் மருத்து வராக, எழுத்தாளராக, மாணவராக அல்லது எதுவாக இருந்தாலும் அந்த அன்பளிப்பு உங்களுடையது. உண்மையான வெற்றி உங்களது தனித்துவத்தைப் பின்பற்றுவதிலிருந்தும், திறமைகளை வெளிப்படுத்துவதிலிருந்தும் மேலும் சிறந்த உலகை உருவாக்கிட நினைக்கும் வளர்ந்து வரும் சமூகத்தில் இணைவதன் மூலமாகவும் வருகிறது.

அதை உங்களது தனிப்பட்ட நடத்தையோடு நீங்கள் தொடங்கலாம் (மறுசுழற்சி, குறைந்த அளவு வாகனம் ஓட்டுதல், தேவையற்ற விளக்குகளை அனைத்து வைத்தல், சிறு வணிகர்களிடம் உள்ளூர் கடைகளில் பொருட்கள் வாங்குதல் போன்றவை). ஆனால் அவை மட்டுமே போதும் என்ற நம்பிக்கைக்குள் மட்டும் விழ வேண்டாம். அப்படிப்பட்ட நடவடிக்கைகளை நன்மைகளாக எடுத்துக் கொள்ளுங்கள் ஆனால் உலகத்தோடு இணைந்து வாழ்வதற்கான வழியின் நுழைவாயிலாகவும் அதைப் பாருங்கள்.

சில ஆண்டுகளுக்கு முன் இந்தியாவில் லே, லடாக்கிலிருந்து ஜம்மு செல்லும் வழியில் நான் தலைமை தாங்கி அழைத்துச் சென்ற குழுவோடு அதே விமானத்தில் தலாய் லாமாவும் பயணம் செய்தார். சாமன் பழங்குடியின மக்களைப் பற்றி எழுதப்பட்ட, தனக்கு மிகவும் பிடித்த சேப் சிப்டிங் நூலின் ஆசிரியர் அதே விமானத்தில் பயணம் செய்வதை அறிந்தவர் உடனே அவர் அருகில் அமர்ந்து கொள்வதற்காக என்னை அழைத்தார். சாமான்களைப் பற்றிய பல இனிமையான தகவல்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். இறுதியில் விமானத்திலிருந்து இறங்கியவுடன் தரம்சாலாவில் உள்ள அவரது இல்லத்திற்கு வருமாறு எனது குழுவிற்கு அழைப்பு விடுத்தார்.

அன்று மாலை அவருடன் நான் உரையாடியபோது, "அமைதிக்காக வேண்டுவது மிகவும் நல்லது" என்று கூறியவர் "ஆனால் அதை மட்டும் நீங்கள் செய்தால் அது நேரத்தை வீணடிப்பதாகும். அது உங்களைச் சிதறடிக்கும் செயலாகக் கூட மாறிவிடும். எனவே தினசரி நடவடிக்கைகளில் நீங்கள் ஈடுபட வேண்டும்" என்று சொல்லிவிட்டுச் சிரித்தார்.

வாழ்வியல் பொருளாதாரத்தை உருவாக்கத் தேவையான நடவடிக்கைகளுக்கு தலாய் லாமாவின் வார்த்தைகள் பொருத்தமாக இருக்கும். மறுசுழற்சி, குறைந்த அளவு வாகனம் ஓட்டுதல், தேவையற்ற விளக்குகளை அனைத்து வைத்தல் போன்ற நடவடிக்கைகள் நல்லதுதான் ஆனால் அதுவே நம் பெரிய கனவுகளைச் சிதறடிப்பது போல் ஆகிவிடக்கூடாது. மேலும் அத்தகைய பெரிய கனவை நடைமுறைப்படுத்தத் தேவையான தினசரி நடவடிக்கைகளை திசை திருப்புவதாகவும் ஆகிவிடக் கூடாது.

மேலும் நமது ஆசிரியர்கள் போதிப்பதைப் போல 'நல்லனவற்றையே சிந்திக்க வேண்டும்' என்பது மட்டும் போதாது. ஒரு பில்லியன் மக்களுக்கு மேல் வறுமையின் விளிம்பு நிலையில் சிக்கித் தவிக்கிறார்கள். வாகனம் ஓட்டுவதைக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்பதும், நல்லனவற்றையே சிந்திக்க வேண்டுமென்பதும் மட்டும் அவர்களுக்கான உணவை வழங்கிடாது. மேலும் பலவற்றை நாம் செய்ய வேண்டும். நமக்கு ஒரு புரட்சி தேவைப்படுகிறது.

மக்கள் ஒன்றிணைந்து செயல்படுவதினால் புரட்சி என்பது உண்டாகும். முக்கியப் புள்ளிகளும், தலைவர்களும் மக்களை வழிநடத்திச் சென்றாலும் வகுப்புவாத நடவடிக்கைகளினால்தான் புரட்சியானது தன் வெற்றியினை அடையும். தனிப்பட்ட ஒரு ஆளுமை தன் தலைமையில் அனைத்தையும் மாற்ற முடியும் என்று நினைப்பதெல்லாம் பழங்கதை, மேலும் உண்மையான மாற்றத்தை உருவாக்கும் ஒருமித்த நடவடிக்கைகளை அது திசை திருப்புகிறது. சங்கா (சமூகம்) பௌத்த மதத்தின் சித்தாந்தங்களுள் அல்லது அதன் மூன்று அணிகலன்களுள் ஒன்றானது என்பது தலாய் லாமாவிற்கும் நன்கு தெரியும். ஒவ்வொரு மதமும், சமுதாய மற்றும் அரசியல் நடவடிக்கைகளும் அந்தச் சமூகத்தின் மரியாதைக்கு வலு சேர்க்கிறது.

வங்கியின் தலைவரான எனது மாமா எர்னஸ்ட் அவர்கள் வெர்மோன்ட் மாகாணத்தில் உள்ள வாட்டர்/பரியில் உள்ளூர் சமூகத்தை ஆதரிப்பதில் உள்ள முக்கியத்துவத்தை உணர்ந்திருந்தார்.

உள்ளூர் சமூகத்தைக் கட்டியமைப்பதற்கான தூண்டுதல் கடந்த சில ஆண்டுகளில் அதிகரித்திருக்கிறது. உழவர்களின் நேரடி சந்தைகள், உள்ளூரில்தான் பொருட்களை வாங்க வேண்டு மென்று தீவிர எண்ணம் கொண்டிருத்தல், சமுதாய வங்கிகளின் மீளுருவாக்கம், அருகில் உள்ள ஊர்களின் உற்பத்தியாளர்களிடம் பலசரக்குப் பொருட்களை வாங்க வேண்டு மென்று கடைக்காரர்கள் ஈடுபாடு காட்டுவது உட்பட அனைத்தும் முக்கியப் பங்கு வகிக்கிறது. அதே நேரத்தில் முற்றிலும் புதிய அம்சத்தைக் கொண்ட உலக சமுதாயம் உருவாகிறது.

இந்தப் புத்தகத்தின் முதல் பதிப்பு வெளிவருவதற்குப் பல மாதங்களுக்கு முன்பு எனது இமயமலைப் பயணத்தின்போது, கடல் மட்டத்திலிருந்து பதினான்காயிரம் அடி உயரத்தில் குடிசையில் வாழ்ந்து வந்த ஒரு பழங்குடியின முதியவரிடம் நான் பேசினேன். தன் மக்களிடம் ஒரு தொலைபேசிகூட இல்லையென்று புலம்பினார். "தொலைபேசிக்கான இணைப்புக் கம்பிகளை இந்த உயரத்திற்கு எடுத்து வர முடியாது' என்பதை ஒரு மொழிபெயர்ப்பாளர் மூலம் என்னிடம் சொன்னார். அமேசான் மழைக் காடுகளின் அடர்ந்த வனப்பகுதிக்குள் அச்சுவார் இனத் தலைவர் ஒருவரும் இதேபோல் கூற நான் கேட்டிருக்கிறேன். இப்போது இந்தப் புதிய புத்தகத்தை நான் எழுதிக்கொண்டிருக்கையில் அந்த இரு மனிதர்களும், அவர்களது சமூகமும் செயற்கைக்கோள் தொலைபேசிகளைக் கொண்டிருப்பார்கள்.

வரலாற்றில் முதன்முறையாக நாம் கிரகம் விட்டுக் கிரகம் உடனுக்குடன் பேசி வருகிறோம். உயர்ந்து வரும் கடல் மட்டம், அதிகரித்து வரும் சுற்றுச்சூழல் மாசுபாடு, உருகிவரும் பனிப்பாறைகள், அரியவகை உயிரினங்களின் அழிவு, அதிகரித்து வரும் மக்கள்தொகை, இயற்கை வளங்களின் பேரழிவு ஆகியவை குறித்து நாம் ஒவ்வொருவரும் அச்சுறுத்தப்பட்டு வருகிறோம். இதை மாற்றிட வேண்டியும், வாழ்வியல் பொருளாதாரத்தை நடைமுறைப்படுத்த வேண்டியும் நாம் ஏதாவது செய்ய வேண்டும் என்று நமக்குத் தெரியும்.

எனது உரையைக் கேட்க வரும் நோக்கர்கள் தனிப்பட்ட முறையில் தாங்கள் செய்ய வேண்டிய கடமை என்னவென்று கேட்கும்போது, "நீங்கள் நிதானத்தைக் கடைபிடிக்க வேண்டும். உங்கள் திறமைகளை உங்களால் முடிந்த அளவு சிறந்த முறையிலும், போதுமானதாகவும், மகிழ்ச்சியாகவும் பயன்படுத்த வேண்டும்" என்று ஆரம்பிப்பேன். பிறகு நாம் அன்றாடம் கடைபிடிக்க வேண்டிய செயல்களைப் பற்றிக் கூறுவேன்.

அரசு சாரா தனியார் சமூகநல அமைப்புகளோடு நாம் சேரலாம். நுகர்வோர் இயக்கங்கள் குறிப்பிட்ட பெரு நிறுவனங்களைத் தவிர்ப்பதைக் குறிக்கோளாகக் கொள்ள வேண்டும். பெருநிறுவனங் களுக்கு நெருக்கடி கொடுப்பது, வங்கிகளை ஒழுங்குபடுத்துவது, தேர்தல்களில் பணப்புழக்கத்தை நீக்குவது, பருவநிலை மாற்றங் களுக்கான காரணிகளைத் தடுப்பது போன்ற சீர்திருத்த நடவடிக்கை களில் ஈடுபடும் இயக்கங்களுக்கு நாம் ஆதரவளிக்கலாம். செயல் விளக்கக் கூட்டங்களிலும், பேரணிகளிலும் பங்கு பெறலாம், இணையத்தில் எழுதலாம், புத்தகங்கள் அல்லது கட்டுரைகள் எழுதலாம், திரைப்படங்களும், காணொளிகளும் உருவாக்கலாம். பொதுச் சேவைக்கென அர்ப்பணித்துக்கொண்டு பணியாற்றுகிற இடத்தில் பரப்புரை செய்யத் தேர்ந்தெடுக்கப்பட்ட அலுவலகத்தை நடத்தலாம். வாழ்வியல் பொருளாதாரம் குறித்த நல்ல தகவல்களைப் பரப்பலாம். இத்தகைய புதிய கனவை

வெளிப்படுத்தும் ஆண் களையும், பெண்களையும் முன்னிலைப்படுத்தும் பத்திரிகைகளை வாங்கலாம், தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்க்கலாம். எனவே இதற்கான வாய்ப்புகள் நிறைந்து கிடக்கிறது.

இந்தப் புதிய தகவலை நமக்குத் தெரிந்த வழியில் பரப்பலாம்.

## அத்தியாயம் 14 - நாம் செய்ய வேண்டியவை

பின்வரும் பட்டியல்கள் உங்களுடைய சொந்தத் திட்டத்தின் மூலம் செயல்பட வேண்டி உங்களைத் தூண்டுவதற்கானது. மேலும் எந்த வகையிலும் இது முடிவு பெறாதது. பட்டியலில் குறிப்பிடப் பட்டுள்ள மக்களைத் தவிர்த்துவிடவும் கருத முடியாதது. வேறுவிதமாகக் கூறினால், நீங்கள் ஒரு மாணவராக இருந்தால் ஓய்வுபெற்ற நபர்களின் பட்டியலில் இருந்தும் பெறலாம்.

உங்கள் விருப்பத்திற்கு ஏற்ற பொருட்களைத் தேர்வு செய்வதில் உறுதியாயிருங்கள். அது உங்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சியைக் கொண்டுவருவதாகவும் இருக்க வேண்டும்.எதைச் செய்தாலும் அது வாழ்க்கைப் பொருளாதாரம் பிறப்பதற்கான வடிகாளாக அமைந்திட வேண்டும். இதனால் தடைகள் மற்றும் பின்னடைவுகளை நீங்கள் எதிர்கொள்ள வேண்டியிருக்கும். உங்கள் படைப்பாற்றலைத் தூண்டும் சவால்களாக அவற்றைப் பார்ப்பதோடு தீர்வுகளை உண்டாக்கும் வாய்ப்பாக அவற்றைக் கருத வேண்டும்.

நம்மை நாமே நேசிப்பதோடு இந்த புவியில் வாழும் சக மனிதர்கள் அனைவரையும் நேசிக்கும் போதும், அன்பை அதிகரிப்பதற்கான காரியங்களைச் செய்யும்போதும், அதே வழியில் நடந்திட மற்றவர்களை நாம் ஊக்குவிக்கும்போதும் அன்பு ஒன்றுதான் நமக்கு மிகவும் தேவையானது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

நாம் செய்ய வேண்டிய பதினொரு காரியங்கள்:

1. நிலையான சுற்றுப்புறச் சூழலை உருவாக்குகிற, வளங்களை மறு.

ஆக்கம் செய்கின்ற, ஒரு கூட்டம் மற்றொரு கூட்டத்தை வதைக்காத சமூக அக்கறையுள்ள ஒன்றை அடிப்படையாகக் கொண்டு ஒரு புதிய கருத்தைச் சொல்லிக் கொண்டிருங்கள். அது நமது புவியை ஒரு உயிராகக் கருதி இங்கே ஏற்படுகிற மாசுபாட்டை தூய்மைப்படுத்துவதாகவும்; பசியால் வாடுகிறவர் களுக்கு உதவுவதாகவும்; உணவைப் பாதுகாத்து ஆக்கப்பூர்வமாக விநியோகம் செய்வதாகவும்; குறைந்தபட்ச பொருள் சார்ந்த வாழ்க்கையை, ஆன்மீக ரீதியாக நிம்மதியான வாழ்க்கையை வாழ்வதாகவும், ஆற்றல், போக்குவரத்து, தகவல் தொடர்பு, வங்கி, மொத்த விற்பனை மற்றும் சில்லறை வணிகத்திற்கான புதிய தொழில் நுட்பத்தை மேம்படுத்துவதாகவும் நாம் அனைவரும் தப்பிக்க வழியில்லாத ஒரே விண்வெளியில் இருக்கின்றோம் என்ற புரிதலோடு பிளவுபட்ட சமூகங்களை ஒருங்கிணைப்பதாகவும் இருக்க வேண்டும். வேறுவிதமாகச் சொல்ல வேண்டு மென்றால் மரணப் பொருளாதாரத்தை வாழ்வியல் பொருளாதாரமாக மாற்றுவதற்கான

கதையைச் சொல்லுங்கள். பேசுவது, எழுதுவது, குழுவாகப் பயிற்சி வகுப்புகள் நடத்துவது என்று ஏதாவது ஒரு வழியில். முடிந்த அளவு எத்தனை பேருக்கு இதைப் பரப்ப முடியுமோ பரப்புங்கள்.

2. பொருட்களை வாங்குவதிலும், முதலீடு செய்வதிலும் கவனமாக இருங்கள். உங்களை மகிழ்விக்கும் அல்லது நீங்கள் விரும்பும் பொழுதுபோக்கு அம்சங்களில் செலவிடுவதை மாற்றுங்கள். அதேபோல் பொருட்களை வாங்கும்போது பழைய பொருட்கள் விற்பனையகத்திலோ அல்லது மொத்த விற்பனைக் கடையிலோ உள்ளூரிலேயே வாங்குங்கள். முடிந்த அளவு செலவுகளைத் தள்ளிப் போடுங்கள். சிறப்பான உலகை உருவாக்கப் போகிற தொழில்களில் பொருட்களையும், சேவைகளையும் வாங்குங்கள் அல்லது முதலீடு செய்யுங்கள். மேலும் நீங்கள் தவிர்க்கின்ற வியாபாரங்களை மின்னஞ்சல் மூலம் அதற்கான சரியான காரணத்தோடு தெரியப்படுத்துங்கள். ஏதாவது நிறுவனங்களில், ஓய்வூதியங்களில் அல்லது பிற முதலீடுகளில் நீங்களும் ஒரு பங்கேற்பாளர் என்பதை உறுதிப் படுத்திக் கொள்ளுங்கள்.

3. கவனமாக வாழுங்கள்; உங்கள் பகுதியில் ஏதாவது ஒரு வடிவில் பெருமைப்படுத்தப்படுகிற அளவில் மற்றவர்களோடும், உங்கள் சமூகத்தோடும், உங்களைச் சுற்றியுள்ள உலகத்தோடும், உங்களது உறவை மேம்படுத்துகிற காரியங்களில் கவனம் செலுத்துங்கள்; தேவையற்ற பொருட்களை வாங்குகிற, பொருட்களைச் சுற்றி இயங்குகிற பழைய மனப்பான்மையைத் உடைத்தெறியுங்கள். உங்களது வீடு, மகிழுந்து, அலமாரி போன்றவற்றைத் தேவையான அளவிற்குச் சிறிதாக வாங்கிக் கொள்ளுங்கள்; முடிந்தால் மிதிவண்டியோ, பேருந்தோ பயன்படுத்துங்கள்: முடிந்த அளவு எரிபொருட்களைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்; முடிந்தால் உள்ளூர் பள்ளிகளில், நூலகங்களில், மற்றும் பொதுக் கூட்டங்களில் இதுபற்றிப் பேசுங்கள். 4. உங்கள் ஆழ்ந்த விருப்பத்திற்கு ஏற்றவாறும், உங்களுக்கு எப்போதும் பொருத்தமானதாகவும் உள்ள ஒரு காரணத்தைத் தேர்ந்தெடுங்கள். அந்த விருப்பம் மான்சாண்டோ செவ்ரான், வால்மார்ட் போன்ற ஒரு நிறுவனத்தை மாற்றியமைப்பதாகவும் இருக்கலாம் அல்லது ஒரு இயக்கத்தை, வானொலி நிலையத்தை, வலைப்பதிவராக இருப்பதை, இலாப நோக்கமற்ற அல்லது அரசு சாரா நிறுவனத்தை ஊக்குவிப்பதாகவும் இருக்கலாம். நேரம் மற்றும் ஆற்றல் (ஒரு சில நிமிடங்களுக்காக மட்டுமே என்றாலும்) அல்லது பணமாக ஒவ்வொரு நாளும் உங்களது கவனத்தைச் செலுத்துங்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பதை உங்கள் நண்பர்கள் அனைவருக்கும் தெரியப்படுத்த சமூக ஊடகத்தைப் பயன்படுத்துங்கள். உங்களைப் பற்றிய மின்னஞ்சல்கள் மற்றும் கடிதங்களை உருவாக்குங்கள். உங்கள் சமூக ஊடக தொடர்பு களுக்கு அவற்றை அடிக்கடி பகிர்வதோடு அவர்களின் சமூக ஊடக தொடர்பிலுள்ள அனைவருக்கும் அனுப்பும்படியும் கேட்டுக்கொள்ளுங்கள்.

5. நீங்கள் வாழும் சமூகத்தின் ஒரு பகுதியாகவே இருங்கள். முடிந்த அளவு உள்ளூர் திட்டங்கள், உள்ளூர் வணிகர்கள், உள்ளூர் உணவகங்களில் முதலீடு செய்யும் உள்ளூர் வங்கிகளைப் பயன்படுத்துங்கள். உள்ளூரில் இயற்கையாக வளர்க்கப்படும் உணவுகளை வாங்குங்கள். உள்ளூர் பொருட்களாகவும், அதிலும் சுற்றுச்சூழல் மற்றும் சமூகத்திற்குக் கேடு விளைவிக்காத பொருட்களாகவும் பயன்படுத்துங்கள், சமூகத் தோட்டங்கள் மற்றும் நகர்ப்புற பசுமை இடங்களை உருவாக்குங்கள். உங்களுக்குத் தெரிந்த அனைவரும் இதையே பின்பற்ற ஊக்கப்படுத்துங்கள். அறிவொளிப் பள்ளி மற்றும் பிற உள்ளூர் தலைவர்களுக்கே வாக்களியுங்கள். மிதி வண்டி ஓட்டுதல், இயற்கைப் பாதுகாப்பு, புத்தக வாசிப்பு, உலகத்தை

மாற்றுவோம்' அமைப்பு போன்றவற்றில் ஆக்கப்பூர்வமாகச் செயல்படும் குழுக்களை உருவாக்குங்கள். குழாய் நீரையோ அல்லது வடிகட்டப்பட்ட குடிநீரையோ மட்டும் அருந்துங்கள், புட்டியில் வருகின்ற குடிநீரை அருந்தாதீர்கள்.

6. ஊடகங்கள், பெருநிறுவன நிர்வாகிகள், மற்றும் அரசாங்க அதிகாரிகள் ஆகியோரிடம் இறப்புப் பொருளாதாரத்திலிருந்து வாழ்வியல் பொருளாதாரத்திற்கு மாற வேண்டிய தேவை பற்றிய தகவலை நிரப்புங்கள். இதை உள்ளூரிலும், தேசிய அளவிலும் அல்லது சர்வதேச அளவிலும் அல்லது மூன்றிலுமே கூடச் செய்யுங்கள்.

7. உங்களுக்காக முறையிடும் சீர்திருத்த இயக்கங்களுக்கான ஆதரவளியுங்கள். இவை பூகோள அரசியல், பொருளாதார, மற்றும் சமூக சீர்திருத்தங்களை ஊக்குவிப்பதற்காக நாட்டையும், சமுதாயம் சார்ந்த செயற்பாடுகளையும் கொண்டிருக்கும். அவற்றை உங்கள் உத்தரவாதப்படுத்தப்பட்ட வாழ்க்கைக்கான. ஊதியங்கள் மற்றும்/அல்லது வேலைவாய்ப்பு, சுகாதாரக் காப்பீடு, மருத்துவப் பராமரிப்பு மற்றும் ஓய்வூதியங்கள் போன்றவையாகக் கேளுங்கள்.

8. உள்ளூர், தேசிய அல்லது சர்வதேச பூங்காக்கள், வன உயிரினங்கள் பாதுகாப்பகம் போன்ற பகுதிகளை உருவாக்க ஊக்குவியுங்கள். நீங்கள் நகர்ப்புற பகுதியில் வாழ்பவரென்றால் காலியிடங்களைப் பூங்காக்களாகவும், விளையாட்டு மைதானங்களாகவும் மாற்றியமைக்க மக்களை ஒருங்கிணையுங்கள். இந்த இடங்களில் உங்களது உயர்வான நேரத்தைச் செலவழித்து உங்களுக்குத் தெரிந்த அனைவரும் இவ்வாறு செய்ய ஊக்குவியுங்கள்.

9. அமெரிக்காவிலும், அனைத்து நாடுகளிலும் பொருளாதார சீர்திருத்தம் மற்றும் காலநிலை மாற்றம் குறித்த விதிகள் பற்றிய பிரச்சாரத்தை முன்மொழியுங்கள். சமுதாய சுற்றுச்சூழல் சட்டப் பாதுகாப்பு நிதியம், குடிமக்கள் காலநிலை அமைப்பு, பச்சமாமா கூட்டணி, அல்லது உங்களிடம் முறையிடும் மற்றவர்களுக்கான திருத்தங்களை மேற்கொள்வதற்கான அமைப்புகளில் சேருங்கள்.

10. கடனைத் தவிர்த்திடுங்கள். வட்டியில்லாமல் கடன் அட்டையின் கட்டணங்களையும், பிற கடன்களையும் செலுத்துவதற்குத் தேவையான நடவடிக்கைகளை எடுங்கள். முடிந்தளவு பணத்தையே பயன்படுத்திக் கொள்ளுங்கள். 11. ஒரு சிறந்த உலகத்தை உருவாக்க உழைக்கும் மக்களை நாயகர்களாகவும், புனிதர்களாகவும் உருவாக்குங்கள். பெருநிறுவன முதலாளிகள், அதிக சம்பளம் வாங்கும் விளையாட்டு வீரர்கள் மற்றும் பிரபலங்கள் ஆகியோரை விட வெளியில் தெரிந்தும், தெரியாமலும் நிலையான சுற்றுச் சூழலையும், வளங்களையும் பாதுகாப்பவர்களை, சமூக அக்கறையுள்ளவர்களை, வரியர்வர் களுக்கு உணவளிப்பவர்களை, நல்ல தொழில்களை ஊக்குவிப்பவர்களை என் மேலே 1 முதல் 9 வரையில் விவாதிக்கப்பட்ட நிறுவனங்கள் மற்றும் அமைப்புகளின் நிறுவனர்கள் மற்றும் மேலாளர்களை கௌரவப்படுத்துங்கள்.

மாணவர்கள் செய்ய வேண்டிய ஒன்பது காரியங்கள்:

1. உலகில் உண்மையிலேயே என்ன நடக்கிறது என்பதைப் பற்றி நீங்கள் படித்துத் தெரிந்துகொள்ளுங்கள். நமக்குச் சொல்லப்பட்ட கதைகள் மூலமும், அவற்றை நாம் பிறரிடம்

பகிர்ந்து கொண்டதினாலும் உருவான மனநிலையை புரிந்து கொள்ள வேண்டும். ஏனென்றால் நமது குழந்தைகளுக்குச் சொல்லப்பட்ட மனிதநேயம் பற்றிய சிதைந்த வரலாறு மிகவும் சக்தி வாய்ந்தவையாக உள்ளது. எனவே அக்கதைகளுக்குப் பின்னால் உள்ள கதைகளைத் தெரிந்து கொள்ள மாற்று ஊடகங்களை எப்போதும் நாடுங்கள்.

2. நிர்வாகத்தைக் கேள்வி கேளுங்கள். உங்களை ஏமாற்றுவதற்குப் பல சதித்திட்டங்கள் உள்ளன என்பதை அறிந்து கொள்ளுங்கள். எனவே உங்களுக்குக் கிடைக்கின்ற எந்த வாய்ப்பையும் நழுவ விடாமல் கேள்வி கேளுங்கள். அவ்வாறு செய்வதன் மூலம் உங்கள் மனநிலையும் மாறலாம், ஒரு புதிய கதை உருவாகலாம்.

3. உங்கள் ஈடுபாடு எதிலுள்ளது என்பதைப் புரிந்துகொள்ளுங்கள். நீங்கள் வாழ்க்கையில் மிகவும் மகிழ்ச்சியாக அனுபவிப்பது எது? என்று தெரிந்து கொண்டு அந்த நடவடிக்கைகளில் அதிக கவனம் செலுத்துங்கள். மேலும் உங்களை மிகவும் கவர்ந்திழுக்கும் பாடங்களைப் பற்றிய ஒரு ஆழமான தேடலையும், அறிவையும் வளர்த்துக் கொள்ளுங்கள். உங்கள் ஈடுபாட்டிற்கு ஏற்ப உங்கள் வாழ்க்கையை வாழ தீர்மானித்துக் கொள்ளுங்கள். உங்கள் வாழ்வின் பேரின்பத்தை அனுபவிக்க சுய அறிவும், ஈடுபாடும் கொண்ட முக்கியமான கல்வியை அடையாளம் காணுங்கள்.

4. கதையை மாற்ற விரும்பும் மற்றவர்களைத் தேடுங்கள். நம் ஒவ்வொருவரோடும், நமது பூமியோடும் தொடர்புடைய வழிகள் அனைத்தையும் புரிந்து கொள்வதில் புதிய படிநிலையை அடைவதற்கு ஒருவருக்கொருவர் உதவுவதை நோக்கமாகக் கொண்டவர்களின் சமூகத்தில் சேர்ந்திடுங்கள் அல்லது அதனை வளர்த்திடுங்கள்.

5. மேலே உள்ள நான்கிலும் பொருந்தாதவர்களுக்கு எங்களது ஏமாற்று வேலையைப் புரிந்து கொள்ள உதவிடுங்கள். அதைப் பற்றி அவர்களிடம் பேசுங்கள். எனவே உங்கள் வயதொத்த சமூகத்தினருக்கு அதைப் பயிற்றுவிப்பதன் மூலம் உங்கள் தலைமுறையினர் ஏமாறப்போவதில்லை என்பதை உங்கள் முன்னோர்களுக்குத் தெரியப்படுத்துங்கள்.

6. கடனுக்கு எதிராக ஒரு நிலைப்பாட்டை எடுங்கள். உங்களுக்குச் சுமையாக இருக்கப் போகிற மாணவர் கடன்கள் அல்லது கடன் அட்டை மற்றும் பிற கடன்களை ஏற்றுக் கொள்ளாதீர்கள். கடன்களை தவிர்க்கவோ அல்லது ஏற்கனவே இருக்கும் கடன்களில் இருந்து வெளியேறவோ உதவிடும் நிறுவனங்களில் சேர்ந்திடுங்கள்.

7. உங்கள் ஈடுபாட்டிற்கு ஏற்ற வேலையைச் செய்திடுங்கள். உங்கள் ஈடுபாடுகளையும், தத்துவங்களையும் ஒத்திருக்கும் நிறுவனத்திற்கோ அல்லது வணிகத்திற்கோ மட்டுமே வேலை செய்யுங்கள். அப்படியொரு வேலை உங்களுக்குக் கிடைக்காவிட்டால், நீங்களே சொந்தமாக அப்படியொரு பணியை உருவாக்குங்கள். உங்களது ஆற்றலையும், படைப்பாற்றலையும் குறைத்திடும் வேலையை மறுத்து விட்டு சுய தொழில் செய்பவர்களைப் பின்பற்றி முதலாளியாகுங்கள்.

8. புதிய தலைமுறை எழுந்திடவும், திருத்தவும், சமூக சுற்றுச்சூழல் சட்டப் பாதுகாப்பு நிதியம், குடிமக்களின் காலநிலை அமைப்பு, பச்சமாமா கூட்டணி, கனவு மாற்றம் போன்ற நீங்கள் அதிகம் ஈடுபாடு கொண்ட ஏதாவது ஒரு அமைப்பில் சேர்ந்திடுங்கள். இலாப நோக்கமற்ற

தனியார் அமைப்புகள், சமூக இயக்கங்கள் ஆகியவற்றில் பங்குபெறுங்கள். நேர்மறையான மாற்றத்தை ஆதரிப்பதற்கான திறமைசாலிகளையும், பணத்தையும் ஈட்டிட நடவடிக்கை எடுங்கள்.

9. இறப்புப் பொருளாதாரத்தை முடிவிற்குக் கொண்டு வந்து வாழ்க்கைப் பொருளாதாரம் கட்டியமைக்கப்படுவது போன்ற காணொளிகளையும், படங்களையும் உருவாக்குங்கள். மனிதர்கள், விலங்குகள், அல்லது தாவர உரிமைகள்; நுகர்வோர் அல்லது எதிர்காலத்தைப் பற்றிய கதைகள்; அல்லது வரம்புக்குட்பட்ட பிற பாடங்கள் என நீங்கள் விரும்புகிற எதை வேண்டுமானாலும் மையப்படுத்தியதாக அது இருக்கலாம்.

ஓய்வு பெற்றவர்கள் செய்ய வேண்டிய ஆறு காரியங்கள்:

1. பணி ஓய்வு பெற்றவரின் மனநிலை ஒரு கூண்டில் அடைபட்ட குருவியைப் போல் சலசலத்துக் கொண்டிருக்கும். இதிலிருந்து விடுபட ஏதாவது வேலையில் ஈடுபடுதல் அவசியம். அதை ஆரம்பிக்கும் முன் தங்களிடம் தயக்கம் இருப்பினும், அதை வெளிக்காட்டாமல் அதில் துணிச்சலாக ஈடுபடுங்கள்.

2. உங்கள் வேலைகளுக்கான நடவடிக்கைகளில் தொடர்ந்து ஈடுபடுங்கள். தங்களது வேலைகளை எவ்வித தயக்கமும் இன்றிமன ஒருமைப்பாட்டுடன், முந்தைய வினையையும், அதனால் உருவான தயக்கத்தையும் மனதிலிருந்து விலக்கி, இந்த உலகிற்குப் பயனுடையனவற்றை செய்ய இயலவில்லை என்பதையும் மறந்துகோல்ப், சீட்டுக்கட்டு, டென்னிஸ், நீச்சல், தொலைகாட்சி நிகழ்ச்சிகள் பார்ப்பது என மனதிற்குப் பிடித்த செயல்களில் ஈடுபடலாம் உங்களது ஒவ்வொரு செயலும், அதன் விளைவு களும் அடுத்த தலைமுறையினருக்கு வழிகாட்டியாக இருத்தல் வேண்டும் என்பதை மட்டும் மனதில் நிறுத்திக் கொள்ளுங்கள்.

3. இளைய தலைமுறையினருக்கு வழிகாட்டியாக இருங்கள். நீங்கள் ஒரு தச்சனாக, ஆசிரியராக, சுகாதார ஊழியராக, தோட்டக்காரராக, வணிக நிர்வாகியாக என எதுவாக இருந்தாலும் உங்கள் அனுபவங்கள் விலைமதிப்பற்றவை என்பதை உணர்ந்தால் உங்களைப் பின்பற்றுவோருக்கு நீங்கள் உதவ முடியும். பழங்குடி சமூகங்களில் உள்ள முதியவர்கள் பாரம்பரியமாக தங்கள் ஞானத்திற்காக கௌரவிக்கப்படுகின்றனர். உங்களை முன்னோராக கருதுவதன் மூலம் செழிப்பான வாழ்க்கைக்கு வேண்டி ஒவ்வொரு வேலை, மற்றும் செயல் ஆகியவற்றில் வாழ்வியல் பொருளாதாரம் பற்றி இளைஞர்களுக்கு நீங்கள் கற்பிக்கலாம்.

4. ஓய்வு பெற்றவர் தன்னுடைய ஓய்வூதியப் பணத்தைச் சந்தையில் முதலீடு செய்வதற்கு முன் அதனை பற்றிய முழுவிபரத்தையும் அறிந்த பின்னரே முதலீடு செய்யவேண்டும். உங்கள் ஓய்வூதிய நிதிகளும், பரஸ்பர மற்றும் பிற முதலீடுகளும் பொது நலனுக்காகச் சேவை செய்வதற்கும், சுற்றுச்சூழலின் நிலையான மறுசீரமைப் பிற்கும், சமூக ரீதியிலான உலகத்தை உருவாக்குவதற்கும் அர்ப்பணிக்கப்பட வேண்டும், நீங்கள் பங்கு வைத்திருக்கும் நிதிகள் மற்றும் நிறுவனங்களில் இலாபகரமானவராக இருக்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள் இதுவே வாழ்வியல் பொருளாதாரம் உருவாக்கப்படுவதில் பங்கேற்க வேண்டும் என்பதாகும்.

5. அரசு, அரசியல் மற்றும் பெருநிறுவன கொள்கையை பாதிக்கும் பரப்புரைகளில் பங்கேற்கவும் அல்லது உருவாக்கவும். நுகர்வோர் பாதுகாப்பு இயக்கங்களில் சேரவும் அல்லது ஜனநாயக வழிவகையில் முழு பங்கேற்பாளராக உங்களை வழிநடத்தும் பாதையைத் தேர்வு செய்யவும்.

6. உங்களது அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளுங்கள். அதிலும் குறிப்பாக இளைய தலைமுறையினரிடம் உங்கள் வாழ்க்கை மற்றும் இன்றைய உலகின் வளர்ச்சியைப் பற்றியும் சொல்லுங்கள். அது எப்படி வேலை செய்தது ?, எங்கே தோல்வியடைந்தது ?, சகிப்புத்தன்மையுள்ள சமுதாயங்களை உருவாக்கவும், அது அனைத்து உயிர்களையும் கௌரவிக்கவும் இப்போது என்ன செய்ய வேண்டும்? போன்றவற்றை எல்லாம் எடுத்துச் செல்லுங்கள்.

கல்வி கற்கும் இளம் தலைமுறையினருக்கும், ஓய்வு பெற்றவர் களுக்கும் இடைப்பட்ட நடுத்தர வயதுடைய மக்கள் செய்யவேண்டிய ஒன்பது காரியங்கள் :

1. நமது சமுதாயத்திலும், உலகத்திலும் நடக்கும் நிகழ்வுகளை மிகுந்த விழிப்புணர்வுடன் அணுகுங்கள். அவற்றை அதன் அடித்தளத்திலிருந்து அணுகுதல் வேண்டும். ஊடகங்கள், அரசியல்வாதிகள், நிறுவனங்கள், அரசுகள் என யாருமே உங்களைத் தவறாகக் கையாளுவதற்கு அனுமதிக்காதீர்கள்.

2. உங்களது தகவல் தொடர்புத் திறனை மேம்படுத்திக் கொள்ளுங்கள். அதன் மூலம் உண்மை நிலவரம் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தி உங்களைச் சுற்றியுள்ளவர்களுக்கு உதவிடுங்கள். முழு விவரங்கள் அறிந்து கொள்வது நமது கோட்பாடுகளைக் கூறுவதற்கோ அல்லது அதன் தரப்பு நியாயத்தை எடுத்துரைப் பதற்கோ அல்ல. தங்களுக்கு தெரியாதா............? என்பதை காட்டிலும் தங்களுக்குத் தெரியுமா............? என்பதே மிகச் சிறந்த மாற்றத்தை ஏற்படுத்தும். மேலும், மக்களின் ஆர்வம் மற்றும் படைப்பாற்றல் ஆகியவற்றைத் தூண்டும் கேள்விகளைக் கேட்டுக்கொண்டே இருக்க வேண்டும் என்பதையும் நினைவில் வையுங்கள். அதுதான் தங்களது சொந்தக் கருத்துகள் மற்றும் தகவல்களை மக்களிடையே கொண்டு சேர்ப்பதைக் காட்டிலும் ஆக்கப்பூர்வமானதாக இருக்கும். இதற்காக இயன்றளவு தகவல் தொடர்பு ஊடகங்களைப் பயன்படுத்திக்கொண்டு பேசவும், எழுதவும், மின்னஞ்சல் அனுப்பவும், குறுஞ் செய்தி அனுப்பவும், முகநூல் மற்றும் கீச்சகம்,.... ஆகியவற்றின் மூலம் 'பதிவிடவும் செய்திடுங்கள்.

3. செலவினங்களை உள்வாங்குவதும், வால் ஸ்ட்ரீட், பெரிய வங்கிகள், செல்வந்தர்கள், நிறுவனங்கள் என அனைவரும் தங்கள் நியாயமான பங்கைச் செலுத்தவும், சமூக மற்றும் சுற்றுச்சூழல் நன்மை பயக்கும் தொழில்நுட்பத்தை ஊக்கு விக்கவும் வற்புறுத்தும் வரிச் சட்டங்கள் என பொருளாதார மற்றும் வரிச் சீர்திருத்தங்களைக் கேளுங்கள். இதற்கு ஆதரவளிக்கும் வேட்பாளர்களுக்கு மட்டும் வாக்களியுங்கள். அத்தகைய சீர்திருத்தங்களைக் கடைபிடித்து, ஊக்குவிக்கின்ற தொழில் களிலிருந்து மட்டுமே பொருட்களை வாங்குங்கள். அது அந்த வேட்பாளர்களுக்கும், வணிக நிறுவனத்திற்கும் தெரியும்படி செய்யுங்கள். கடிதங்கள் மற்றும் வலைப்பதிவுகள் எழுதுங்கள். பேஸ்புக் மற்றும் ட்விட்டர் போன்ற சமூக வலைதளங்களில் அவற்றைப் பகிர்ந்திடுங்கள்.

4. வாடிக்கையாளர் இயக்கங்கள், இலாபநோகமற்ற மற்றும் அரசுசாரா அமைப்பில் இணையலாம். இவ்வமைப்புகள் சமுக அக்கறையுடன் தொழிலை ஊக்கப்படுத்தக் கூடியது.

இவை தங்களது தேவைகளுக்காக 99.99% யாரையும் அணுகுவதில்லை . 0.01% மட்டுமே இத்தகைய மாற்றத்திற்கு உறுதுணையாக இருக்க வேண்டியும், வாக்களிக்க வேண்டியும் உள்ளூர் மற்றும் தேசிய பொறுப்பாளர்களுக்கு அழைக்கவோ, மின் அஞ்சல் அனுப்பவோ செய்கிறது.

5. நுகர்வோர் கூட்டுறவு, சமூக நிறுவனங்கள், சான்றளிக்கப்பட்ட கூட்டுறவு, உள்ளூர் பொது வங்கிகள் மற்றும் சுய தொழில் நிறுவனங்கள் போன்ற சமூகம் சார்ந்த தொழில் நிறுவனங்களுக்கு உதவியோ, ஆதரவோ அளித்திடுங்கள்.

6. மேலும் மாணவர், தொழிலாளர்களின் நியாயமான போராட்டங்களிலும், ஆர்ப்பாட்டங்களிலும் இணைந்து சமூக முன்னேற்றத் திற்காக உதவிடுங்கள். இவற்றில் தங்களது பணி நேரடியாகவோ, பண உதவி செய்வதன் மூலமாகவோ அல்லது ஊடகங்கள் மூலமாகவோ இருக்கலாம்.

7. தங்களது இனம், மதம், பொருளாதார சமுதாய படிநிலை, குடியேற்றம், பாலினம் மற்றும் பல்வேறு பிரச்சனைகள், மற்றும் வேலை தொடர்பான அனைத்து பாகுபாடுகளையும் அறிந்து அதில் விழிப்புணர்வை ஏற்படுத்துங்கள்.

8. இளைஞர்களை ஆத்ம திருப்தியுடன் சமூக ஆர்வலராகப் பங்கெடுக்க சொல்லிக் கொடுங்கள். உலகில் நடப்பதைப் பற்றியும், அதற்கேற்றவாறு மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கை பற்றியும் தகவல் கொடுத்து கல்வி கற்கும் அடிப்படையிலானது ஜனநாயகம் என்பதைப் புரிந்து கொள்ள அவர்களுக்கு உதவுங்கள்.

9. உங்களது பங்களிப்பு ஒரு பெரு நிறுவனத்திற்கோ அல்லது சொந்தத் தொழிலுக்கோ என எதுவாக இருந்தாலும் வெளிப் படையாக பேசுதல் அவசியம். உங்களது நட்பு வட்டத்தை அங்கு உருவாக்கும் பட்சத்தில் உங்களது பங்களிப்பை அனைத்து வேலைகளிலும் வெற்றிகரமாகச் செய்ய இயலும். மேலும் உங்களது வெற்றிகரமான தொழில்முறை ஆரோக்கியமான வாழ்க்கைக்கும், அமைதியான இயற்கைச் சூழலுக்கும் வித்திடும். மகிழ்ச்சியில் பங்களிப்பு, ஒற்றுமை, தொழிலாளர்களுக்கு சமநிலை மற்றும் சமுதாய பணி ஆகியவற்றிற்கு உதவும் வகையில் தங்களது பேச்சும், பங்களிப்பும் இருத்தல் அவசியம்.

பெருநிறுவனங்கள் செய்ய வேண்டிய பதினோறு காரியங்கள் (மேலும் வாடிக்கையாளர்களும் இதை வலியுறுத்தலாம்)

1. பொதுமக்கள், இயற்கை, சமூக ஒற்றுமை, நீதி அகியவற்றிற்கு சேவை செய்வதே உங்கள் நிறுவனத்தின் குறிக்கோளாக இருந்திட வேண்டும். ஆம் அவற்றைப் பெருநிறுவனங்களின் குறிப்பிட்ட சரக்குகள் மற்றும் சேவைகளுக்கு ஏற்றவாறு அமைக்க வேண்டும். அதுவே உங்கள் அனைத்து நடவடிக்கைகளுக்கும் உந்துசக்தியாக இருக்க வேண்டும். மேலும் சந்தைப் படுத்துதலுக்கான அனைத்து நடவடிக்கைகளிலும் ஒருங்கிணைக்கப்பட்ட, சக்தி வாய்ந்த அம்சமாக அது இருந்திட வேண்டும். மேலும் இந்தப் பெருநிறுவனமானது எதிர்காலம் மட்டுமல்லாது நிகழ்காலத்தையும் கருத்தில் கொள்ள வேண்டியவை என்பதை உணர வேண்டும். இதற்கு ஒத்துழைப்பவர்கள் வாடிக்கையாளர்களோ அல்லது முதலீட்டாளர்களோ,

அவர்களும் இந்த உலகை வாழ்வதற்குச் சிறந்த இடமாக மாற்றுவதில் முக்கியப் பங்காற்றுகிறார்கள்.

2. உரிமையாளர்கள் (பங்குதாரர்கள்), நிர்வாகிகள், ஊழியர்கள் மற்றும் பிற பங்குதாரர்களிடம் வரையறுக்கப்பட்ட குறிக்கோள் களைக் காட்டி நிறுவனம் நீண்டகால சிறந்த சேவையைத் தர முடியுமென்று எடுத்துக் கூறவும். நாம் மனித சமுதாயத்தில் ஒரு புதிய சகாப்தத்தில் நுழைந்துள்ளோம் என்பதை அனைத்துப் பங்குதாரர்களுக்கும் எடுத்து கூறுங்கள். அதன் மூலம் நிறுவனத்தால் நீடித்து நிலைப்பதோடு, சாதித்து நம் பொருளாதாரத்தை மாற்றம் அடையச் செய்யவும் முடியும் என்பதை எடுத்துக் கூறவும்.

3. அனைத்து பொருட்கள் மற்றும் சேவைகளுக்கான உள்ளீடு களானது தொடர்ந்து உற்பத்தி செய்யப்படுவதை உறுதிப் படுத்துங்கள். மூலப்பொருட்கள் மறுசுழற்சி மூலம் மீண்டும் உருவாக்கப்படுவதற்கான வழிகளில் உற்பத்தி செய்யப்படுகின்றன என்பதையும், அவை விலங்குகள் மற்றும் இயற்கையின் அடிப்படை உரிமைகளை மீறுவதில்லை என்பதையும் கவனியுங்கள். நிறுவனத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் பொருட்கள் எங்கிருந்து கிடைப்பதென்பதையும், எப்படி மூலப்பொருள் மறுஉற்பத்தி செய்யப்படுகிறது என்பதையும், எப்படி நிறுவனம் இயற்கையுடன் ஒத்துப் போகிறது என்பதையும் தெரியப்படுத்துங்கள்.

4. தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரம்சமனிலை பெரும்படி கொள்கைகள் வகுத்திடுங்கள். கூலி, ஊக்குவிப்புச் சம்பளம், இதர இழப்பீடுகள் என எதிலும் ஏற்றத்தாழ்வின்றி எல்லோருக்கும் சமமாக இருக்கும்படி செய்யுங்கள். பங்குதாரர், ஒப்பந்தகாரர், துணை ஒப்பந்தகாரர்மற்றும் வினியோக நிறுவனங்கள் அல்லது வெளிநாட்டு தொழிற்சாலைகளில் உள்ள வேலையாட்கள் என அனைவரும் சமமான ஊதியங்களைப் பெறுதலை உறுதி செய்ய வேண்டும். அத்தோடு அவர்கள் வேலை நிலைகளில் உயர்ந்த தரத்தை ஏற்படுத்திடுங்கள்.

5. நிறுவனத்தின் சிறந்த கூறுகளைத் தக்கவைத்துக் கொள்ள வேண்டும். நிறுவனம் வாழ்க்கைப் பொருளாதாரத்தை கருத்தில் கொள்ளவேண்டும். ஊழியர்கள் ஒரு சிறந்த நிறுவனத்திற்கே வேலை செய்ய ஆசைப்படுவார்கள். ஆக்கமும், சமுதாய பார்வையும், சுற்றுச்சூழல் விழிப்புணர்வும் உள்ளவர்களைத் தேர்ந்தெடுங்கள். எதிர்காலத் தலைமுறைக்கும், வாழும் பூமிக்கும் ஆதரவளிக்கும் முயற்சிகளில் பங்கெடுத்துக் கொள்ள அனைத்துத் தலைமுறை உறுப்பினர்களும் விரும்புவார்கள்.

6. படைப்பாற்றல், மகிழ்ச்சி என எல்லாவற்றையும் ஊக்கப்படுத்தக் கூடிய நிர்வாகத்தை அமைத்திடுங்கள். வேலை செய்யச் சொல்லுதல், கட்டுப்படுத்துதல், தலைமை என எல்லாவற்றிலும் கூட்டு முடிவுகளை ஆதரியுங்கள். ஏற்ற, இறக்கமற்ற மேலாண்மையே எந்த ஒரு தனி நபருக்கும் நிறுவனத்திருக்கும் சிறந்த பலனை அளிக்கும். அப்படியான மேலாண்மை அந்தந்த நிறுவனத்திற்கு ஏற்றார் போல் அமைத்திடுங்கள். நேரியல் மற்றும் பாரம்பரிய மேலாண்மைக் கட்டமைப்புகள் எல்லா இடங்களிலும் பொருந்தாது.

7. பெரும்பாலும் வேலையாட்கள் மற்றும் அந்தச் சமுகத்தில் முதலீடு செய்யுங்கள். மாறாகப் பங்குகளை வாங்கி வீண் செய்ய வேண்டாம். அது வால் ஸ்ட்ரீட்டுக்கு மட்டுமே உதவும். நிறுவனத்தின் உள் நடவடிக்கைகளில் முதலீடு செய்யுங்கள். அதாவது ஊழியரின் இரகசியத்தன்மை மற்றும் தகவலைப் பாதுகாப்பதற்காகவும், தரவுப் பாதுகாப்பு முறைகளை

புதுப்பிப்பதற்கும், உங்கள் நிறுவன விநியோக அல்லது சந்தைப்படுத்தல் சங்கிலிக்கு பங்களிப்பு செய்யக்கூடிய நிதி நிறுவனங்கள், பொழுதுபோக்கு வசதிகள், பூங்காக்கள்மற்றும் பிற திட்டங்களுக்கு ஆதரவு தருவதற்கும் முதலீடு செய்யுங்கள்.

8. நல்ல விமர்சனத்தை எடுத்துக் கொள்ளுங்கள். சுற்றுச்சூழல் மற்றும் சமூகம் பற்றி ஊடகங்கள், பங்குதாரர்கள் மற்றும் இதர ஆதாரங்களில் இருந்து வரும் விமர்சனங்கள் மற்றும் பரிந்துரை களை மதித்து ஏற்றுக்கொள்ளுங்கள். பாராட்டு, விமர்சனம் என அனைத்தையும் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தி கொள்ளுங்கள். ஆழமான மதிப்பீடுகள், முறையான விமர்சனம் என அனைத்தையும் வரவேற்க வேண்டும். அதுவே நிறுவனத்தின் வளர்ச்சிக்கு உதவும்.

9. ஊழியர்களில் பன்முகத்தன்மை இருத்தல் அவசியம் அதை நிறுவனம் ஊக்குவிக்க வேண்டும். அனைத்து பங்குதாரர் நிறுவனங்களும், வினியோகதாரர்களும் அதையே செய்தால் அங்கீகரிக்கவும். ஒற்றைச் சார்பின்றி ஒரு நிறுவனம் தனது பன்முகத்தன்மையோடு இருக்குமென்றால் அது நிச்சயம் வெற்றிக்கு வித்திடும்.

10. நெறிமுறை நடத்தை மற்றும் பொறுப்புணர்வு ஆகிய கலாச்சாரத்தை ஆதரியுங்கள். வெளிப்படைத்தன்மையை ஊக்குவியுங்கள். மாறாக அமைதிகாப்பவர்களையும், கண்மூடித்தனமான நேர்மையாளர்களையும் ஆதரிக்க வேண்டாம்.

11. சேவை செய்யும் பணிக்காக நிறுவனத்தின் அர்ப்பணிப்பை அனைவரிடமும் பகிர்ந்து கொள்ளுங்கள். இது ஒரு நல்ல விளம்பரக் கருவியாக மாறும். இதுநிறுவனத்தின் சுய-ஆர்வத்தை முன்னேற்றுவதற்கு ஊக்குவிப்பதோடு மற்றவர்களையும் இதையே செய்யத் தூண்டும்.

தொழில் முனைவோர் செய்ய வேண்டிய ஐந்து காரியங்கள்:

1. உங்கள் மனதை பின்பற்றுங்கள். உங்கள் உணர்வுகளை நிறைவேற்றும் முயற்சியைத் தேர்வு செய்யுங்கள். உங்கள் சிறந்த திறமைகளைப் பயன்படுத்துங்கள். நிபுணர்கள், பெற்றோர், ஆசிரியர்கள் அல்லது உங்களைப் பற்றி நன்கு அறிந்து யாராயினும் அவர்களுக்குச் செவி சாய்க்க வேண்டாம். எதைக் கண்டும் அஞ்ச வேண்டாம். உங்களின் தொழிலை மேம்படுத்த உதுவுமேயானால் மட்டும் அவைகளை எடுத்து கொள்ளுங்கள். புகழ் உங்களைத் தேடி வரும்.

2. எந்த ஒரு தொழிலும் எவ்வளவு முந்திச் செய்கிறீர்களோ அவ்வளவு நல்லது. இங்கு முக்கியமான ஒன்று இன்று சாதித்த பலர் அவர்களின் முதல் முயற்சியில் வென்றதல்ல. எனவே மென்மேலும் கற்றுக் கொண்டு முன்னேறுங்கள். உங்கள் இலக்குகளை நோக்கிச் செல்லுங்கள்.

3. உங்களை ஆதரிக்கும் சமூகங்கள் மற்றும் வலைப்பின்னல்கள் மற்றும் முழுமையான உலகக் கண்ணோட்டத்தைக் கொண்டவர் களை இணைத்துக் கொள்ளுங்கள் (B Corps, benefit corps, social venture networks, for-profitnot-for-profitpartnerships). உங்களை ஊக்குவிக்கவும், பார்வையை விசாலப்படுத்தவும், ஊழியர்கள் தேர்வு, சந்தைப்படுத்துதல் போன்றவைகளுக்கு இவற்றைப் பயன் படுத்திக் கொள்ளுங்கள். தொழில் முனைவோர் வளர்ச்சியானது கல்லூரித் தோழர்கள்,

நண்பர்கள் மற்றும் குடும்பத்தினர் பார்க்கும்போது தங்கள் விருப்பங்களைத் தொடர் அது ஊக்கப்படுத்தும்.

4. எதிர்காலத் திட்டமிடலுடன் கூடிய நிறுவனமாக விளங்க வேண்டும். ஒரு நிலையான வியாபாரத்திற்கான அணுகுமுறை உங்கள் திட்டத்தில் இருத்தல் வேண்டும். அது மற்றவர்களுக்கும் உந்துதலாய் அமையும். நல்ல திறமையான ஆட்களைத் தக்கவைத்துக் கொள்ள வேண்டும். உங்களின் தயாரிப்பு மற்றும் சேவைகள், உங்கள் வளங்கள் ஆகியவற்றையும் தக்கவைத்துக் கொள்ளுங்கள். சமுகத்தில் குறைந்து போன வளங்களை நன்கொடைகளாக வழங்குங்கள்.

5. நீங்கள் ஒரு நிலையான நிறுவனத்தை நடத்தும் பொழுது மேலே குறிப்பிடப்பட்ட பதினோரு குறிப்புகளைப் பின்பற்றவும்.

## 2004 முதல் 2015 வரையில் பொருளாதார அடியாளாகச் செயல்பட்டதை ஆவணப்படுத்துதல்

ஒரு பொருளாதார அடியாளின் வாக்குமூலம் முதல் பாகம் வெளியிடப்பட்ட ஆண்டு முதல் இன்று வரை பொருளாதார அடியாட்கள் முறையின் இலக்கு மற்றும் அது அடைந்திட்ட இடம் ஆகியவற்றைக் கால வரையிட்டு ஆவணப்படுத்துவதே இந்த அத்தியாயத்தின் நோக்கம். பின்வரும் பட்டியல்கள் பொதுநல அமைப்புகள், அரசு நிறுவனங்கள், கசிந்த ஆவணங்கள், இரகசிய ஆவணங்கள், இதழியல் விசாரணைகள் ஆகியவற்றின் மூலம் பெறப்பட்டது. அவற்றுள் சில பொருளாதார அடியாட்களின் குறிப்பிட்ட நடவடிக்கைகளில் கவனம் செலுத்துவதாக உள்ளது; மற்றவை பல்வேறு நிறுவனங்களின் முறையான நடவடிக்கைகளை ஆவணப் படுத்துவதாக உள்ளது. விரிவான தகவலைத் தருவது இதன் நோக்கமல்ல மாறாக உலகப் பொருளாதாரத்தின் ஒவ்வொரு அம்சங்களிலும் பொருளாதார அடியாட்கள் முறையானது எந்த அளவிற்கு ஊடுருவியுள்ளது என்பதை எடுத்துக்காட்டவே இந்தப் பட்டியல் தயாரிக்கப்பட்டுள்ளது.

கட்டுரைகள் மற்றும் அறிக்கைகளிலிருந்து நேரடியாகவும் அவற்றின் உள்ளடக்கத்திலிருந்து தொகுத்தும் வழங்கியிருக்கிறேன். முக்கியமானவற்றை அடிக்கோடிட்டும் காட்டியிருக்கிறேன். மற்றபடி தகவல்கள் கிடைக்கப்பெற்ற ஆதாரங்களை ஆய்வு செய்யும் முயற்சியில் ஈடுபடவில்லை. ஆகவே கீழே கொடுக்கப்பட்டுள்ள கருத்துகள், பகுப்பாய்வுகள் மற்றும் முடிவுகள் ஆகியவை என்னுடையது அல்ல என்றும் அதன் ஆசிரியர்கள், பதிப்பகத்தார்கள், இணையப்பக்கங்கள் ஆகியவற்றிற்கே சொந்தமானது என்றும் தெரிவித்துக் கொள்வதோடு முடிவுகளை உங்களிடமே விட்டு விடுகின்றேன்.

**2004**

"இணைக்கப்பட்ட நிபந்தனையுடன் ஒரு நாடு கொடையாகப் பெரும் பண உதவி கடன்வாங்கும் நாட்டின் மதிப்பை 25 முதல் 40 சதவீதம் வரை குறைத்துவிடும்" என்று அனைத்துப்

பத்திரிக்கை சேவைக்கான செய்தி நிறுவனம் வெளியிட்டதுபோல் கட்டமைக்கப் பட்ட உதவியானது 'நாடுகளின் குரல்வளையை நெரித்துக் கொண்டிருக்கிறது" என்று ஐக்கிய நாடுகள் சபையின் ஆய்வு வாதிடுகிறது. ஏனென்றால் பணக்கார நாடுகளிடமிருந்து போட்டியில்லா இறக்குமதி விலையை ஏற்றுக்கொள்ள அவர்களை நிரபந்திக்கிறது என்று ஆப்பிரிக்கப் பொருளாதாரத்தின் ஐக்கிய நாடுகள் ஆய்வு சொல்கிறது...... 'உதவியாகத் தரும் ஒவ்வொரு டாலரிலும் 80 சென்டுகள் திரும்பத் தங்கள் நாட்டுக்கே வருமாறு பார்த்துக்கொள்ளும் அமெரிக்கா' என்று 200 க்கும் மேற்பட்ட அடிமட்ட அரசு சாரா அமைப்புகளின் கூட்டணியான 50 ஆண்டுகள் போதும் என்ற அமைப்பின் தலைமை இயக்குனரான சோக்கி சோரோகிசேகு சொல்கிறார்.

www.ipsnews.net/2004/07/development-tied-aid-strangling-nations says-un

வளர்ச்சியில் உரிமைகள் மற்றும் பொறுப்புடைமைகள் (RAID) அமைப்பு ஒரு அறிக்கையை வெளியிட்டது. அது ஐக்கிய நாடுகள் முன்பு வெளியிட்டிருந்த தொடர் அறிக்கைகளைப் பின்பற்றியதாக இருந்தது. காங்கோ ஜனநாயகக் குடியரசில் உள்ள தொழில், வளங்களைச் சுரண்டல் மற்றும் மோதல் ஆகியவற்றிற்கு இடையேயான தொடர்புகளை அது ஆவணப்படுத்தியது. "விடை தெரியாத கேள்விகள்: நிறுவனங்கள், மோதல்கள் மற்றும் காங்கோ ஜனநாயகக் குடியரசு' என்ற தலைப்பில் வந்திருந்த ரெய்டின் அறிக்கை வங்கித் துறையை ஆராய்கின்ற பிரிவையும் உள்ளடக்கியது. அது பெல்கோலைஸ் வங்கியின் கட்டுப்பாட்டில் இருந்த MIBAவின் (அரசு நடத்துகின்ற வைரச் சுரங்க நிறுவனம், நிதி அனைத்தும் காங்கோ அரசு ஆயுதங்கள் வாங்குவது உட்பட சில பரிமாற்றங்களுக்குப் பயன்படுத்தப்பட்டது என்ற ஐக்கிய நாடுகளின் குற்றச்சாட்டினை (மற்ற குற்றங்களுக்கு இடையே) மேற்கோளிடுகிறது.

www.raid&uk.org/sites/default/files/unanswered-qq.pdf

ஐக்கிய நாடுகள் அறிக்கை: daccess-dds-ny.un.org/doc/UNDOC/GEN/N03/567/36/IMG/ N0356736.pdf

ஐக்கிய நாடுகள் சபையின் பத்திரிகை அறிக்கை: www.un.org/apps/news/story.asp?NewsID=8706

குளோபல் ஜஸ்டிஸ் நவ் பத்திரிக்கை ((முன்பு உலக முன்னேற்ற இயக்கம் என்றழைக்கப்பட்டது) "சாம்பியா: கடன் வழங்குவதற்கான கண்டனம் - சர்வதேச நாணய நிதியமும், உலக வங்கியும் எவ்வாறு வளர்ச்சியைக் குறைத்தது" என்ற தலைப்பில் ஒரு அறிக்கை வெளியிட்டது. சாம்பியாவில் சர்வதேச நாணய நிதியமும், உலக வங்கியும் கொண்ட பங்கெடுப்பு ஜனநாயகத்துக்கு விரோதமானது, தோல்வியுற்றது, நியாயமற்றது என்பதைத் தெளிவாக விளக்குகிறது. மேலும் கடந்த இருபது வருடங்களாக அவற்றின் தலையீடும் சாம்பியாவின் கடன் நெருக்கடியில் அதிகரித்துள்ளதாக ஆதாரங்களோடு தெரிவிப்பதோடு, கடனிலிருந்து விடுவிப்பதற்கு பதிலாக மேலும் கடனில் சிக்க வைத்தது என்கிறது."

www.globaljustice.org.uk/sites/default/files/files/resources/ zambia01042004.pdf

**2005**

அமெரிக்க வேலை வாய்ப்பில் நடந்த மிகப்பெரிய ஊழல் என்ற நூலில் (சான் ஃபிரான்சிஸ்கோ - பெர்ரெட் கோலர், 2005) கிரேக் லே ராய் அவர்கள் வேலை வாய்ப்பு' என்ற பெயரில் 50 பில்லியன் டாலர்கள் ஒரே வருடத்தில் ஊழல் நடந்திருக்கிறது என்றும் ஒரு வேலைக்கு 100000 டாலர்கள் வரை வேலைவாய்ப்பை உருவாக்கித் தருவதற்காகப் பெறப்படும் வரிவிலக்கு மானியங்களைப் பெறவே பெருநிறுவனங்கள் ஊழல் செய்திருக்கிறார்கள்" என்றும் வெளியிட்டார். பின்னாளில் மீண்டும் லே ராய் அவர்களின் நிறுவனமான குட் ஜாப்ஸ் "மிகப்பெரிய ஒப்பந்தங்கள்" என்ற பெயரில் முதலில் ஒரு அறிக்கை வெளியிட்டது. 'உள்ளூர் மற்றும் அரசு மானியங்கள் என அனைத்தும் சேர்த்து ஒவ்வொரு நிறுவனமும் 75 மில்லியன் டாலர்கள் வரை மொத்தம் 240 பெருநிறுவனங்கள் சேர்த்து கிட்டத்தட்ட 64 பில்லியன் டாலர்கள்" இந்த மாபெரும் ஊழலில் ஈடுபட்டதாக எடுத்துரைத்தது. தொழில் நிறுவனங்களையும் வேலைகளையும் ஈர்ப்பதற்காகவும், தக்கவைத்துக் கொள்வதற்காகவும் இந்த மானியங்கள் உருவாக்கப்பட்டது. ஆனால் ஒரு வேலைக்கு 456,000 டாலர்கள் என்கின்ற அளவிற்கு சட்டப்படி நடக்கும் ஊழலாக மாறிப் போனது. இந்த ஒப்பந்தங்கள் அனைத்தும் இன்று பிரபலமாக இருக்கும் பொருளாதார அடியாட்களால் ஏற்படுத்தித் தரப்பட்டது.

"முதலீட்டை எதிர்நோக்கியுள்ள சமூகத்திற்கும், புதிய வசதிகளை இடம்பெறச் செய்ய முடிவெடுக்கும் நிறுவனங்களுக்கும் இடைப் பட்ட தவிர்க்க முடியாத இடைத் தரகர்களாக விளங்குபவர்களே" இந்தத் தள ஆலோசகர்களாக விளங்கும் பொருளாதார அடியாட்கள். இறுதியில் கிடைக்கப்பெறும் மானியத் தொகையில் இத்தகைய தள் ஆலோசகர்களுக்கு 30 சதவிகிதம் சம்பளமாகவும் வழங்கப்படும். அரசையும், உள்ளூர் அதிகார அமைப்பையும் பெருநிறுவனங்களின் வேலைகள் மூலமாகவும், வரிகள் மூலமாகவும் பெறுகிற தொகையைக் காட்டிலும் அதிகமாக கிடைக்கும் என்று வலியுறுத்தி நம்ப வைக்கவே இந்தப் பொருளாதார அடியாட்களுக்கு அநியாயமாக ஊக்கத்தொகை வழங்கப்படுகிறது.

www.greatamericanjobsscam.com

www.goodjobsfirst.org/megadeals

www.goodjobsfirst.org/corporate-subsidy-watch/site-location-con sultants

அனைவருக்கும் ஒரே அளவு: சர்வதேச நாணய நிதியம் மற்றும் உலக வங்கியின் வறுமை ஒழிப்பு உத்திகள் பற்றிய ஆய்வு என்ற தலைப்பில் குளோபல் ஜஸ்டிஸ் நவ் ஒரு அறிக்கை வெளியிட்டது. பொருளாதார முன்னேற்றம் அடைகின்ற நாடுகளில் உலக வங்கியும், சர்வதேச நாணய நிதியமும் வலியுறுத்திய கட்டமைப்பைச் சீரமைக்க வேண்டும்" என்ற கோரிக்கைக்கு எழுந்த பரவலான விமர்சனங்களைத் தொடர்ந்து உலக வங்கியானது உள்ளூர் உரிமைத்துவத்தை ஊக்குவிக்க வறுமை ஒழிப்பு உத்திக்கான ஆவணங்கள் என்ற புதிய அணுகுமுறையை அறிவித்தது. மேலும் குளோபல் ஜஸ்டின் நவ்வின் அறிக்கை இதுபோன்ற ஐம்பது ஆவணங்களைப் பகுப்பாய்வு செய்து முந்தைய கட்டமைப்பு மறுசீரமைப்புத் திட்டங்களின் தீங்கு விளைவிக்கும் கொள்கைகளைப் போலவேதான் இதுவும் உள்ளது என்ற உண்மையை வெளியிட்டது.

www.globaljustice.org.uk/sites/default/files/files/resources/ onesizeforeall01092005.pdf

**2006**

பொருளாதாரத் துறைப் பேராசிரியரும், உலக வங்கியின் முன்னாள் பொருளாதார ஆய்வு வல்லுனருமான வில்லியம் ஈஸ்டர்லி வெள்ளை மனிதனின் சுமை: மற்றவர்களுக்கு உதவி செய்ய முற்பட்ட மேற்குலக நாடுகள் ஏன் சிறிய அளவு நன்மைகளையும், நிறைய கேடுகளையும் மட்டுமே செய்தது (நியூ யார்க், பெங்குவின் பதிப்பகம், 2006) என்ற நூலை வெளியிட்டார். இந்த நூலைப் பற்றி அமெரிக்க நூலக சங்கத்தில் பிரைஸ் க்ரிஸ்ட்டென்சன் வெளியிட்ட விமர்சனம் ஒன்று பின்வருமாறு கூறுகிறது: "அதுபோன்ற திட்டங்கள் பச்சிளம் குழந்தைகள் மரணத்தைக் குறைப்பது போன்ற சில நடவடிக்கைகளில் வென்றிருக்கிறது என்பதை அவர் ஏற்றுக்கொண்டாலும்

http://williameasterly.org/books/the-white-mans-burden

215 மில்லியன் டாலர்களைக் கடனாகவும், மானியங்களாகவும் எத்தியோப்பிய சுகாதார சேவைகள் திட்டத்திற்கு வழங்கிட உலக வங்கி ஒப்புதல் அளித்தது. 2009 இல் இந்த நிதியுதவி 540 மில்லியன் டாலர்கள் கூடுதலாக அதிகரிக்கப்பட்டது. ஹபிங்க்டன் போஸ்டின் 2015 இல் வெளிவந்த கட்டுரை மற்றும் சர்வதேச புலனாய்வுப் பத்திரிகையாளர்களின் கூட்டமைப்பு ஆகியவற்றில் அறிவிக்கப் பட்டதுபோல் பத்து மில்லியன் டாலர்கள் உலக வங்கி நிதியிலிருந்து எத்தியோப்பியாவின் கட்டாய கிராமப்புறக் குடியமர்வு முயற்சியை ஆதரிப்பதற்குத் திருப்பிவிடப்பட்டு அச்சுறுத்தல், வன்முறை மற்றும் கற்பழிப்பு ஆகியவற்றின் மூலம் செயலாக்கப்பட்டது. இங்கே மரணத்திற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்: எத்தியோப்பியாவின் காம்பெல்லா பகுதியில் கட்டாய வெளியேற்றம் மற்றும் கிராமப்புறக் குடியமர்வு' என்ற மனித உரிமைக் கண்காணிப்பு வெளியிட்ட 2012 அறிக்கையின்படி இது தெளிவாகிறது.

http://projects.huffingtonpost.com/worldbank-evicted-abandoned/ new-evidence-ties-worldbank-to-human-rights-abuse-ethiopia

www.hrw.org/sites/default/files/reports/ethiopia0 112 webwcover 0.pdf

**2007**

ஹபிங்க்டன் போஸ்ட் மற்றும் சர்வதேச புலனாய்வுப் பத்திரிகையாளர்களின் கூட்டமைப்பு ஆகியவற்றில் 2015 இல் வெளிவந்த கட்டுரையின்படி கென்யாவின் செரங்கினி மலைப் பகுதிகளில் உலக வங்கி நிதியுதவி செய்யப்பட்ட திட்டம் ஆயிரக்கணக்கான செங்வர் பழங்குடியின மக்களைக் கட்டாய ஆக்கிரமிப்பிற்கு இட்டுச் செல்கிறது. "உலக வங்கியின் நிதி செங்வர்களை ஆபத்தில் கொண்டுபோய் விட்டது. ஏனென்றால் ஆயிரக்கணக்கானவர்களைப் பாதுகாக்கப்பட்ட எல்லைப் பகுதிக்குள் விட்டுக் காடுகளைப் பாதுகாப்பதாக இருந்ததால் அந்தத் திட்டம் செரங்கினி மலைப் பகுதிகளை அழித்தது" என்றும் "அதன் மூலம் கென்யா அதிகாரிகளுக்கு அந்தப் பழங்குடியின மக்களை வெளியேற்றுவதற்கான ஒரு பயிற்சியாகவும் அமைந்தது. மேலும் பெரிய அளவிலான மக்கள் வெளியேற்றத்திற்குத் தேவையான உபகரணங்களை வழங்கவும் கென்யா வனச் சரகத்திற்கு உலக வங்கியின் நிதியே பயன்பட்டது' என்றும் செங்வர் மக்களுக்கான வழக்கறிஞர் கூறுகிறார். _ 1979 இல் ரொமேனியாவிடமிருந்து ஜாம்பியா பெற்ற கடனுக்காக 15.5 மில்லியன் டாலர்களை

டோனேகல் இன்டர்நேசனல் என்ற வல்லூறு நிதி நிறுவனத்திற்குத் திருப்பித் தர ஜாம்பியாவிடம் வற்புறுத்தப்பட்டது ஜாம்பியா. 1999 இல் அதை வெறும் 3.2 மில்லியன் டாலர்கள் கொடுத்து டோனேகல் நிறுவனம் அதை ரொமேனியாவிடமிருந்து வாங்கிக் கொண்டது. மேலும் 55 மில்லியன் டாலர்கள் வழங்க வேண்டுமென்று டோநேகல் வற்புறுத்தி வந்தது. http://news.bbc.co.uk/2/hi/business/6589287.stm

**2008**

நவீன காலப் பொருளாதார அடியாட்களின் பன்முகத் தன்மையையும், முதலாளித்துவம் ஏற்படுத்தும் பேரழிவிற்கான விழைவுகளையும் பன்னிரெண்டு மாறுபட்ட ஆசிரியர்கள் ஆராய்ந்து எழுதிய பேரரசுகள் போன்ற பழமையான ஒரு விளையாட்டு (சான் பிரான்சிஸ்கோ : பெர்ரெட் கோலர், 2008) என்ற நூலைத் தொகுத்தவர் ஸ்டீவன் ஹியாத்.

www.bkconection.com/books/title/a-game-as-old-as-empire

பொருளாதார அடியாட்கள் சர்வதேச அளவில் நிதி நெருக்கடியை ஏற்படுத்தினர். குறைந்த பிணையுள்ள கடன்களைக் கொடுத்ததில் பெற்ற அனுபவமாக 2008, செப்டம்பர் 16 இல் அமெரிக்காவின் மிகப்பெரிய நிதி நிறுவனங்களால் ஏற்பட்ட தோல்விகள் உலகப் பொருளாதார நெருக்கடி, ஐரோப்பிய வங்கிகளின் தோல்விகள் மற்றும் உலக அளவிலான பங்குச் சந்தை இறக்கம் ஆகிய நிலைகளில் கொண்டு தள்ளியது . இதுபோன்ற காரணிகளே உலக அளவிலான நெருக்கடி நிலைக்குக் காரணமாக அமைந்தது.

www.bloomberg.com/bw/stories/2008-10-10/stock-market-crash-un derstanding-the-panicbusinessweek-business-news-stock-market and-financial-advice

குறிப்பிடத்தக்க வளர்ச்சிப் பின்னடைவுகளைச் சந்தித்திருந்ததோடு மேலும் சரிவை நோக்கியே இருந்தது. பல விவகாரங்களில் நிதியத்தின் மறு சுழற்சிக் கொள்கைகள் பொருளாதார வளர்ச்சி குறித்த அபரிமிதமான நம்பிக்கையைக் கொண்டதாக இருந்தது. உதாரணமாக அதில் 26 நாடுகளில் மறு ஆய்வு செய்தபோது முந்தைய உள்நாட்டு உற்பத்தியைக் காட்டிலும் மூன்று சதவிகிதமும், மூன்று நாடுகளில் 7 சதவிகிதமும் சரிந்திருந்தது. பெரும்பாலும் அவை மேலும் சரிவை நோக்கியே இருந்தது.

www.cepr.net/documents/publications/imf-2009-10.pdf

குள்ளநரிகள் முன்பைக் காட்டிலும் துடிப்புடன் இருக்கிறார்கள். ஹான்டுராஸ் அதிபர் மேனுவேல் ஜெலேயா பதவியிலிருந்தபோது சிஐஏ ஆதரவுடன் சில சதி நடந்ததாக சில குற்றச்சாட்டு எழுந்தது. சதி நடந்ததாகக் கூறப்பட்ட சில நாட்களிலேயே நியூ யார்க் டைம்ஸ் பத்திரிகை சிஐஏ வின் தலையீடை மறுத்தது. இரண்டு ஆண்டு களுக்குப் பிறகு ஹான்டுராசின் முன்னாள் கலாச்சாரத் துறை அமைச்சர் ரொடோல்ஃபோ பாஸ்டர் ஃபாஸ்கியுள் அமெரிக்காவின் தலையீடு இருந்ததை விக்கிலீக்ஸ் ஆவணங்களைச் சாட்சியாகக் கொண்டு டெமாக்ரசி நவ் பத்திரிக்கையில் வெளியிட்டார்.

www.nytimes.com/2009/06/30/world/americas/30hounduras.html

www.democracynow.org/2011/6/1/former-honduran-minister-us-un doubtedly-played

www.democracynow.org/2015/7/28/clinton-the-coup- amid-pro tests-in

தி கார்டியன் பத்திரிகை பெர்க்லேஸ் வங்கியில் கசிந்த ஆவணங்களை வெளியிட்டது. 'பெர்க்லேசின் வடிவமைக்கப்பட்ட முதலீட்டுச் சந்தைப் பிரிவால் விரிவுபடுத்தப்பட்ட சர்வதேச வரி ஏய்ப்பிற்கான எண்ணற்ற திட்டங்களை" அது வெளியிட்டது. அந்த ஆவணங்களின்படி 'பெர்க்லேஸ் வரி ஏய்ப்பு செய்வதற்கு பல்வேறு நீதி பரிபாலனைகளுக்கு உட்பட்ட தனது வாடிக்கையாளர்களைத் திட்டமிட்டு வழிநடத்தியது. அன்று இரவே கார்டியன் பத்திரிக்கை தனது இணையதளத்திலிருந்து இந்தத் தகவல்களை நீக்கிட வேண்டும் என்று நீதிமன்றத் தடையாணை வாங்கியது பெர்க்லேஸ். கசிந்த ஆவணங்களின் மூலத்தைப் பெற்ற விக்கிலீக்ஸ் அதை வெளியிட்டு 'உண்மையை விளக்கியது.

குறிப்பிடத்தக்க வளர்ச்சிப் பின்னடைவுகளைச் சந்தித்திருந்ததோடு மேலும் சரிவை நோக்கியே இருந்தது. பல விவகாரங்களில் நிதியத்தின் மறு சுழற்சிக் கொள்கைகள் பொருளாதார வளர்ச்சி குறித்த அபரிமிதமான நம்பிக்கையைக் கொண்டதாக இருந்தது. உதாரணமாக அதில் 26 நாடுகளில் மறு ஆய்வு செய்தபோது முந்தைய உள்நாட்டு உற்பத்தியைக் காட்டிலும் மூன்று சதவிகிதமும், மூன்று நாடுகளில் 7 சதவிகிதமும் சரிந்திருந்தது. பெரும்பாலும் அவை மேலும் சரிவை நோக்கியே இருந்தது.

www.cepr.net/documents/publications/imf-2009-10.pdf

குள்ளநரிகள் முன்பைக் காட்டிலும் துடிப்புடன் இருக்கிறார்கள். ஹான்டுராஸ் அதிபர் மேனுவேல் ஜெலேயா பதவியிலிருந்தபோது சிஐஏ ஆதரவுடன் சில சதி நடந்ததாக சில குற்றச்சாட்டு எழுந்தது. சதி நடந்ததாகக் கூறப்பட்ட சில நாட்களிலேயே நியூ யார்க் டைம்ஸ் பத்திரிகை சிஐஏ வின் தலையீடை மறுத்தது. இரண்டு ஆண்டு களுக்குப் பிறகு ஹான்டுராசின் முன்னாள் கலாச்சாரத் துறை அமைச்சர் ரொடோல்ஃபோ பாஸ்டர் ஃபாஸ்கியுள் அமெரிக்காவின் தலையீடு இருந்ததை விக்கிலீக்ஸ் ஆவணங்களைச் சாட்சியாகக் கொண்டு டெமாக்ரசி நவ் பத்திரிக்கையில் வெளியிட்டார்.

www.nytimes.com/2009/06/30/world/americas/30hounduras.html www.democracynow.org/2011/6/1/former-honduran-minister-us-un doubtedly-played www.democracynow.org/2015/7/28/clinton-the-coup- amid-pro tests-in

தி கார்டியன் பத்திரிகை பெர்க்லேஸ் வங்கியில் கசிந்த ஆவணங்களை வெளியிட்டது. 'பெர்க்லேசின் வடிவமைக்கப்பட்ட முதலீட்டுச் சந்தைப் பிரிவால் விரிவுபடுத்தப்பட்ட சர்வதேச வரி ஏய்ப்பிற்கான எண்ணற்ற திட்டங்களை" அது வெளியிட்டது. அந்த ஆவணங்களின்படி 'பெர்க்லேஸ் வரி ஏய்ப்பு செய்வதற்கு பல்வேறு நீதி பரிபாலனைகளுக்கு உட்பட்ட தனது வாடிக்கையாளர்களைத் திட்டமிட்டு வழிநடத்தியது. அன்று இரவே கார்டியன் பத்திரிக்கை தனது இணையதளத்திலிருந்து இந்தத் தகவல்களை நீக்கிட வேண்டும் என்று நீதிமன்றத் தடையாணை வாங்கியது பெர்க்லேஸ். கசிந்த ஆவணங்களின் மூலத்தைப் பெற்ற விக்கிலீக்ஸ் அதை வெளியிட்டு 'உண்மையை விளக்கியது.

கார்டியனில் வெளிவந்த ஒரி ஆவணம் வளர்ந்து வரும் பொருளாதாரங்களை சர்வதேச நாணய நிதியம் அநியாயமாகப் படுகொலை செய்வதை விளக்கியது. லத்வியாவிற்கு எதிரான சர்வதேச நாணய நிதியத்தின் நடவடிக்கைகள்: "மார்ச் மாதத்தில் சர்வதேச நாணய நிதியத்திலிருந்து வெளிவரவிருந்த 200 மில்லியன் யூரோக்களை தனது நிதிநிலை அறிக்கையில் போதுமான கட்டுப் பாடுகளைக் கொண்டிராததால் லத்வியா நழுவவிட்டது. பத்திரிக்கை அறிக்கைகளின்படி இந்த ஆண்டு உள்நாட்டு உற்பத்தியில் 7% பற்றாக்குறையோடு நிதி நிலை அறிக்கை தாக்கல் செய்ய அரசு விரும்பியது. மேலும் சர்வதேச நாணய நிதியம் 5% பற்றாக்குறையை விரும்பியது. லத்வியா தனது நிதிநிலையில் 40 % சதவிகிதத்தை வெட்டியது. சர்வதேச நாணய நிதியத்தின் இலக்கினை அடைய சில பள்ளிகள் மற்றும் மருத்துவமனைகளை மூடத் திட்டமிட்டதால் போராட்டங்களை எதிர்கொண்டது லத்வியா".

www.theguardian.com/commentisfree/cifamerica/2009/may/13/imf us-congress-aid

**2010**

ஈராக் மற்றும் ஆ.ஃப்கான் போர் தொடர்பாக விக்கிலீக்ஸ் எண்ணற்ற ஆவணங்களையும், கோப்புகளையும் வெளியிட்டது. தொகுப்புகள் அனைத்தும் 'போர் பதிவுகள்" என்றழைக்கப்பட்டது. Alternate.org இணையதளத்தில் தொகுத்துத் தரப்பட்டுள்ளது போல் "இந்த ஆப்கான் போர்ப் பதிவுகளும் ஈராக் பதிவுகளைப் போலவே மிகவும் செயல் வடிவம் பெற்றதாகவே இருந்தது. தூதரகத் தகவல் ஆவணங்களின் சமீபத்திய விக்கிலீக்ஸ் வெளியீடு அனைத்திற்கும் மேலாக அமெரிக்கா செயல்படுத்திய போர்முறை அமெரிக்க மக்களின் மிகப்பெரிய மோசடியாகக் குறிப்பிடப்பட்டது. குறிப்பாக 1) அமெரிக்காவால் ஏற்பட்ட எண்ணற்ற பொதுமக்கள் மரணம் 2) ஜனநாயக ஆப்கான் அரசை ஏற்படுத்திட தீவிரவாதத்திற்கு எதிரான யுக்தியைத் தொடர்வதான் அதன் கோரிக்கை ஆகியவற்றில் சொல்லப் பட்ட பொய்கள். அமெரிக்காவின் நிலையான செயல்கிளையானது தொடர்ந்து அமெரிக்க மக்களிடையே எவ்வாறு பொய் சொல்லி வருகிறது என்று அதிகாரப் பூர்வ அமெரிக்க ஆவணங்கள் வெளியிட்டது என்பதை டைம்ஸ் மற்றும் கார்டியன் பத்திரிக்கைகளின் தகவல்கள் விளக்குகிறது".

www.alternet.org/story/149393/WikiLeaks%27-most-terrifying revelation%3A_just_how much_our_government_lies_to_us

குடியாட்சித் தேர்தல் ஆணையத்தின் முடிவில் அமெரிக்க உச்ச நீதிமன்றம் பெருநிறுவன செலவினங்களுக்கான தடை அரசியலமைப்பிற்கு விரோதமானது என்று முடிவெடுத்தது. அதன்படி தனிப்பட்ட செலவுகள் கூட்டாட்சித் தேர்தல்களில் வரைமுறைக்கு உட்படுத்தப் பட்டது அல்ல என்றும் ஆதரவளிக்கப்பட வேட்பாளரிடமிருந்து தனிப் பட்ட முறையில் வருகிறவரையில் பெருநிறுவனங்கள் மற்ற குழுக்களுக்கு வரைமுறையற்ற தொகையைக் கொடுக்கலாம் என்று முடிவானது.

www.cnn.com/2012/02/15/opinion/wertheimer-super-pacs

பெரும்பசிக்கான பரிசுச் சீட்டு: வங்கிகளின் யூகம் எவ்வாறு உணவுப் பற்றாக்குறையை ஏற்படுத்துகிறது? என்ற தலைப்பில் 'உலக நீதி இன்று பத்திரிக்கை மற்றொரு ஆவணத்தை வெளியிட்டது. "2007-2008 காலகட்டத்தில் உலகின் பெரும்பாலான நகரங்களில் இலட்சக்

கணக்காணோர் பசியிலும், உணவுப் போராட்டத்திலும் ஆட்பட்டிருந்தபோது ஏற்பட்ட வியக்கத்தக்க வகையிலான விலைவாசி உயர்வை"அந்த அறிக்கை ஆய்வு செய்தது. மேலும் இந்த நெருக்கடி நிதி ஆலோசகர்களால் எவ்வாறு வளர்க்கப்பட்டது என்பதையும் காட்டியது. உணவுப் பொருட்களுக்கான தொடர் யூகங்கள் உலகம் முழுவதும் வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழ்ந்து வந்த மக்களால் வாங்க முடியாத விலைவாசி உயர்வை அடைந்தது. அதிலும் குறிப்பாக உணவுப் பொருட்கள் இறக்குமதியை அதிகம் நம்பியிருக்கும் வளரும் நாடுகளில்.

www.globaljustice.org.uk/sites/default/files/files/resources/hunger lottery-report-6.10.pdf

ப்ரோ பப்ளிகா அமைப்பு வால் ஸ்ட்ரீட்டில் உள்ள பணக்காரர்களிடம் ஒரு விசாரணையைத் துவங்கியது (அது 2015 வரை நடந்தது) அது பில்லியன்களில் அறுவடை செய்திட மிகவும் சிக்கலான அடமானக் கருவிகளை அதிகப்படுத்திடுவதை எவ்வாறு வால்ஸ்ட்ரீ தனக்கு ஆதாயமாக எடுத்துக் கொள்கிறது என்பதை ஆராய்ந்தது. ஏப்ரல் 2014 இல் வெளியான அதன் சமீபத்திய கட்டுரை ஒன்று முன்னாள் வங்கி முதலீட்டாளர் கரீம் செராஜெல்டின் ஒப்புதல்களை ஆய்வு செய்தது. "தனிப்பட்ட வங்கி முதலீட்டாளர் சிறை சென்றது வரை மனிதனால் உண்டாக்கப்படுகிற மிகப்பெரிய பொருளாதாரப் பேரழிவு - அதாவது நிதி நிறுவனங்களின் இரண்டாம் நிலைப் பெரு நிறுவனத் தொகுப்பிலிருந்து ஒருவர் ஏகப்பட்ட முறை தள்ளப்பட்டது ஏன்?" என்பதை அறிந்துகொள்ள முயற்சி செய்தது.

www.propublica.org/series/the-wall-street-monkey-machine

'www.propublica.org/article/the-rise-of-corporate-impunity

பெரும் எண்ணெய் நிறுவனகளால் வழங்கப்படும் அமெரிக்க அரசு என்ற தலைப்பிட்டு மதர் ஜோன்ஸ் பத்திரிக்கை வெளியிட்ட கட்டுரை பெரிய எண்ணெய் நிறுவனங்களை நீண்டகாலமாக அப்படியே பின்பற்றிச் செல்லும் அமெரிக்க அரசை ஆவணப் படுத்தியது. இந்தக் கட்டுரை "எண்ணெய் நிறுவனங்கள் தங்களது சொந்த சட்ட திட்டங்களை எழுதிக் கொள்வதும், அதிகப்படியான மேற்பார்வை செய்வதும் மட்டுமில்லை என்றும் எரிசக்திக் கொள்கை மற்றும் அதற்கான சட்டங்களையும் வகுப்பது ஆகிய செயல்களில் ஈடுபடுகிறது" போன்ற எண்ணற்ற ஆதாரங்களை வழங்குகிறது.

www.motherjones.com/mojo/2010/06/us-government-brought-you big-oil

வல்லூறு நிதியங்கள் கடனைத் திரும்பப் பெறுவதற்காகத் தொடுக்கப்பட்ட வழக்கில் நாட்பட்ட வளர்ச்சிக்கான தொகையை லைபீரியாவிடம் இருந்து திருடியது. அதே ஆண்டு லைபீரியா 4.6 பில்லியன் டாலர்கள் சர்வதேச நாணய நிதியம் மற்றும் உலக வங்கியிடமிருந்து கடன் தொகைக்கான நிவாரணமாகப் பெற்றது. வல்லூறு நிதியங்களாகப் பார்க்கப்பட்ட ஹம்சா முதலீடும், வால் ஸ்ட்ரீட் முதலீடும் 1978 இல் அமெரிக்க இரசாயண வங்கியிடமிருந்து 6.5 மில்லியன் டாலர்கள் கடனாகப் பெற்றகாரணத்திற்காக லைபீரியா மீது வழக்குப் போட்டது. வழக்குப் போட்ட காரணத்தினால் அந்தக் கடன் தொகை 2010இல் 43 மில்லியன் டாலர்களாக உயர்ந்தது. இறுதியில் லைபீரியா மொத்த தொகையில் 3 சதவிகிதத்தை மட்டுமே திருப்பிச் செலுத்துவதாக ஒப்புதல் அளித்தது.

www.bbc.com/news/world-africa-11819276

**2011**

யூரோடெட் பத்திரிக்கை வெளியிட்ட அறிக்கையில் கூடுதல் உதவியைப் பெறுவதற்கான நுட்பமான நுகர்வோர் கொள்முதல் முறையைக் கண்டறிந்து, ஆண்டுதோறும் 69 மில்லியன் டாலர்கள் செலவு என்று மதிப்பீடு செய்கின்றனர். வெளிநாட்டு வழங்குநர் களிடமிருந்து மேம்பாட்டுத் திட்டங்களுக்காக சரக்குகள் மற்றும் சேவைகளைக் கொள்முதல் செய்வதற்கான மொத்த உத்தியோகபூர்வ அபிவிருத்தி உதவி 50 சதவீதத்திற்கும் அதிகமானதாகும். 'நன்கொடை பெரும் நாடுகளிலிருந்துதான் அனைத்து மூலப் பொருட்களும் வாங்கப்பட வேண்டும் என்ற நிபந்தனையே கொள்முதல் செய்வதற்கான முக்கியமான செயல் வடிவமாக முன்வைக்கப்படுகிறது. அதன்படியே ஏராளமான உதவிகளைப் பெறுகிறது. 2001 ல் OECD இல் (பொருளாதார ஒத்துழைப்பு மற்றும் மேம்பாட்டுக்கான அமைப்பு) முதல் உடன்படிக்கைகள் கையெழுத்திடப்பட்டிருந்த போதிலும் த. 20 சதவிகித இருதரப்பு உதவி முறையாக இணைக்கப்பட்டுள்ளது. நிதியளிக்கும் திட்டங்களில் 15 முதல் 40 சதவிகித அதிக செலவு உள்ளதாகக் காட்டப்படுகிறது. மேலும், உண்மையில் இருதரப்பும் முறைகேடான ஒப்பந்தங்கள் மூலம் பெரும் உதவி பெரும்பாலும் நன்கொடை பெரும் நிறுவனங்களுக்குச் செல்கின்றன. மூன்றில் இரண்டு பங்கு OECD நாடுகளில் இருந்து நிறுவனங்களுக்கு வழங்கப்படுகிறது.

www.theguardian.com/global-development/2011/sep/07/aid-ben efits-donor-countries-companies

http://eurodad.org/files/pdf/5284d26056f24.pdf

விக்கிலீக்ஸ் பெட்ரோ கரிபே கோப்புகளை வெளியிட்டது. அது "ஹைத்தியின் மக்களுக்கு பெரும் நலன்களைக் கொண்டு வருவது போல் காட்டிப் அமெரிக்கா பெருமுயற்சி எடுத்தும் தோல்வியடைந்ததால் வெனிசுலா எண்ணெய் ஒப்பந்தத்தை முறித்துக் கொண்டது" என்று கூறுகிறது.

www.thenation.com/article/161056/petrocaribe-files

ஹைத்தியில் அமெரிக்கா மற்றும் சர்வதேச நன்கொடை யாளர்கள் ஒரு மோசமான ஜனாதிபதி தேர்தலை முன்னோக்கித் தள்ளியதை விக்கிலீக்ஸால் வெளியிடப்பட்ட ஒரு அறிக்கை காட்டுகின்றன.

www.thenation.com/article/161216/WikiLeaks-haiti-cable-depicts fraudulent-haiti-clection

முன்னாள் அபிவிருத்தித் தொழிலாளியும் பாலஸ்தீனத்தின் ஆலோசகராகவும் இருந்த காலில் நாக்லே "உலகமயமாக்கப்பட்ட பாலஸ்தீனம் தி நேசனல் செல்லவுட் ஆப் எ ஹோம்லேண்ட்' என்ற தலைப்பில் ஒரு புத்தகத்தை வெளியிட்டார் எவிங் டவுன்ஷிப், என் ஜெ: ரெட் சீ பிரஸ், 2011). அமேசான்.காம் கொடுத்த விவரிப்பின்படி 'ஆக்கிரமிப்பின் கீழ் பாலஸ்தீனத்திற்கு உதவி செய்யத் திட்டம் நிறைவேற்றுவதற்கு கோரிக்கை முன்வைக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது

Www.amazon.com/Globalized-Palestine-National-Sell-out-Home land/dp/1569023557

குளோபல் ஜஸ்டிஸ் நவ் இப்பொழுது பிளவுற்ற சந்தை என்ற தலைப்பில் ஒரு அறிக்கையை வெளியிட்டது. அது நிதியச் சந்தை விதிமுறைகள் மற்றொரு உலக உணவு நெருக்கடியைத் தடுக்க எப்படி உதவும் என்றும் யூக வர்த்தகத்தைத் தூண்டிவிட்டு, முதலீட்டாளர் களுக்கான மற்றொரு சொத்து வகுப்புக்குள் மாற்றியமைத்து, விவசாய சந்தைகளில் செயல்திறன் மிக்க செயல்பாட்டை சிதைத்து குறைமதிப்பிற்கு உட்படுத்துவது எப்படி என்றும் கூறுகிறது. மேலும் நிதிச் சந்தைகளில் ஏற்படும் மாற்றங்கள், உணவு விலைகளில் மாற்றங்கள் மற்றும் உலகின் மிகவும் ஏழ்மையாக உள்ள மக்களிடம் ஏற்படுத்தும் பேரழிவுத் தாக்கத்தை எவ்வாறு மாற்றுவது என்பதையும் காட்டுகிறது.

'சூதாட்டக்காரர்களால் நிதி நெருக்கடி ஏற்படுகிறதா? என்று எக்கனாமிஸ்ட் பத்திரிக்கையின் தலைப்பிச் செய்தியில் கேட்கப் படுகிறது காகித நடவடிக்கை, கட்டுப்பாடு, அபாயகரமான கடன்கள், என அனைத்துத் தவறான பிணை எடுப்புகளுக்கும் இடையே ஒரு வலுவான தொடர்பு நிலவுகிறது என கண்டுபிடிக்கப் படுகிறது. பொருளாதார வல்லுனர்கள் விவரித்துள்ளபடி, வங்கிகள் ஒழுங்கு படுத்தப்பட்டதில் பலவீனமான விதிகளுக்கு அழுத்தம் கொடுத்ததோடு தவறான அறிவுரை வழங்கப்பட்ட அனைவருக்கும் அனுமதி அளித்தது. சர்வதேச நாணய நிதியத்தின் பொருளாதார வல்லுநர்கள், கடனளிப்பவர்கள் என அனைவரும் மிகவும் ஆபத்தான கடன்களை ஏற்படுத்திவிட முனைந்தனர் என்று கண்டனர். மேலும் உயர்ந்த வட்டி விகிதங்களைக் கொண்டிருந்தன என்றும் அவர்கள் கண்டனர். கடைசியாக, வாஷிங்டனிற்கும் பிணை எடுக்கும் நிறுவனங்களுக்கும் இடையே இணைப்பு இருப்பதாகக் கணிக்கப்படுகிறது.

http://business.time.com/2011/05/26/did-lobbying-cause-the-finan cial-crisis/print

www.nber.org/papers/w/17076

கான்கோவின் ஜனநாயக குடியரசானது அமெரிக்க ரெல்டல் ஃபண்டிற்கு சட்டவிரோதமாகப் பெற்ற 100 மில்லியன் டாலர்கள் கடனைத் திருப்பி செலுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஊள ஹெமிஸ்ஸ்பியர் நாட்டிற்கு எதிராக ஜெர்சி தீவுகளில் ஒரு நீதிமன்றத்தில் வழக்கு பதியப் பட்டது. நீதிமன்றமும் 3 மில்லியன் டாலர் கடனுக்கு 100 மில்லியன் திருப்பிச் செலுத்த உத்தரவிட்டது.

http://cadtm.org/FG-Hemisphere-Vulture-fund-S

www.bbc.com/news/business-18894874

www.jubileeusa.org/vulturefunds/vulture-fund-country-studies.html

சூரிச்சில் உள்ள சுவிஸ் ஃபெடரல் இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னாலஜிஸில் சிக்கலான அமைப்பு கோட்பாட்டாளர்களின் குழுவானது 147 மிகப்பெரிய சர்வதேச நிறுவனங்களின் உலகளாவிய செயல்பாட்டு வருவாயில் 40 சதவீதத்தைக் கட்டுப்படுத்துகிறது. இவற்றில் பெரும்பாலானவை நிதி நிறுவனங்கள் ஆகும். ஆய்வின் படி. விஞ்ஞானிகள் பொருளாதார சக்தியின் வரைபடத்தை ஒரு 'வளைகுடா' என்று விவரிக்கிறார்கள்;

www.newscientist.com/article/mg21228354.500-revealed-the captialist-network-that-runs-the-world.html#.VYzjhqYyFIj

http://arxiv.org/PS_cache/arxiv/pdf/1107/1107.5728v2.pdf

**2012**

எண்ணெய்க் கிணறுகள், ஆற்றல் கடற் மற்றும் உயர் நிதி கார்னிவோர்கள் (2012) ஆகியவற்றின் நோக்கத்தில் எண்ணெய் தொழில், வங்கிக் கைத்தொழில்கள் மற்றும் அரசாங்க நிறுவனங் களுக்கிடையிலான உறவுகளைப் பற்றிப் புலனாய்வு பத்திரிகையாளர் கிரெக் பாலஸ்ட் ஒரு அறிக்கை வெளியிட்டார். அது வளைகுடா எண்ணெய் கசிவு, எக்ஸான் வால்டெஸ் போன்ற சுற்றுச்சூழல் பேரழிவுகள், மற்றும் டாட்டீட்ஸ்க் மற்றும் டோரி கேன்யன் போன்ற அறியப்பட்ட நிகழ்வுகளுக்குக் காரணமாக இருந்த சர்வதேச நாணய நிதியம், உலக வங்கி, உலக வணிக அமைப்பு மற்றும் மத்திய வங்கிகளை பெரிய எண்ணெய் நிறுவனங்களைக் காக்கும் பொம்மைகள் என்று கண்டனம் செய்கிறது.

www.gregpalast.com/vulturespicnic

வால் ஸ்ட்ரீட் ஆக்கிரமிப்பின் ஒரு ஆண்டு நிறைவை தொடர்ந்து ப்ளூம்பெர்க் 2010 ல், நாட்டின் 93 சதவிகிதமான பொருளாதார வளர்ச்சியை அமெரிக்க குடும்பங்களின் 1 சதவிகிதம் பேர் மட்டுமே கைப்பற்றி விட்டதாக ஒரு மார்க்கெட்டிங் பத்திரிகை எழுதியது. அதன்பிறகுகலிபோர்னியா பல்கலைக்கழகத்தின் பெர்க்கலேஸ் பொருளாதார நிபுணர் உள் வருவாய் சேவைத் தரவுகளை ஆய்வு செய்தார்.

www.bloomberg.com/news/articles/2012-10-02/top-1-got-93-of-in come-growth-as-rich-poor-gap-widened

'பெருநிறுவன முதலாளித்துவம் கட்டுப்பாடு மற்றும் செல்வாக்கை மற்றொரு முறையாகக் கருதுகிறது என்றும் சர்வதேச சுகாதார அமைப்பானது கட்டமைப்புச் சீர்திருத்தங்கள், மற்றும் உடல்நலம், கல்வி, குழந்தைப் பராமரிப்பு மற்றும் மேம்பாடு ஆகியவற்றிற்கு பொதுநலச் செலவினங்களைக் குறைப்பதற்காக கட்டாயப்படுத்தியதோடு எல்லாவற்றையும் தனியார்மயமாக்குதல் என்ற முனைப்பில் உள்ளதாக இந்திய அரசியல் ஆர்வலர் அருந்ததி ராய் கூறுகிறார்.

www.outlookindia.com/article/captialism-a-ghost-story/280234

2003 ம் ஆண்டு வரை இலாப விகிதங்கள் தாராளமயமாக்கல்' வட்டி விகிதங்களைக் கையாள பெர்க்கலேஸ், யூபிஎஸ் மற்றும் ஸ்காட்லாந்து ராயல் வங்கி ஆகியன மேற்கொண்ட நடவடிக்கைகளை ஒரு அறிக்கை வெளிப்படுத்துகிறது. 2015 ல், அவற்றை சிவில் வழக்குகளுக்கு அம்பலப்படுத்தி உலகளாவிய நிதியியல் முறையில் நம்பிக்கையைத் தூண்டிவிடுகின்றன. குறைந்தபட்சம் 1991 ஆம் ஆண்டு முதல் தாராளமயமாக்கல் விகிதங்கள் தவறாகப் பிரயோகித் திருக்கலாம்" என்று மோர்கன் ஸ்டான்லி என்றொரு முன்னாள் வர்த்தகர் கூறுகிறார்.

www.cfr.org/united-kingdom/understanding-libor-scandal/p28729

